உ

ஓம்.

தத் சத் ப்ரஹ்மணேநம:

# நித்தியாநித்தியவஸ்து விவேகம்.

இது

ஸ்ரீமத். ஆத்துமாநந்த சுவாமியவர்களால்
இயற்றப்பெற்று

மதுரை தேவாரபாராயணம்
அ. முத்துச்சாமிப்பிள்ளை அவர்களால்
பார்வையிடப்பெற்று

மதுரை பாரஸ்டு ரேஞ்சாபீசர்
சி. ஷண்முகக்குமாருப்பிள்ளையவர்கள்
பொருளுதவியால்

மதுரை
மீனலோசனி அச்சியந்திரசாலையிற்
பதிப்பிக்கப்பெற்றது.

1927.

# அறிவிப்பு.

இப்புத்தகம் வேண்டுவோர்கள் திருநெல்வேலி ஜில்லா கோவிற்பட்டி ஸ்ரீ முத்தானந்தசுவாமி மடத்தில் நேரிலாவது, வி. பி. மூலமாயாவது கிரயத்திற்குப் பெற்றுக் கொள்ளலாம்.




உ

ஸ்ரீ சற்குருமூர்த்தி துணை.

# நித்தியாநித்திய வஸ்து விவேகம்.

## பாயிரம்.

எந்நூலுரைப்பினும் அந்நூற்குப்பாயிரமுரைத்துரைக்க எனவும், பருப்பொருட்டாய பாயிரங் கேட்டார்க்கு நுண் பொருட்டாகிய நூலினிது விளங்குமெனவும், அது கேளா விடத்துக் குன்று முட்டிய குருவிபோலும், குறிச்சிபுக்க மான்போலும் மாணுக்கன் இடர்ப்படுமெனவும் பெரியோர் கூறியிருத்தலாற் படிப்போர்க்கும், கேட்போர்க்கும் இந் நூலிலுள்ள விஷயங்கள் எளிதில் விளங்குமாறு பருப்பொரு ளாகிய பாயிரம் கூறப்படுகின்றது. பாயிரமென்னும் சொல் லிற்கு வரலாறு என்பதருத்தமாதலின் இப் பாயிரத்துள்ள பருப்பொருள்களே இந்நூல் வரும்வழி யென்பதாம்.

அஃதெவ்வாறெனில், இந்நூலானது நித்தியாநித்திய வஸ்து விவேகம் என்னும் பெயருடையது. நித்திய வஸ்து வாவது சச்சிதாநந்த வடிவப் பிரஹ்மமாகிய சேதனப்பொரு ளாம். அநித்திய வஸ்துவாவது மாயையும் அதன் காரிய வடிவ பிரபஞ்சமுமாகிய ஜடப்பொருளாம். விவேகமாவது சேதனமும் ஜடமுமாகிய அவ் விருவகை வஸ்துக்களையும் வேறு வேறு (சேதனமாத்திரத்தைச் சேதனமாகவும், ஜட மாத்திரத்தை ஜடமாகவும்) பிரித்தறிதலாம். (கலப்புறு பொருளினின்றும் புத்தியால் வேறுபடுத்துக்காண்டலாம்.) இச் சேதனத்தன்மை ஜடத் தன்மைகளிரண்டும் ஜீவ சொரூ பத்திற் கலந்திருக்கின்றன. இக்கலப்பினுலே ஜீவனுக்குப்

பந்தமுண்டா யிருக்கின்றது. அவிசாரத்தால் உண்டாகிய இப் பந்தம் அவற்றின் (சேதன ஜடங்களின்) விசாரத்தாலாகிய விவேகத்தாலன்றி வேறு வகையால் அதாவது கன்ம உபாசனைகளால் நிவிர்த்தியாகிறதில்லை. எதனுலெனில், அப் பந்தம் வாஸ்தவமாயிருந்தாற் கன்ம உபாசனைகளானிவிர்த்தியாகும். ஜீவனிடத்துள்ள பந்தம் சத்தியமன்று. கற்பிதமாம். அக் கற்பித பந்தம் மேற்கூறிய இருவகை வஸ்துக்களையும் உள்ளவாறு பிரித்துக் காண்டலாகிய விவேகஞானத்தினுலேயே நிவிர்த்தியாகின்றதென்க.

அப்படியானுல் (விவேகத்தினுலேயே பந்த நிவிர்த்தியுளதாகுமானுல்) கன்மோபாசனைகள் எதன் பொருட்டு வேதத்தில் விதிக்கப்பட்டன வெனில், நிஷ்காம கன்மோபாசனைகளாற் சுத்தி செய்யப்பட்ட சித்தத்தின் மாத்திரமே மேற்கூறிய விவேகமுதிக்கு மாதலாற் சித்தத்தைச் சுத்தி செய்தற் பொருட்டு விதிக்கப்பட்டனவென்க.

ஆனுல் அப் பந்தம் மித்தை யென்பது எதனுலறியப்படுகின்றதெனில், பந்த நிவிர்த்தியால் மோக்ஷமுளதா மென்பது சுருதி சித்தம். அந்த மோக்ஷத்தின் சொரூபமானது சர்வ துக்கநிவிர்த்தியும் பரமாநந்தவடிவப் பிரஹ்மத்தின் பிராப்தியுமா மென்று கூறப்பட்டிருக்கின்றது. சுருதியிற் கூறப்பட்டிருக்கின்ற அந் நிவிர்த்தி பிராப்தியென்னும் விசேடணங்களால் மோக்ஷத்திற்கு உள்ளதினீக்கமும் இல்லாதன் சேர்க்கையுமாகிய விகாரமுடைமையும் துவைதமுடைமையும் உளவா மென்னுஞ் சங்கையுண்டாகின்றது. இச் சங்கையால் மோக்ஷத்திற்கு முறையே அநித்தியத் தன்மையும் அத்துவைதக் கேடாகிய சித்தாந்த பங்கமுமுளவாம்,

இவை "ஈதனைத்தும் பிரஹ்மமல்லவா" "ஈண்டு நாநா அற்ப மூமில்லை" என்பன முதலிய அநேக சுருதிகட்கு விரோதமாகின்றன. சுருதிகள் விரோதங்கூறா. ஆதலாற் சுருதியநுசாரமாகிய அர்த்தத்தை யறிந்து கூறவேண்டும். அத் தன்மையாகிய அர்த்தம் யாதெனில், மோக்ஷத்தின் விசேடணமாகிய நிவிர்த்தி பிராப்திகளுக்குக் கற்பிதநிவிர்த்தி யெனவும், கற்பிதப்பிராப்தி யெனவும் பொருள் செய்யவேண்டும் என்க. அந்நிவிர்த்தி பிராப்தியென்னும் சொற்களுக்குக் கற்பித நிவிர்த்தி கற்பிதப் பிராப்தி யெனப் பொருள் செய்தல் எதன்பொருட்டெனில், ஜீவனிடத்துச் சர்வ துக்கங்களின் நிவிர்த்தியும் பரமாநந்த வடிவப் பிரஹ்மத்தின் பிராப்தியும் அநாதியாகவே சித்தித்திருக்கின்றபடியால் நித்தியமாயிருக்கின்றன. எப்போதாவதுண்டாகாமல் அநாதியாகவே சித்தித்திருக்கின்ற அந்தத்துக்கத்தின் நித்திய நிவிர்த்தியையும் பரமாநந்தவடிவப் பிரஹ்மத்தின் நித்தியப் பிராப்தியையும் தற்காலமுண்டானதுபோலக் கூறுதலாற் கற்பிதமெனக் கூறவேண்டிற்றென வறிக. அப்படியானாற் றற்கால முண்டாகாத நிவிர்த்தி பிராப்திகளைத் தற்கால முண்டானதாகக் கூறுதல் பயனற்றதாமே யெனில், பயனற்றதாகாது. அவ்வாறு கூறுவதாற் சுருதி வாக்கியங்கட்கு விரோதமாகாமையும் மோக்ஷத்திற்கு அநித்தியத் தன்மையினடைவு துவைதத் தன்மையின் அடைவுகள் உளவாகாமையுமாகிய பயனிருத்தலாலென வறிக.

அப்படியானல் அக் கற்பிதமாகிய நிவிர்த்தி பிராப்திகளின் ஞானத்தாற் சத்தியமாகிய மோக்ஷம் எவ்வாறுளதாமெனில், கற்பிதத்தினிவிர்த்தி அதிஷ்டான வடிவமாமென்னு

நியாயத்தால் முன் பிராந்தியினுற் சித்தித்திருந்த துக்க முடைமையும் பிரஹ்ம சொரூபத்தின் நீக்கமுமாகிய கற்பி தங்கள் தனது எதார்த்த சொரூப ஞானத்தால் நிவிர்த்தியா கின்றன. அக் கற்பித நிவிர்த்தி வாயிலாக முன்னமே சித்த மாயிருக்கின்ற மோக்ஷம் தற்காலமும் அடையப்பட்டது போலச் சித்திக்கின்றதென்க. இனி மேற்கூறியவைகளே விளக்கிக் காட்டப்படுகின்றன.

எவ்வாறெனில், ஜீவனுக்குச் சர்வ துக்க நிவிர்த்தி பரமாநந்த வடிவப் பிரஹ்மத்தின் பிராப்திகளின் ஞானத்தால் அதாவது தன்னைச் சர்வ துக்கங்களிலும் சம்பந்தமில்லாதவனுகவும், பரமாநந்த வடிவப் பிரஹ்ம சொரூபமாகவும் அறிதலால் மோக்ஷமுளதா மென்று சாஸ்திரங்களிற் கூறப்பட்டிருக்கின்றது. அந்தத் துக்கமின்மை வடிவ நிவிர்த்தியும், பரமாநந்த சொரூபப் பிரஹ்மமே தானுயிருத்தலாகிய பிராப்தியும் புதிதாக (த் தற்காலம்) உண்டாயினவல்ல. அநாதியாகவே சித்தித்துள்ளன. ஆகையால் அவை (துக்கமின்மையும் பிரஹ்மத்தினடைவும்) நித்தியமாம். நிவிர்த்தியுடையது நிவிர்த்தமென்றும், பிராப்தியுடையது பிராப்தமென்றும் கூறப்படுதலால் அந்த நித்திய நிவிர்த்தியையுடைய துக்கம்ஜீவனிடத்து நித்திய நிவிர்த்தமாம்(என்றுமில்லாததாம்). நித்தியப் பிராப்தியையுடைய பரமாநந்த வடிவப் பிரஹ்மத்தின் சொரூபம் நித்தியப் பிராப்தமாம். (என்றுமடையப் பட்டுள்ளதாம்) இவ்விதமாக உண்மையில் (பரமார்த்த சத்தையாக) ஜீவனுனவன் துக்கங்களின் சம்பந்தமில்லாமலும் பரமாநந்த வடிவப் பிரஹ்மமாகவு மிருக்கின்றுன். இப்படியிருக்கின்ற ஜீவனுக்கு அஞ்ஞானத்தின் கற்பித சம்பந்தத்தாற் றன்னைச் சரீரியாக (சரீரமுடையவனுக) மதிக்கின்ற

பிராந்திஞான முளதாக அப் பிராந்தி ஞானத்தால் அந்தக்கரண முதலியவற்றின் தருமங்களாகிய கர்த்திருத் தன்மை, போக்திருத் தன்மை, சுகித்தன்மை, துக்கித்தன்மை, ஜீவத்தன்மை, மனிதத்தன்மைகளின் அபிமானமும் அவ்வபிமானத்தாற் றுக்கமுடைமையும் ஈசுவரனினும் (பிரஹ்மத்தினும்) வேறாந் தன்மையும் மித்தையாக உளவாயிருக்கின்றன. இவ்வாறு ஜீவன் தன்னைப் பிறப்பிறப்பாதி சமுசார துக்கமுடையவனாகவும், பிரஹ்மத்தின் வேறாகிய ஜீவனாகவும் நிச்சயிக்கின்றான். இவ்வாறு நிச்சயிக்குங் காலத்தும் காட்டிலலைந்து பசியால் வருந்தி அப்பசிவேதனை பொறுக்கமுடியாமற் புலைப்பெண்ணினிடத்து அந்நம் யாசித்துண்ணுங்காலத்தும் தனது அரசுரிமையினின்று நீங்காதவனாய்ச் சுகமூர்த்தியாய்ச் சிம்மாசனத்தி லுட்கார்ந்திருந்த இலவணவரசன் போல யாதொரு துக்க சம்பந்தமுமில்லாமற் பரமாநந்த வடிவப் பிரஹ்ம சொரூபமாகவே யிருக்கின்றான். இக்காரணத்தினாலேதான் ஜீவனுக்குளவாகிய துக்க முடைமையும், பிரஹ்ம சொரூபத்தின் நீக்கமும் கற்பிதமென்று கூறப்பட்டன. அவை பிராந்தியினாலாகிய மித்தையாயினும் உள்ளவை போன்றிருத்தலால் அக் கற்பித துக்கமுடைமை அதன் கற்பித நிவிர்த்தியாலும், பரமாநந்த வடிவப் பிரஹ்ம சொரூபத்தின் கற்பித நீக்கம் அதன் கற்பிதப் பிராப்தியினாலுமன்றி வேறுவகை முயற்சியால் நீங்குவனவல்ல. அந்தக் கற்பித துக்க நிவிர்த்தி பரமாநந்த வடிவப் பிரஹ்ம சொரூபத்தின் கற்பிதப் பிராப்திகளின்றி மோக்ஷ முளதாகிறதில்லை. அவற்றின் நிவிர்த்தி பிராப்திகளும் தன்னைப் பரிபூரண அத்துவைதப் பிரஹ்மமென்றும் அத் தனதுசொரூபம் சச்சிதாநந்தமென்றும துக்கத்தை (அதற்குக் காரண

மாகிய தேகாதிப் பிரபஞ்சம் காரணத்தோடு பரமார்த்தமாக அசத்து ஜடதுக்க ரூபமாகவும், வியாவகாரிகத்தில் மித்தையாகவு மிருத்தலால் அதனுலுளதாகிய அத்துக்கமு) மித்தை யெனவும் வேறுவேறு பிரித்தறிதலாகிய விவேகத்தாலன்றி யுளதாகிறதில்லை. ஆகவே நித்தியாநித்திய வஸ்துக்களின் அபரோக்ஷ விவேகமாகிய ஞானத்தால் முன்னமே சித்தித்துள்ள அச் சர்வதுக்க நிவிர்த்தியும், பரமாநந்த வடிவப் பிரஹ்மத்தின் பிராப்தியும் தற்காலமு முளவாகின்றன. அந்த நிவிர்த்தி பிராப்திகளினுல் முன்னமே சித்தித்துள்ள மோக்ஷம் தற்காலமு முளதாகின்றது. இவ்விதத்தால் ஜீவன் மோக்ஷ சொரூபியாகவே யிருக்கின்ருன். அவனுக்குப் பிராந்தியினுலாகிய கற்பிதபந்தத்தின் கற்பிதநிவிர்த்தி வாயிலாக முன்னமே சித்தித்துள்ள நித்தியமாகிய மோக்ஷம் சித்தித்தல் இந்நூலிற் கூறப்படுகின்றது. எவ்வாறெனில், இந்நூலிலுள்ள பத்துப் பிரகாணங்களுள் முதலாவதாகிய உபோற்காதப் பிரகாணத்தில் குரு சீடர்களின் சுருக்கமான வரலாறும், தத்துவமஸி மகாவாக்கியார்த்த உபதேச வாயிலாக சீடனது மோக்ஷவடிவத் தன்மையும், அதைப்பற்றிய வினுவிடைகளும், அம் மோக்ஷத்திற்கு நித்தியாநித்திய வஸ்து விவேகமாகிய ஞானமே சாதனமென்பதும், அந் நித்தியாநித்திய வஸ்துக்கள் தம்முட் கலந்திருக்குந் தன்மையும், அவ் விருவகை வஸ்துக்களின் சொரூபமும் கூறப்பட்டிருக்கின்றன.

இரண்டாவதாகிய அசத்திலக்கணப் பிரகாணத்தில் பிரபஞ்சமானது இல்லையென்னு முணர்ச்சிக்கு விடயமாகின்றதென்னும் சித்தாந்தமும் அதற்கு அப்பிரபஞ்சம் இருக்கிறதென்னு முணர்ச்சிக்கு விஷயமாகிற தென்னும்

சங்கையும், அச்சங்கைக்கு இரச்சுசர்ப்ப திருஷ்டாந்தத்தால் அவ்வுணர்ச்சி பிராந்திஞான மாதலாலும், அப் பிராந்தி ஞானத்தின் விஷயமாகிய சகத்து அசத்தா மென்பதும், மண்ணுக்கு வேருகக் கடம் இல்லாமைபோல சத்து வஸ்துவிற்கு வேருகச் சகத்தில்லை யென்பதும், கடம் என்னுஞ் சொல்லிற்கு கலசவடிவம் வாச்சியப் பொருளாவதன்றி யவாச்சியமாகிய மண் பொருளாகாததுபோல பிரபஞ்சமென்னுஞ் சொல்லிற்கு வாச்சியமாகிய மலை நதி முதலியவற்றோடு கூடிய பிரபஞ்சம் பொருளாவதன்றி அவாச்சியமாகிய நித்திய வஸ்து பொருளாகாதென்னுஞ் சங்கையும், அச் சங்கைக்குக் கட மென்னுஞ் சொல்லிற்கு மண் வாச்சியமுமல்ல. அவாச்சியமுமல்ல. இலக்கியமாம். அதுபோலப் பிரபஞ்சமென்னுஞ் சொல்லிற்கு நித்திய வஸ்துவானது வாச்சியார்த்தமுமல்ல. அவாச்சியார்த்தமுமல்ல. இலக்கியார்த்தமாம் என்பதும், அவ் விலக்கியார்த்தத்தை மாத்திரம் புத்தியாற் கிரகித்தால் பொருளாக விளங்கு மென்பதும், அதனுல் அத்தியாச இலக்கணமுடைய சகத்து அசத்தென்பதும் கூறப்பட்டிருக்கின்றன.

மூன்றுவதாகிய ஜடவிலக்கணப் பிரகாணத்தில் ஜகத்து விளங்கவில்லை யென்னு முணர்ச்சிக்கு விஷயமாமென்னுஞ் சித்தாந்தமும் அப்படியல்ல. அது விளங்குகிறதென்னு முணர்ச்சிக்கு விஷயமாதலாற் கூடாதென்னுஞ் சங்கையும், அச் சங்கைக்கு சொப்பனதிருஷ்டாந்தத்தால் அவ்வுணர்ச்சி பிராந்தியென்னுஞ் சமாதானமும், அது யதார்த்த ஞான சாதனங்களாகிய சுரோத்திரேந்திரியாதிகளுக்கு விஷயமாதலாற் பிராந்தியன்றென்னுஞ் சங்கையும், அச் சங்கைக்கு

அச் சுரோத்திரேந்திரியாதிகள் பிராந்தி ஞானத்தின் சாதன மாமென்னுஞ் சமாதானமும்;ஜகத்து நித்தியவஸ்துவில் அத்தியஸ்தமென்பது தோன்ற அவ் வத்தியாஸ விலக்கணமும், அவ் வத்தியாசத்தாற் (பிராந்தியால்) விளங்கும் விளக்கமும், நித்திய வஸ்துவினிடமிருந்து அத்தியாச வாயிலாகக் கிடைத்ததன்றி ஜகத்திற்குச் சொந்தமில்லாமையா லது ஜடமாம் என்பதும் கூறப்பட்டிருக்கின்றன.

நான்காவதாகிய துக்கவிலக்கணப் பிரகாணத்தில் பிரபஞ்சப் பொருள்கள் வெறுப்பிற்கு விஷயமாதலால் துக்க ரூபமா மென்னுஞ் சித்தாந்தமும் அப்படியல்ல. அவை பிரியத்திற்கு விஷயமாவனவும், சுகத்தைக் கொடுப்பனவுமாகக் காணப்படுதலால் துக்க ரூபமெனல் கூடாதென்னுஞ் சங்கையும், அச்சங்கைக்கு அவை பிரியத்திற்கு விஷயமாவனவாகவும், சுகத்தைக் கொடுப்பனவாகவும் காணப்படுதல் பிராந்தியாம். வெறுப்பிற்கு விஷயமாகக் காணப்படுதல் எதார்த்தமா மென்னுஞ் சமாதானமும்,பிராந்தி ஞானத்தாற் பிரியத்திற்கு விஷயமாவனவாய்க் காணப்படுங் காலத்துள்ளும், அநுபவத்துக்கு முன்னும் பின்னும் துக்கமே தருமென்பதும், அனுபவ காலத்திலும் சுகவிரோதியாகிய அவ்விஷயங்கள் சுகங் கொடுக்கிறதில்லை. ஆனால் அக்காலத்தில் மாத்திரம் அவற்றினிடத் துண்டாகிற இச்சை நீங்குகிறதென்பதும், அநுபவிக்கப்படுஞ் சுகத்திற்குச் சாதனம் நிச்சல வந்தக் கரணமென்பதும், சுகம் நித்திய வஸ்துவினிடத்தே யுளதென்பதும், அச்சுகம் நிச்சல வந்தக் கரண வாயிலாக ஜீவர்களா லநுபவிக்கப்படுகின்ற தென்பதுங் கூறப்பட்டிருக்கின்றன.

ஐந்தாவதாகிய சத்திலக்கணப் பிரகாணத்தில் எந்தக் காலத்திலு மெந்த ஞானத்தாலும் பாதிக்கக் கூடாமலிருக் குந் தன்மை சத்திலக்கணமா மென்னுஞ் சித்தாந்தமும் அதைக் குறித்து கடமிருக்கிறது படமிருக்கிறது என்ப தாகப் பிரபஞ்சப் பொருள்களி லிருப்புக் காணப்படுதலா லவை சத்தா மென்னுஞ் சங்கையு மச்சங்கைக்கு ஏகமும் வியாபகமுமா யிருக்கின்ற நித்திய வஸ்துவில் அத்தியஸ்த மாகிய ஜகத்திற் காணப்படு மிருப்பு கயிற்றிற் கற்பிதமாகிய சர்ப்பத்திற் காணப்பட்ட இருப்பு அக் கயிற்றினுடையதா யிருத்தல் போல அதிஷ்டான வடிவ நித்திய வஸ்துவி னுடையதெனவும் அவ் விருப்பு பிராந்தியினலே ஜகத்திற் ரோற்றுகிற தென்பதும் நித்திய வஸ்துவே அஞ்ஞான சம் பந்தத்தால் ஜீவத்தன்மை யடைந்திருக்கிற தென்பதும், அதன் முறையும், ஜீவனுக்கு தனது விசேடவடிவம் தோற் றுமைக்குக் காரணங் கூறும் வாயிலாக மூல தூல யென் னும் இருவகை அஞ்ஞான வடிவமும், அவற்றின் ஆவரண விக்ஷேப சத்திகளின் வியாபாரங்களும், ஜீவனுக்கு சத்து வடிவத்தின் நித்தியப் பிராப்தத் தன்மை கூறும்பொருட்டு துவம்பதத்தின் வாச்சியார்த்த இலக்கியார்த்தங்களும், ஜீவே சுர சொரூபங்களும், அச்சொரூபங்களில் அதிஷ்டான பாகம் அசங்க சொப்பிரகாச நித்தியமென்பதும், அத்தியஸ்த பாகம் கற்பித சமுசாமுடைய தென்பதும் கூறப்பட்டிருக் கின்றன.

ஆறுவதாகிய சித்திலக்கணப் பிரகாணத்தில் எக்காலத் தும் அந்நியவஸ்துக்களால் விளங்குதலுங் குன்றுதலுமின்றி சுயமே விளங்குதல் சித்திலக்கணமென்னுஞ் சித்தாந்தமும்,

அதைக்குறித்து ஜகத்துப்பொருள்கள் விளங்குகிறபடியால் அவை சித்தாமென்னுஞ் சங்கையும், அச்சங்கைக்கு சூரியனது விம்பமும் பிரதிவிம்பமுமாகியவிருவகைப் பிரகாச வஸ்துக்களால் அல்லது ஒருவகைப்பிரகாசத்தால் விளங்குகின்ற ஜடமாகிய குட்டிச்சுவர்போல நித்தியவஸ்துவாகிய விம்பமும், சிதாபாசனுகிய பிரதிவிம்பமும் என்னும் இருவகைப் பிரகாச வஸ்துக்களால் அல்லது ஒருவகைப் பிரகாச வஸ்துவால் விளங்குவனவாயிருத்தலால் ஜகப்பொருள்கள் ஜடமென்பதும், ஜடமாயினும் ஜகப்பொருள்கள் தருமியாகவும் விளக்கமானது அவற்றின் தருமமாகவும் காணப்படுதலால் அத்தருமிகளின் நாசத்தாற் றருமமாகிய விளக்கத்திற்கும் நாசமுளதாதலாகிய சித்தாந்த பங்கமுண்டாமென்னும் சங்கையும், அச்சங்கைக்கு அத்தரும தருமித்தன்மைகள் அஞ்ஞானத்தால் மாறுபட்டுத்தோன்றுந் தன்மையும், அத்தரும தருமித்தன்மைகளின் உண்மை இலக்கணத்தாற் சமாதானமும், மேலும் அதைப்பற்றி வருஞ்சங்கையை வெய்யிலின் திருஷ்டாந்தத்தாற்போக்கி சோபாதிக நித்தியவஸ்துவின் இருவகைப்பிரகாசங்களால் விளங்குகின்ற ஜகத்துப்பொருள்களை அவ்விருவகைப் பிரகாசங்களினின்றும் பிரித்தால் ஜடமாமென்பதும், ஜகத்தைப்பிரகாசிப்பிக்கின்ற விருவகைப் பிரகாசங்களில் விம்பப்பிரகாசம் நித்தியமும் பிரதிவிம்பப்பிரகாசம் அநித்தியமுமாமென்பதும், இக்காரணத்தால் ஜீவன் தனது ஆபாசபாகத்தால் தன்னை அஞ்ஞனுக மதித்து அதனுல் பிறவித்துன்பத்தை யடையும்போதும் தனது விம்பசித்து வடிவகூடஸ்தனினின்றும் நீங்காமையால் அச்சொப்பிரகாச நித்திய சித்துவடிவ கூடஸ்தனது சொரூபம் அச்சீவனுல் என்றும் அடையப்பட்டிருக்கின்றதென்னும் சித்

துத் தன்மையின் நித்தியப்பிராப்தமும் கூறப்பட்டிருக்கின்றன.

ஏழாவதாகிய ஆனந்தவிலக்கணப் பிரகரணத்தில் எல்லாக்காலங்களிலும் மாறுபடாமல்மிகுந்த பிரியத்துக்கு விஷயமாவது ஆனந்தத்தின் இலக்கணமா மென்னும் சித்தாந்தமும், அதுபற்றி கடமுதலிய பிரபஞ்ச விஷயங்கள் பிரியத்திற்கு விஷயமாகக் காணப்படுதலாலவைகளிடத்தில் ஆனந்தமுளதென்னுஞ் சங்கையும், அச்சங்கைக்கு விஷயங்களிலுண்டாகு மந்தப்பிரியம் மாறுபடுதலினுலும் எல்லாக்காலத்திலும் மாறுபடாமல் மிகுந்த பிரியத்திற்கு விஷயமாவது ஆனந்தத்தின் இலக்கணமாதலாலும் மாறுபடுதலுடைய பிரியம் ஆனந்தவிலக்கண மல்லாமையாலும் அம்மாறுதலுடைய பிரியமும் ஒவ்வொரு காலங்களிற் போக்தாவாகிய நித்தியவஸ்துவிற்கு அநுகூலமாயிருத்தல்பற்றி யுண்டாகின்றமையால் வாஸ்தவத்தில் விஷயங்களில் துக்கமே யுளதென்னுஞ் சமாதானமும், நித்திய வஸ்துவினிடத்துள்ள போக்திருத்தன்மை போகத்தன்மைகளைப் பற்றிய சங்கை சமாதானங்களும் அச் சங்கை சமாதானவாயிலாக அப்போக்தா போகங்களின் சொரூபங்களு மவற்றுள் போக்தாவடிவ ஆனந்தமய ஆபாசனுக்கு பிரஹ்மானந்தாநுபூதி யுண்டெனிற் பலத்தின் சித்தியும், துவைதாபத்தியும் உண்டாமென்னுஞ் சங்கையும், அச்சங்கைக்கு சுருதிப் பிரமாணத்தால் அவையில்லாமையின் சித்தாந்தமும், பிரஹ்மானந்தமெனுஞ் சொல்லிற்கு சுருதி வாக்கியத்தால் விம்பானந்த சித்தியுண்டாதலால் அந்த விம்பானந்தம் கற்பிதனுகிய ஆபாசனுல் அநுபவிக்கப்படமாட்டாதென்னுஞ் சங்கையும், அச்சங்கைக்கு அப்பிரஹ்மானந்தம் சோபாதிகமாதலாற்

கூடுமென்னுஞ் சமாதானமும், ஆபாசனுக்குண்டாகிய ஞானம் மித்தையாம். அந்த ஞானத்தால் நிவிர்த்தியா கின்ற பந்தமும் மித்தையாதலாமென்பதும், ஆனந்த மயனு கிய ஜீவனுக்கு "ஜீவன் பரமாத்வாவிடத்தோடுகின்றான்." என் பது முதலிய சுருதிவாக்கியங்களால் நித்தியத்தன்மை கேட் கப்படுகின்றது. அத்தன்மைய ஆனந்த மயனே கற்பித னென்று கூறுதல் விரோதமாமென்னுஞ் சங்கையும், அச்சங் கைக்கு அவ்வானந்த மயனென்னுஞ் சொல்லுக்கு அருத் தங்கூறும் வாயிலாக சமாதானமும், முக்கியத்தன்மையினு லும் பாதார்த்தத்தன்மையினுலும் தத் துவம் என் னும் இரண்டு பதார்த்தங்கட்கு (ஜீவப்பிரஹ்மங்கட்கு)ச்சாமானுதி காணியத்தால் (அபின்னத்தன்மை வடிவ சம்பந்தத்தால்) உளதாகும் ஐக்கிய விலக்கணமும், அதைப்பற்றிய சங்கை சமாதானங்களும், ஆபாசன் "அவ்விடத்தைய (சுழுத்தியி லுள்ள) பிரஹ்மாநந்த மாகின்றான்" என்னும் சுருதிவாக்கி யத்திற்குப் பொருள்கூறும் வாயிலாகப் பிரதிவிம்பமும், விம் பமுமாகிய பிரஹ்மாநந்த விலக்கணங்களும், சேதனத்தின் சொரூப ஞானவிருத்தி ஞானங்களின் பேதமும், அவ்விரு வகை ஞானங்களும் முறையே அஞ்ஞானத்திற்குச் சாதக பாதகமாதலும், ஜீவன் ஜனனமரணுதி சமுசார துக்கத்தால் வருந்துங்காலத்தும் பரமாநந்த வடிவம் அவனுல் நித்தியப் பிராப்தமாயடையப்பட்டிருக்கிற தென்பதும் கூறப்பட்டி ருக்கின்றன.

எட்டாவதாகிய மஹாவாக்கியப் பிரகரணத்தில் ஜீவ னுக்குச் சமுசாரம் தோற்றும் விதமும், பின் விவேகவாயி லாக அவன் அதைப்போக்கும்பொருட்டுக் குருவைச் சரண

டைதலும், தத்துவமசி மஹாவாக்கியத்தின் சிரவணவாயிலா கத் துவம்பதார்த்த விசாரமும், பின்பு ஆசிரியரா லுபதேசிக் கப்படும் ஜீவேசுர சொரூபங்களும், அவாது ஐக்கியமும், அவ்வைக்கிய விஷயமாய் ஜீவேசுரரிடத்துள்ள பேதங்களைப் ப்ற்றிய சங்கையும், அச்சங்கைக்கு நான்குவகையாகாய சே தனங்களின் திருஷ்டாந்த தார்ஷ்டாந்தங்களும், தத் துவம் பதங்களின் வாச்சியார்த்த விலக்கியார்த்தங்களை யறிவிக் கும் வாயிலாகச் சக்தி இலக்கணைகளின் சுருக்கமான விலக் கணங்களும், விட்டுவிடாத இலக்கணையின் திருஷ்டாந்தமும், தார்ஷ்டாந்தமாகிய கூடஸ்த பிரஹ்மங்களையிலக்கணையாலறி யுமுபாயமும், அவ்விருவகைச் சேதனங்களையும் ஏகமென் றறிதற்கேதுவாகிய ஐக்கிய இலக்கணமும், அவ்விலக்கணத் தாலுண்டாகின்ற ஐக்கிய நிச்சயமும் கூறப்பட்டிருக்கின் றன.

ஒன்பதாவதாகிய துவம்பதார்த்த விவேகப்பிரகாணத் தில் துவம்பதவாச்சியார்த்தத்துள்ள பஞ்சகோசங்களின் பெயரும், சொரூபமும், அவை ஆன்மாவை மறைக்குந் தன் மையும், அப்பஞ்சகோசங்களை ஆன்மாவினின்று விவேகிக் கும் உபாயமும், அவற்றின் விவேக வாயிலாக ஆன்மாவின் அந்நுவயத்தை (இருப்பை)யும் கோசங்களின் வெதிரேகத் தை (இன்மையை)யும் அறியத்தக்க யுத்தியும், ஆநந்த மய கோச விவேக உபதேசத்தால் உத்தமாதிகாரிக்குளதாகின்ற துவம்பத விலக்கியார்த்தமாகிய கூடஸ்த சேதனவநுபூதிக் கிரமமும் கூறப்பட்டிருக்கின்றன.

பத்தாவதாகிய தற்பதார்த்தப் பிரகாணத்தில் சௌமி யனேசிருட்டிக்கு முன்னே இது (ஜகத்து)ஒரே அத்துவிதீய சத்துரூபப்பிரஹ்மமாயிருந்த தென்னும் சுருதிவாக்கியத்

தாற் சகத்திற்குக்காரணமாகக் காணப்படுகின்ற பிரஹ்மம் வாக்கு மனங்களால் அறியப்படாததாயிருத்தலால் அதன் உபாதியைக்கொண்டறியப்படுவதன்றித் தான் மாத்திரம் அறியப்படமாட்டாது. அதுபற்றி அப்பிரஹ்மத்தின் காரியமாயும் உபாதியாயுமிருக்கின்ற பூதாதி ஜகத்தின் விவேக வாயிலாக அந்தப்பிரஹ்மத்தை யறிவிக்கும்பொருட்டுப்பூதாதிஜகத்தின் சுருக்கமான சொரூபமும், ஜகத்திலுள்ள சுவகதாதிபேதவிலக்கணமும், சிருட்டிக்கு முன் ஜகத்தில்லையென்பதை யறிவித்தற்குச் சாந்தோக்கிய சுருதியிற்கூறிய "ஒருவ அத்துவிதியம்" என்னும் விசேஷணங்களால் மேற்கூறப்பட்ட மூவகைப் பேதங்களும் பிரஹ்மத்திலில்லையென்பதும், அம்மூவகைப்பேதங்களுமில்லாத பிரஹ்மமே பிரளயத்திலிருந்ததென்பதைப் பலவகை விசேஷணங்களாலறிவிக்கின்ற ஸ்மிருதிப்பிரமாணமும், அவ்வாறிருக்கின்ற வஸ்துவை அறிதற்குரிய காலமுமுபாயமும், அத்தன்மையுடைய வஸ்துவின்கண் சத்தின்வேறும் அசத்தின் வேறுமாகிய அஞ்ஞானத்தின் கற்பித இருப்பும், அவ்வஞ்ஞானமாகிய சத்தியாற் சத்துவஸ்துவின்கண் இல்லாதபூதாதி ஜகத்துக்கற்பிக்கப்படுதலும், அக்கற்பித பூதாதிஜகத்தைச் சத்துவஸ்துவினின்று வேறுபடுத்து முறையும், ஞானியின் வியவகார முதலியவற்றைப்பற்றிய சங்கை சமாதானங்களும், துவைதஜகத்தின் தோற்றத்தைப்பற்றிய சங்கை சமாதானங்களும், பின்பு துவைதஜகத்தை அநாதரஞ்செய்யும் முயற்சிபயனற்றதாமென்னும் சங்கையும், அச்சங்கைக்குச் சீவன் முத்தியும் விதேக முத்தியுமாகிய இருவகைப் பயன்களுளவென்னும் சமாதானமும், சத்தசத்துக்களின் விவேக ஞானத்தால் நாசமாகிய பிராந்தி திரும்ப உண்டாகாதென்னும் சித்தாந்தமும், இத்தற்பதார்த்த விவேக சிரவணத்தால உத்தமாதிகாரிக்குளவாகும் அபரோக்ஷ பிரஹ்மானுபூதி முதலியவற்றின் கிரமமும், அவற்றாலுளதாகின்ற கிருதகிருத்தியத் தன்மை முதலியவைகளும் கூறப்பட்டிருக்கின்றன.

---

உ

ஓம் தத்ஸத்பிரஹ்மணே நம:

இந்நூலாசிரியர் மாணுக்கர் ஹரிகேசனல்லூர்

பிரஹ்மஸ்ரீ M. ஹரிஹரையரவர்களியற்றிய

# சிறப்புப் பாயிரம்.

---

ஆசிரியப்பா.

திருமறு வகத்தனும் மருமல ரகத்தனும்
மின்னுநன் மணிமுடிப் பொன்னகர்க் கிறைவனு
மண்டரு மண்டருங் கண்டரு நுதலனே
யிக்கா சினியுறு மிக்கா சினிதற
மதியமு மத்தமுந் துதிபெறு கங்கையுந்
தங்கிய சடையு மங்கையோர் புடையு
நெற்றிக் கண்ணும் பெற்ற வூர்தியு
நீல கண்டமுங் கோலம ருப்புந்
தொளையெயிற் றரவு முழையு முடுக்கையு
மழுவுஞ் சூலமும் வழுவை யுரியு
மின்ன பலவாந் தன்னுடைக் கோலங்
காந்து கருணை சுரந்தொரு வடிவாய்த்
தோற்றின னெனவே போற்றிட யாருஞ்
சோதே சத்துக் கோரணி யென்னுங்
காலடி யூரிற் காலா யுதக்கொடிக்
காங்கையன் மகற்பெற் றோங்கவன் றனக்குப்

பிதாவின தெழிலபி தானம் வைத்தெனச்
சிவகுரு மறையவன் றவமுறு பாலனுய்த்
தனக்கவன் சங்கா னெனப்பெயர் சாற்றிட
வளர்ந்து வருநா ளுளந்து றவிலுறு
மச்சம யத்தினி லிச்சக மகிழச்
சங்கர னங்கிசந் தன்கட் சார
வயதுமூன் றினிலே வியனுல கடைந்த
பிதாவை நினைந்து சதாவ ருந்து
மனைதனைத் தேற்றித் தனைநினை போழ்தின்
வருகைசாற் றியவ டருவிடை தனைப்பெற்
றவ்விட மகல்கால் வெவ்விடம் பில்குந்
தூம்புவா லெயிற்றணைப் பாம்பவ தாரக்
கோவிந்த யோகிகண் டாவிந்த வுலக
மிவனுற் பெறுபய னெவனுற் சொலவெளி
தெனப்புகழ்ந் தாச்ரம நெறிக்குரு வாமதித்
துபதே சிக்கப் பபந்தீர் கங்கைக்
கரையிடை யுற்றவ னருள்பணி கொண்டு
பிரஹ்மசூத் திரக்கு முரியமா பாடியம்
வியாஸ முனிபார்த் தயாவென வியக்க
வியற்றிய வன்றரு வயதின் விருத்தியோ
டுலகிற் சரித்துப் பலமத மடக்கி
யத்துவை தத்தை யுத்துங் கமதுற
நிறுவியோன் பதமலர் கறையறு தனதுளப்

பீடத் திருத்திய பீடமை சச்சி
தாநந்த ரூபமுத் தாநந்த நாமன்
மொழியுப தேச வழிவரு ஞானி
தென்றியுஞ் சந்தமு மொன்றிம ணக்குங்
குன்றிடை நின்று தென்றமிழ் வளர்க்குங்
குடமுனி கருணையிற் றடவரை யிழிந்து
வருபொரு நையெனுந் திருநதி வளனு
நன்னிதி பலதரூஉங் கன்னடி யன்கால்
வளனுஞ் சோலால் வளவனும் வெள்குறச்
செல்வரு வந்துவாழ் செல்வரு பொன்முடி
மாட வரிசைகொள் சேடமை யரிகையிற்
பூசா னெனது காசறு தேசக
மடத்து மொருபுற மடத்து மொளிருவோன்
எறும்பு கடைமுத லெறும்பியெ னச்சொலூஉம்
யோனிபே தங்களார் நாமரூ பங்களாம்
பிரபஞ் சப்பொரு டிரமறு மாயா
கற்பித மாதலாற் காணு தவற்றை
யெக்கா லத்து மிக்கது மொப்பது
மின்றியே யெங்கு நின்றில கின்ப
மொன்றையே காணு முணர்வுறு பெரியோன்
முனம்பசு வாசக மெனுமம் மணியுங்
கற்பிலக் கணக்கு நற்பொழிப் புரையுஞ்
சாத்து விகர்போற் றுத்துமா நந்த

விளக்கமு மியற்றிய வளக்கறு புகழ்செறி
யாத்துமா நந்தப் பேர்த்துறி யாச்சமி
முன்னோ ருரைநூ னன்னெறி யறிந்து
முந்தைநற் பயனால் வந்தவிப் பிறவியிற்
றூந்தமை யறிந்த சாந்தர்கண் டின்புற
முத்திவி ரும்புநர்க் கொத்தசா தனமாய்த்
தனையறி வுறுவோன் றனையறி வுறுத்து
நித்தியா நித்திய வத்துவி வேகக்
கத்தியத் தமிழ்நி கழ்த்தின னதனைக்
கவ்வையார் கலிசூ ழிவ்வுல குள்ளார்
படித்த றிந்துட லெடுத்த பயனுற
வாங்கில வாட்சியிற் பாங்குறு காட்டி
லாகா ரேஞ்சருத் யோகாச் ரயமுறு
ஷண்முக குமார னுண்மதி யுடையோன்
கங்கைக் குலவான் றிங்களச் சென்னும்
வாகனத் தேற்றி யுதவினன் மாகர்க்
கமுதுவட் டித்த கமலநா பனினே.

சிறப்புப்பாயிரம் முற்றிற்று.



உ

ஸ்ரீ சற்குருமூர்த்தி துணை.

# நித்தியாநித்திய வஸ்து விவேகம்.

## மங்கலம்.

நித்தியா நித்தியப் பொருள்வி வேகமெய்
முத்திசா தனமதாம் மொழிவ னம்மொழி
யெத்திசா முகத்தினு மிருந்து தோன்றிடும்
அத்தியா நநத்தினு னருளி னல்கவே.

இதன் பொழிப்புரை—எந்தத் திக்கின்கண்ணும் இருந்து விளங்குகின்றவனாகிய யானைமுகத்தினையுடைய விநாயகப் பெருமானது திருவருளால் உண்மையாயிருக்கின்ற மோக்ஷத்தின் சாதனமாகிய நித்தியாநித்திய வஸ்து விவேகம் என்னும் நூலைச் சொல்ல ஆரம்பிக்கின்றேன். அந்நூற்குரிய நன்மொழிகளையெல்லாம் அவ்விநாயகப் பெருமான் எனது புத்திக்கு விளங்குமாறு அருள்புரிக. மொழி - சாதியொருமை.

இந்நூல் நித்தியாநித்திய வஸ்து விவேகமாதலால் இதன் இம்மங்கலச் செய்யுளிடத்தும் அவ்விவேகமே அமைந்திருக்கின்றது. எப்படியெனில், விநாயகப் பெருமானது உண்மை வடிவத்தை மாத்திரம் அத்தியாநந முதலிய நாமரூபமய கற்பிதத்தினின்றும் பாகத்தியாக விலக்கணையால் விவேகித்துப் பொருளாகக் கொள்ளவேண்டுதலா லென்க. அவ்வாறு விவேகிக்காமல் முக்கியார்த்தத்தைப் பொருளாகக்கொள்ளின் வருந் தோஷ மென்னையெனின் அதிஷ்டானபாகம் ஆபாசபாகம் இரண்டும் கலந்திருக்கின்ற முக்கியார்த்

தத்தைப் பொருளாகக் கொள்ளின் பரிச்சின்னனாகிய அத்தியாநநத்தினனுக்கு எத்திசாமுகத்தினும் இருந்து தோன்றுவை சம்பவியாதென்னும் தோஷ முளதாகும் ஆதலால் விநாயகப் பெருமானது அதிட்டானவடிவ இலக்கியார்த்தத்தை மாத்திரம் பொருளாகக்கொள்ளுமாறு அமைந்து கிடத்தலைக் கண்டுகொள்க.

## நூல்.

## க-வது உபோற்காதப் பிரகரணம்.

இந்நித்தியாநித்திய வஸ்து விவேக நூலானது குருசீட சம்வாதரூபமாக அதாவது வினாவிடை ரூபமாகச் செய்யப்படுகின்றது. ஏனெனில் அவ்வாறு செய்யப்படுதலால் நூலின்கண்ணுள்ள விஷயங்கள் படிப்போர்க்கும் கேட்போர்க்கும் எளிதிற் புலப்படுதலாகிய பிரயோசனமிருத்தலாலென்க. அதுபற்றி இந்நூலிற் கூறப்படுகின்ற குருசீடர்களும் அவர்கள் வசிப்பிடங்கள் முதலியனவும் புதியனவாகக் கற்பிக்கப்படுகின்றன.

ஸ்ரீ காஸ்மீர தேயத்தின்கண் நீர்வளம், நிலவளம், செல்வவளங்களால் முதன்மை பெற்றுயர்ந்த மாயாபுரியென்னும் நகரத்தில் விசாரசீலன் என்னும் பெயருடைய பிராஹ்மண சிகாமணியொருவன் இளமைப்பருவமுதல் கல்வி கேள்விகளாலும், ஒழுக்கத்தினாலும், குணத்தினாலும் தனக்கொத்தவரும் உயர்ந்தவரும் இலரென்று கண்டோர் யாவரும் மதிக்குமாறு வாழ்ந்துகொண்டிருந்தனன். இவ்வாறிருக்கின்ற அந்தப் பிராஹ்மணோத்தமனுக்குச் சென்ற பல பிறவிகளிற் செய்த நிஷ்காமகன்ம முதலியவற்றாற் சித்தசுத்தியுண்டாய் அச்சித்தசுத்தியால் விவேகாதி சாதனங்கள்

நான்கும் உளவாயின. அவற்றால் அவன் மோக்ஷவிருப் புடையனாய் அதனை (மோக்ஷத்தினை) அடைவிக்கத்தகுந்த ஞானாசாரியர் எங்கிருக்கின்றார்? அவரால் நான் விரும்பிய சுகத்தை யெப்பொழுதடைவேன்? என்னும் தீவிரமான இச்சையோடு தனது வீடுவிட்டு நீங்கிப் பலவிடங்களிற் றேடிக் கடைசியிற் கங்காதீரத்திற் றம்மைச் சூழ்ந்து காத் திருக்கின்ற நிர்த்தோஷர்களாகிய சீடர்களுக்கு ஞானோப தேசஞ் செய்துகொண்டு அருள்வடிவாய் விளங்குகின்ற ஞானாசாரியரைக் கண்டு இவரே நமக்குப் புகலிடமென நிச் சயித்து அவரைப் பலதரம் வலம்வந்து சாஷ்டாங்க நமஸ் காரஞ் செய்து பத்திரபுஷ்ப பலாதிகளால் அருச்சித்துப் பூசித்தனன்.

இவ்வாறு வழிபாடு செய்த அவனுடைய அடக்கம் அன்பு முதலியவற்றால் அவனுடைய பக்குவத்தை யறிந்து நீ யாவன்? இங்கு எதன் பொருட்டு வந்தாயென ஆசாரியர் கேட்க, அவ்விசாரசீலன் கூறுகின்றான். யான் விப்பிரன். ஜனனமரணாதி சமுசார துக்கத்தால் மிகவும் வருந்துகின் றேன். இத்தன்மைய துக்கியாகிய என்னை இத்துக்கத்தி னின்றும் விடுவித்து மோக்ஷவடிவ சுகம் அடைவிக்குமாறு ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி வடிவா யிங்கெழுந்தருளியிருக்கின்ற தேவரீரைச் சரணடைந்தேன். கிருபாசொரூபியாகிய தேவ ரீர் அடியேனை யாட்கொண்டு அருள்புரிக என்று விண்ணப் பித்தான். இவ்வாறு குறைகூறிய விசாரசீலனை நோக்கி ஆசாரியர் அவனது உண்மைவடிவத்தை உபதேசிக்கக்கருதி "மைந்தா! நீ மோக்ஷசொரூபியாகவே (யாதொரு துக்கசம் பந்தமுமின்றிப் பரமாநந்த வடிவப் பிரஹ்மமாகவே) யிருக்

கின்ருய். அவ்வாறிருக்கின்ற நீ துக்கத்தைப் போக்கவேண்டுமென்றும், மோக்ஷத்தை அடையவேண்டுமென்றும் நினைக்கின்ற நினைப்புப் பிராந்தியினுலுண்டாகியதாம் என்று அவனுக்குச் சாமவேதத்துள்ள மஹாவாக்கியத்தின் அர்த்தத்தை உபதேசித்தார். அவ்வாக்கியத்தைக் கேட்டுச் சீடன் வினுவுகின்ருன்.

"அடியேனை மோக்ஷாநந்த சொரூபியென்று தேவரீர் கூறிய வாக்கியம் ஈசுவரவாக்கியமாயிருக்தலால் அதனை நம்புகின்றேன்; ஆனுல் அந்த மோக்ஷத்தின் சொரூபம் இத்தன்மையதென் றறியாதவனுயிருக்கின்றேன் ஆதலால் அம்மோக்ஷத்தின் சொரூபத்தை உபதேசிக்கவேண்டும்" என்று கூறினுன்.

குரு உத்தரம்—சர்வதுக்க நிவிர்த்தியும் பரமாநந்தவடிவப் பிரஹ்மத்தின் பிராப்தியும் மோக்ஷத்தின் சொரூபமாம்.

சீடன் வினு—ஆனுல் இத்தன்மையாயுள்ள மோக்ஷத்தின் சாதனம் யாது?

கு-ம்—பிரஹ்ம ஆன்ம ஐக்கியஞானம் அம்மோக்ஷத்தின் சாதனம் என்றறிக.

சீ-ஞ—இங்குத் தேவரீர் கூறிய வாக்கியத்தால் அடியேன் மனத்திற் சந்தேகமுண்டாகின்றது. ஐயம்போலாந்தையுண்டோவெனப் பெரியோர் கூறியிருத்தலால் அச்சந்தேகத்தைப் போக்கியருளவேண்டும்.

கு-ம்— மைந்தா! உன்மனத்தில் எவ்வகைப்பட்ட சந்தேகம் உண்டாயினும் அச்சமடைந்து அதனை உன் மனத்துள்ளடக்கிக் கொள்ளவேண்டாம். அச்சமின்றி வினவு

வாயாக. அவ்வாறு வினவுவாயாயின் அச்சந்தேகத்தை யுடனே போக்கி எதார்த்தத்தை அறிவிக்கின்றோம். ஆதலால் இங்குக்கூறிய மோக்ஷ விஷயமாய் உனக்குண்டாகிய சங்கையைக் கூறுவாயென்று கூறினார்.

சீ-ஞ—சர்வதுக்க நிவிர்த்தியும் பரமாநந்த வடிவப்பிரஹ்மத்தின் பிராப்தியும் மோக்ஷத்தின் சொரூபமென்றும் அம்மோக்ஷத்திற்குச் சாதனம் பிரஹ்ம ஞானமென்றும் கூறப்பட்டன. அவ்வாறு கூறியதனால் மோக்ஷமானது ஞானமாகிய சாதனத்தாற் சாதிக்க (செய்ய)த்தக்க காரியமாகின்றது. ஆகவே தண்டசக்கராதி சாதனங்களாலாகிய கடாதி காரியங்கள் அநித்திய மாதலின் எப்படி யழிகின்றனவோ அப்படி ஞானமாகிய சாதனத்தாலாகிய காரிய வடிவமோக்ஷமும் அநித்தியமாயழியும். அஃதெப்படியெனில் மோக்ஷ சொரூபத்தில் முதலமிசமாயிருந்து அதினின்று நிவிர்த்தியாகிய (நீங்கிய) சர்வ துக்கங்களும் மீளவும் வந்தடையும். மோக்ஷத்தின் இரண்டாம் அமிசமாய் வந்தடைந்த பரமாநந்த வடிவப்பிரஹ்மம் மீளவும் நிவிர்த்தியாய் (நீங்கி) விடும். இவ்வாறாகவே முன் அஞ்ஞான காலத்திலுள்ள ஜனன மரணாதி சமுசார துக்கமே நித்தியப் பிராப்தமாம். இத்தன்மையாகிய அநர்த்தங்கள் உளவாதலைக் குறித்து அந்த மோக்ஷமானது ஞானமாகிய சாதனத்தால் உளதாதல் அல்ல. அதனால் மோக்ஷம் நித்தியமாம் என்று கூறின் யாவரும் ஞானமில்லாமலே மோக்ஷமடைவர். அடையவே மோக்ஷத்திற்குச் சாதனமாகாத அந்த ஞானத்தை மோக்ஷ சாதனமெனக் கூறிய சொல்லிற்குப் பொருளில்லாமற்போதலோடு அதனைச் சாதனத்தோடு சம்பாதித்தலாகிய

முயற்சியும் பயனற்றதாகும். இத்தன்மையாகிய சந்தேகம் அடியேனுக் குண்டாயிருக்கின்றது. இதனை நிவிர்த்தி செய்ய வேண்டும்.

கு-ம்—மைந்தா! இச்சந்தேகம் நீங்குதற்குரிய சாரமாகிய உத்தரம் கூறுகின்றோம் கேள். எப்படியெனில் இங்குக் கூறிய மோக்ஷவடிவ சர்வ துக்கநிவிர்த்தி பரமாநந்த வடிவப் பிரஹ்மத்தின் பிராப்திகள் ஞானத்தாலுண்டாயின் அநித்தியமாம். அவை ஞானத்தாலுண்டாயின வல்ல. அநாதியே சித்தித்துள்ளன. அதனால் அவை நித்தியமாம். நிவிர்த்தியுடையது நிவிர்த்தமென்றும் பிராப்தியுடையது பிராப்தமென்றும் கூறப்படுதலால் அந்த நித்தியமாகிய நிவிர்த்தியையுடைய துக்கம் நித்திய நிவிர்த்தமும் நித்தியப் பிராப்தியையுடைய பிரஹ்மம் நித்தியப்பிராப்தமுமாமென்க.

சீ-ஞ—அப்படியானால் ஞானத்தை மோக்ஷசாதனம் எனக்கூறிய வார்த்தை பொருளூற்றதாயிற்று.

கு-ம்—கடமானது தண்ட சக்ராதிகளாலுண்டாதல் பற்றி அவற்றிற்குக் கடசாதனத் தன்மை கூறப்படுதல் போல மோக்ஷமானது ஞானத்தால் உண்டாகிறதென்னும் கருத்தால் அந்த ஞானத்திற்கு மோக்ஷ சாதனத்தன்மை கூறின் அது பொருளற்றதாகும். இங்கு அக்கருத்துப் பற்றி ஞானத்திற்கு மோக்ஷ சாதனத்தன்மை கூறப்படவில்லை. மற்றியாது பற்றியெனின் அந்த நித்தியமாகிய மோக்ஷத்தை யடைதற்கு இந்த ஞானத்தைத்தவிர வேறு வழியில்லை. ஞானத்தினாலேயே மோக்ஷமடையவேண்டியிருத்தலால் அவ்வடைவிற்குச்சாதனம் என்னும் கருத்துப்பற்றி மோக்ஷசாதனத் தன்மை கூறப்படுகின்றது. ஆகை

யினாலே ஞானத்திற்குக்கூறிய மோக்ஷ சாதனத்தன்மை பொருளற்றதாமென்றும் ஞானத்தைச் சம்பாதித்தல் பயனற்றதாமென்றும் கூறிய சங்கைக்கிடமில்லை. பொருளுடைமையும் பயனுடைமையும் இருத்தலாமெனக.

சீ-ஞ—அப்படியானால் அந்த மோக்ஷ சாதனமாகிய ஞானத்தின் சொரூபம் யாது?

கு-ம்—அந்த ஞானத்தின் சொரூபம் நித்தியாநித்திய வஸ்துக்களின் விவேகம் என்றறிக.

சீ-ஞ—அந்த நித்திய வஸ்துவும் அநித்திய வஸ்துவும் யாவை?

கு-ம்—நித்திய வஸ்துவானது பிரஹ்மாபின்ன (பிரஹ்மத்திற்கு வேறாகாத) ஆத்துமாவாம். அநித்திய வஸ்துவானது மாயையும் அதன் காரியமாகிய நாமரூப வடிவ தேகாதிப்பிரபஞ்சமுமாம்.

விவேகம் என்பதன் பொருள் யாதெனில் அவற்றை (நித்தியவஸ்து அநித்திய வஸ்துக்களை) வேறுவேறு பிரித்தறிதலாம். ஆனால் நித்தியவஸ்து அநித்திய வஸ்து என்னும் இரண்டும் பெயர்களால் வேறு வேறாயிருத்தல் போலச் சொரூபத்தாலும் வேறுவேறாக இருக்கின்றனவோ எனில் ஆம். வேறுவேறாகவே யிருக்கின்றன. அப்படியானால் வேறுவேறாகிய அச்சொரூபங்கள் எவையெனில் சத்தும், சித்தும், ஆநந்தமும் நித்திய வஸ்துவின் சொரூபமும் அசத்தும், ஜடமும், துக்கமும் அநித்திய வஸ்துவின் சொரூபமுமாமெனக. அப்படியானால் பெயராலும் சொரூபத்தாலும் வேறு வேறாயிருக்கிற வஸ்துக்களை வேறுவேறு பிரித்துக் காண்டல் அயுக்தம் (யுத்திக்குப்பொருந்தாதது) அன்றோ.

எனின் பெயராலும் சொரூபத்தாலும் வேறு வேறாயினும் கலப்புற்றிருக்கின்ற பாலையும் நீரையும் வேறு வேறு பிரித்தறிதல் யுத்திக்குப் பொருந்தாததாகாமல் எவ்வாறு பொருத்தமுடையதாகின்றதோ அவ்வாறு பெயராலும் சொரூபத்தாலும் வேறுவேறாயிருப்பினும் கலப்புற்றிருக்கின்ற நித்திய வஸ்துவையும் அநித்திய வஸ்துவையும் வேறுவேறு பிரித்தறிதல் பொருத்தமுடையதே யாமென்க. ஆனால் அவ்விருவகை வஸ்துக்களையும் பிரித்தறிதலாகிய இம்முயற்சியாலுளதாகும் பிரயோஜனம் யாதெனில சர்வதுக்கநிவிர்த்தி பரமாநந்த சொரூபப் பிரஹ்மத்தின் பிராப்தி வடிவ விதேக முத்தியாகிய முக்கியப் பிரயோஜனமும் ஜீவன்முத்தியாகிய அவாந்தரப் பிரயோஜனமும் என இருவகைப் பிரயோஜனம் இருக்கின்றன.

அப்படியானல் "நித்திய வநித்தி யங்க ணிண்ணயந் தெரிவி வேகம், மத்திய விகப ரங்கள் வருபோகங் களினிராசை, சத்திய முரைக்க வேண்டுஞ் சமாதியென் றுறு கூட்டம், முத்தியை விரும்பு மிச்சை மொழிவர்சா தனமிந் நான்கே." எனக்கைவல்லிய முதலிய சாஸ்திரங்களில் ஞான சாதனங்களுளொன்றாகக் கூறியிருக்க அவ்விவேகத்தை இங்கு ஜீவன்முத்தி விதேகமுத்திகளுக்குச் சாதனமாகக்கூறுதல் விரோதமன்றோ வெனின் சாஸ்திரங்களில ஞான சாதனமாகக் கூறியது சாஸ்திர யுத்திகளால நிச்சயிக்கப்பட்ட பரோக்ஷவிவேகம். இங்கே மோக்ஷசாதனமாகக் கூறியது அபரோக்ஷ விவேகம். ஆதலால் விரோதமாகா தென்வறிக. அப்படியானாலும் அதாவது அபரோக்ஷ விவேகமானலும் அதனை மோக்ஷசாதனமெனக் கூறியது தேவரீர் கற்பிதம்

போதுமெனில், அவ்வாறு கூறியது எமது கற்பிதமன்று. பிரமாண சித்தமாம் என்றறிக. மோக்ஷசாதனமாக எங்கே கூறியிருக்கிறதெனில், ஸ்ரீ வித்தியாரணிய சுவாமிகளாற் செய்யப்பட்ட பஞ்சதசி பஞ்சபூதவிவேகத்துத் தொண்ணூற்றெட்டாவது சுலோகத்தில் "சத்தினின்றும் பிரஹ்மாண்ட முதலியவற்றினை வேறு பிரித்தலின் பயனும், அவை தோற்றுதலால் விரோத மின்மையும்" என்பது விஷயக்குறிப்பு. சுலோகார்த்தம் "பூதம் பௌதிகம் மாயை என்பனவற்றின் சமத்தன்மையாகிய மித்தியாத்துவமானது (விவேகத்திலுலேனும் தியானத்திலுலேனும்) சித்தத்திற் செவ்வையாய் நிச்சயிக்கப்படின் சத்துவஸ்து அத்துவைதமேயாம் என்னும் இப்புத்தி ஒருநாளும் விபரீதத்தை யடைகிறதில்லை" என அபரோக்ஷ விவேகசித்தியும் நூற்றிரண்டாவது சு-ம் விஷயக்குறிப்பு துவைதத்தை அநாதரஞ் செய்தலின் ஜீவன்முத்தி வடிவ பயன், "துவைதத்தின் அநாதரம் செவ்வையாக நிலைபெறுமாயின் அத்துவைதத்திற் புத்தி நிலையுடையதாகின்றது. அவ்வத்துவைத புத்தி ஸ்திரமாகவே இந்தப் புருஷன் ஜீவன்முத்த னென்று சொல்லப்படுகின்றுன்" என ஜீவன்முத்திப் பயனும், நூற்றுமூன்றுவது சு-ம் "அருச்சுன! இது பிரஹ்ம நிஷ்டையாம். இந்நிஷ்டையை யடைந்து புருஷன் பிராந்தியை யடையான். இப்பிரஹ்ம நிஷ்டையில் அந்தியகாலத்திலும் நிலைத்துப் பிரஹ்ம பாவவடிவ விதேக முத்திமய பிரஹ்ம நிர்வாணத்தை யடைகிறுன்" என விதேகமுத்திப்பயனும் கூறியிருத்தல் காண்க.

ஆனுல் கலப்புற்ற பாலையும் நீரையும் பிரித்தல் எவராலும் கூடாது. அதுபோலக் கலப்புற்றிருக்கின்ற நித்தியாநித்திய வஸ்துக்களையும் எவராலும் பிரித்தல் கூடாதெனில்,

பாலையு நீரையும் பிரித்தல் எவராலும் கூடாது எனக் கூறியது சத்தியம். ஆனாலும், அன்னப்பறவையினாற் கூடு மாறுபோல நித்தியாநித்திய வஸ்துக்களை வேறு பிரித்தறிதல் மற்றெவருக்கும் கூடாதாயினும் முமுக்ஷுவினாற் கூடுமென வறிக.

ஆனால் அவ்விருவகை வஸ்துக்களும் தம்முள் எவ்வாறு கலந்திருக்கின்றன வெனில், சச்சிதானந்த சொரூபமுடைய நித்தியவஸ்துவானது ஏகமும் வியாபகமுமாயிருத்தலால் மாயாகாரியமாகிய அசத்து ஜடதுக்கரூபமாகிய கடாதிப் பிரபஞ்சப் பொருள் எல்லாவற்றிலும் கலந்து அவற்றிற்குச் சத்தாஸ்பூர்த்தியை அதாவது இருப்பையும் விளக்கத்தையும் தருகின்றது. அஃதெவ்வாறெனில், கடம் இருக்கிறது என்று வியவகரித்தற் கேதுவாய்க் கடத்தின்கண்ணுள்ள இருப்புத்தன்மையானது நித்தியவஸ்துவினுடைய சத்து வடிவமாம். கடம் விளங்குகிறது என்று வியவகரித்தற் கேதுவாய்க் கடத்தின்கண்ணுள்ள விளக்கமானது நித்திய வஸ்துவினுடைய சித்துவடிவமாம். கடம் பிரியமாயிருக்கிறது என்று வியவகரித்தற் கேதுவாய்க் கடத்தின்கண்ணுள்ள பிரியத்தன்மையானது நித்திய வஸ்துவினுடைய ஆநந்த சொரூபமாம். இவ்வாறு பிரபஞ்சப் பொருள்கள் எல்லாவற்றிலும் நித்திய வஸ்துவானது கலந்திருத்தலைத் தெரிந்துகொள்க.

கடம் இருக்கிறது, கடம் விளங்குகிறது, கடம் பிரியமாயிருக்கிறது என்பதாக இச்சச்சிதாநந்தங்கள் பிரத்தியக்ஷமாகக் காணப்பட்ட கடத்தினுடையனவாயிருக்க இவற்றை இக்கடாதிப் பிரபஞ்சத்தின் வேறாகிய நித்தியவஸ்துவி

னுடையனவாகக் காணப்படாத வொரு வஸ்துவைக் கற்பித்தல் "மலடிமகனொருவ னிருக்கின்றான்" என்று கூறும் கற்பனைபோலத் தோன்றுகிறதேயெனில்,

கடத்தின் இருப்பு விளக்கங்கள் நீ கூறியபடி கடத்தினுடையனவாகுமாயின் அத்தியாச வெள்ளியினிடத்து வெள்ளியிருக்கிறது, வெள்ளி விளங்குகிறது என்று காணப்படும் இருப்புவிளக்கங்கள் அவ்வெள்ளியினுடையனவாக வேண்டும். சாஸ்திரங்களில் அவை அவ்வெள்ளியினுடையனவாகக் கூறப்படவில்லை. அவ்வெள்ளிக்கு வேறாகிய அதிஷ்டானவடிவ இப்பியினுடையனவாகக் கூறப்பட்டிருக்கின்றன. அதனால் வெள்ளிக்கு வேறாகிய அவ்விப்பி மலடிமகன் போன்ற இல்லாத வஸ்துவாகவேண்டும். அவ்வாறு கூறுதல் சாஸ்திரத்திற்கும் பிரத்தியக்ஷ அனுபவத்திற்கும் முற்றும் விரோதம் ஆகையால் அவை (வெள்ளியின் இருப்பு விளக்கங்கள்) அதிஷ்டானவடிவ இப்பியினுடையனவே யாம். அதுபோலக் கடத்தின் இருப்பு விளக்கங்கள் அதிஷ்டானவடிவ நித்தியவஸ்துவினுடையனவேயாம். அவ்வதிஷ்டானமும் மலடிமகன்போல இல்லாத வஸ்துவன்று. இப்பிபோல வாஸ்தவமாகிய சச்சிதாநந்த சொரூபமுடையதா மென்க.

அப்படியானால் பிராந்தி நீங்கியகாலத்து வெள்ளிக்கதிஷ்டானமாகிய இப்பி பிரத்தியக்ஷமாக விளங்குகின்றது. அவ்வாறு ஜகத்தின் பிராந்தி நீங்கியகாலத்து அதிஷ்டானமாகிய நித்தியவஸ்து தோற்றவேண்டுமே யெனில், அவ்வாறே அபரோக்ஷமாகத் தோற்றுமென்க.

அப்படியானல் அந்தச் சச்சிதானந்த அசத்து ஜட துக்கங்களின் இலக்கணங்கள் யாவையெனில், எந்தக் காலத்திலும் எந்த ஞானத்தினுலும் பாதிக்க (மித்தையென நிச்சயிக்க) க்கூடாமலிருக்குந் தன்மை சத்தினிலக்கணமாம். எந்தக் காலத்திலும் அன்னியமாகிய எந்தப் பிரகாச வஸ்துக்களாலும் விளங்குதலும் குன்றுதலுமின்றிச் சுயமே (தானே) விளங்குதல் சித்தினிலக்கணமாம். எல்லாக்காலத்திலும் மாறுதலில்லாமல் மிகுந்த பிரியத்திற்கு விஷயமாதல் ஆநந்தத்தினிலக்கணமாம். இம்மூன்றும் நித்தியவஸ்துவினுடையனவாம். இவற்றிற்கு மாறுக எந்தக்காலத்தும் இல்லை யென்னும் உணர்ச்சி (நிச்சயத்து) க்கு விஷயமாதல் அசத்தினிலக்கணமாம். விளங்குவில்லை யென்னும் உணர்ச்சிக்கு விஷயமாதல் ஜடத்தினிலக்கணமாம். வெறுப்பிற்கு (வேண்டாம் என்னும் விருத்திக்கு) விஷயமாதல் துக்கத்தினிலக்கணமாம். இம்மூன்றும் அநித்தியவஸ்துவினுடையனவாம். இவ்விருவகை வஸ்துக்களும் மாயையாற் கலப்புற்றிருக்கின்றன. அந்தச் சிற்சடங்களின் ஐக்கியவறிவாற் பந்தமுளதாயிருக்கின்றது. அத்தன்மையாகிய பந்தம் அவற்றை விவேகித்தலால் (வேறுவேறு பிரித்தறிதலால்) அன்றி நாசமாகாது. ஆதலால் முமுக்ஷுக்களாயுள்ளோர் அச்சச்சிதானந்தங்களினின்றும் அவ்வசத்து ஜடதுக்கங்களை வேறு பிரித்தறியவேண்டும் என்க.

சீடன் கேட்கின்முன்—தேவரீர் முன்னர் என்னிடத்தில் சர்வதுக்கங்களும் நித்திய நிவிர்த்தம் என்றும் பரமாநந்த வடிவப் பிரஹ்மம் நித்தியப் பிராப்தமென்றும் கூறினீர். அவ்விரண்டன்றன்மைகளையும் முதலிற் காட்டவேண்டும்.

அவ்வாறு காட்டினால் முதலில் எனது உண்மைவடிவத்தைத் தெரிந்துகொண்டு அப்பால் மோக்ஷசாதனத்தைக் கேட்கின்றேன்.

[நித்தியவஸ்துவின்கண் சர்வ அநர்த்தங்களுக்கும் காரணமாகிய ஜகத்தின் நித்திய நிவிர்த்தத்தன்மை (பரமார்த்த சத்தையாக ஓர் காலத்தும் அதாவது சிருட்டிகாலத்தும் இல்லாமை) நிரூபிக்கப்படுகின்றது.]

---

## உ-வது அசத்திலக்கணப் பிரகரணம்.

குரு உத்தரம்—மாயையும் அதன் காரியமாகிய தேகாதிப்பிரபஞ்சமும் துக்கத்திற்குக் காரணமாயிருத்தலாற் றுக்கமெனப்படும். இத்துக்கரூபப் பிரபஞ்சம் ஆன்மாவிடத்து நித்திய நிவிர்த்தமாம். (ஓர்காலத்தும் இல்லாததாம்) எதனாலெனில், இல்லையென்னும் உணர்ச்சிக்கு விஷயமாதலாலென வறிக.

சீடனது சங்கை — பிரபஞ்சத்தை இல்லையென்னும் உணர்ச்சிக்கு விஷயமாவதென்று கூறியது பொருந்தாது. எதனாலெனில், பிரபஞ்சமானது இல்லையென்னும் உணர்ச்சிக்கு விஷயமாகாமல், இருக்கிறது என்னும் உணர்ச்சிக்கு விஷயமாதலால்.

கு-ம்—நீ செய்த சங்கை பொருத்தமுடையதன்று. எதனாலெனில், பிரபஞ்சமானது நித்தியவஸ்துவினிடத்து மாயையாற் கற்பிக்கப்பட்டதாகையால் அது வாஸ்தவமாக இருக்கிறது என்னும் உணர்ச்சிக்கு விஷயமாகிறதல்ல. அவ்வாறின்றி இருக்கிறது என்னும் உணர்ச்சிக்கு விஷயமாகுமாயின் கயிற்றினிடத்து வாஸ்தவமாக இல்

லாமல், அவித்தையினுற் கற்பிக்கப்பட்ட சர்ப்பம் அவ்வத்தியாச முடையவனுக்கு மாத்திரம் இருக்கிறது என்னும் உணர்ச்சிக்கு விஷயமாதல்போல அத்தியா சத்தினுலாகியதாம். ஆதலால் அவ்வுணர்ச்சி பிராந்தியாம். அவ்வுணர்ச்சிக்கு விஷயமாகிய ஜகத்து பிராந்தி ஞானத்தின் விஷயமாதலால் அசத்தாம்.(இல்லாததாம்) இத்திருஷ்டாந்த மன்றி (பிராந்தி ஞானத்தின் விஷயமாதலால் அசத்தாத லன்றி) ஜகத்தின் இல்லாமை வேறுவித திருஷ்டாந்தத் தாலும் (பிரபஞ்ச மென்னும் சொல்லிற்குப் பொருளின்மை யாகிய திருஷ்டாந்தத்தாலும்) உறுயாக்கப்படுகின்றது. அதுவருமாறு—உள்ளதாகிய மண்ணிற் கடாதி காரியங்க ளிலலே. இல்லாதிருந்தும் கற்பிதகடத்தின் வயிறுடைமை முதலிய தருமங்களையும், அக்கடத்தின் ஆதாரமாகிய வாஸ் தவமண்ணின் பரிசத்தன்மை முதலிய தருமங்களையும் ஒன்றுபடுத்தி அதாவது பரிசத்தன்மை முதலியவற்ருேடு கூடிய உருட்சியாகிய வயிறுடையது கடம் என்று வியவ கரிக்கின்ருர்கள். அதனுலே கடம் என்னும் சொல்லிற்கு மண்ணே பொருளாம். எதனுலெனில், அம்மண்ணேயிருந்து விளங்குதலாலென்க. ஆகையினுலே கடம் என்னும் சொல் லிற்கு மண்ணைத்தவிர வேறுபொருள் கிடையாது. வேறு பொருள் இருக்குமாயின் அது மண்ணுக்கு வேருக இருக்கவேண்டும். மண்ணினின்றும் கடத்தைப் பிரித்தால் அக்கடம் என்னும் சொல்லிற்குப் பொருள் அகப்படுகிற தில்லை. ஆகையால் கடம் அசத்தாம். அதாவது இல்லா ததாம். ஆகவே மண்ணுக்குவேருகக் கடம் இல்லை.

கடத்தின் சொரூபம் மண்ணுக்கு வேருக இருக்க வேண்டாம், மண்ணேடு அபேதமாக இருக்கின்றதெனின்,

கடத்தின் சொரூபம் மண்ணுடன் அபேதமாக இருக்குமாயின் மண்ணிருக்குங்காலம் எல்லாம் இருக்கவேண்டும். குயவன் வியாபாரத்திற்குமுன் மண்மாத்திரமே இருக்கின்றது. கடம் இல்லை. அதாவது கடம் என்னும் வியவகாரம் இல்லை. ஆதலால் கடம் மண்ணினிடத்து அபேதமும் அன்றென்க.

கடம் மண்ணினிடத்துப் பேதமாகவும் இல்லை. அபேதமாகவும் இல்லையானல் வேறெப்படி இருக்கின்றதெனின், அது எப்படியிருக்கின்றதோ அப்படியிருக்கின்றது. அதாவது, இன்னவிதமிருக்கிறதென்று நிரூபிக்கக் கூடாததாய்ச் சொல்மாத்திரமா யிருக்கின்றது என்பது பொருளென்க.

கடம் மண்ணினிடத்து இன்னவிதம் இருக்கிறதென்று நிரூபிக்க முடியாமற் சொன்மாத்திரமா யிருக்கிறதென்பதிற் பிரமாண முண்டாவெனின், இங்குக்கூறிய அருத்தங்கள் சுருதிப் பிரமாணத்தாற் சித்தித்திருக்கின்றன. அவை பஞ்சதசியில் பாரதிதீர்த்த சுவாமிகளால் நிரூபிக்கப்பட்டிருக்கின்றன. எவ்வாறெனில், அத்துவைதாநந்தப் பிரகாணத்து முப்பத்தெட்டாவது சுலோகத்தில் "இப்படி மாயாமயமாயிருத்தலால் விகார(கடமாகிய காரிய)த்தின் பொய் வடிவத் தன்மையினையும், விகாரத்தின் ஆதாரமான மண் வடிவ வஸ்துவின் சத்தியத்தன்மையினையும் சாந்தோக்கிய சுருதி சொல்லத்தொடங்கியது" என்று ஆரம்பித்து முப்பத்தொன்பதாவது சுலோகத்தில் "வாக்கினுலுச்சரிக்கப்பட்ட விகாரம் (கடமாகிய காரியம்) பெயர் மாத்திரமாம். இவ்விகாரத்திற்குச் சத்தியத்தன்மையில்லை. ஸ்பரிச

குணங்களோடு கூடிய கேவல மிருத்திகையே சத்தியம்'' எனவும், நாற்பத்தொராவது சுலோகத்தில் "வியத்தம் (வெளிப்பாடுடையகடம்) தத்துவ மின்றியதாய் (அசத்தாய்)த் தோற்றிக்கொண்டிருக்கின்றது. உற்பத்தி நாசங்களை அடைவதாயிருக்கின்றது. அதன் உற்பத்தி யுண்டாகிய (வனைதற்றொழிலுண்டாகிய) பின்னர் மனிதருடைய வாக்கால் அதன்பெயர் உண்டாக்கப்படுகின்றது'' (கடம்வாக்கினின்று உண்டாவதன்றி மண்ணினின் றுண்டாவதன்று என்பது பொருள்) எனவும், நாற்பத்திரண்டாவது சுலோகத்தில் "வியத்தம் (கடம்) நாசமாயினும் (வனைதற்றொழிற்பாடு சிதையினும்) இந்தப்பெயர் மனிதர்களுடைய வாயின் கண் பின்னிருக்கின்றது. வியத்த (கட) மானது அந்தப் பெயரால் நிரூபிக்கப்படுவதா யிருத்தலால் அந்தப்பெயர் வடிவமாகச் சொல்லப்படுகின்றது'' எனவும், நாற்பத்துநாலாவது சுலோகத்தில் "வியத்தமான (வெளிப்பட்ட) காலத்தும் அதற்கு முன்னும் பின்னும் ஒரு வடிவத்தை அடைகின்றதும், வாஸ்தவ சொரூபமுடையதும், அவினாசியும் ஆகிய மண்வடிவ வஸ்து யாதோ அது சத்தியம் எனப்படும்'' எனவும், கடமாகிய கற்பித காரியத்தின் அசத்துத் தன்மையும் மண்ணாகிய ஆதாரவஸ்துவின் சத்துத்தன்மையும் நிரூபிக்கப்பட்டிருக்கின்றன. இத்திருஷ்டாந்தம்போலத் தார்ஷ்டாந்தத்தும் பிரபஞ்சம் என்னும் சொல்லிற்கு நித்திய வஸ்துவே பொருளாம். எதனாலெனில், நித்தியவஸ்துவே கடத்தில் மண்போல இருந்து விளங்குகின்றபடியால் என்க. இவ்வாறன்றிப் பிரபஞ்சமென்னும் சொல்லிற்கு நித்திய வஸ்துவினும் வேறுபொருளிருக்குமாயின் அது நித்திய வஸ்துவின் சொரூபமாகிய சத்திற்கு வேறாக இருக்க

வேண்டும். சத்தினின்று பிரித்தாற் பிரிக்கப்பட்ட பிரபஞ் சத்திற்குப் பொருள் (சொரூபம்) அகப்படுகிறதில்லை. ஆகையால் அது நித்திய வஸ்துவினும் வேறன்று. (பேத மன்று) ஆனால் நித்திய வஸ்துவில் அபேதமோவெனில், அப்படியுமன்று. எதனாலெனில், பிரபஞ்சமானது சிருட் டிக்கு முன் இல்லை. சிருட்டிக்கு முன் சசாதீய விசாதீய சுவகதம் என்னும் மூன்று பேதங்களுமில்லாத அத்துவைத சத்தேயிருந்தது என்று சுருதியில் அன்னிய வஸ்துவின் இன்மையானது சத்தே யென்னும் பிரிநிலை ஏகாரத்தாற் கேட்கப்படுகின்றது. அதனால் அப்பிரபஞ்சமானது நித்திய வஸ்துவில் அபேதமுமன்று. இவ்விதமாகப் பிரபஞ்சம் என்னும் சொல்லிற்கு நித்திய வஸ்துவைத் தவிர வேறு பொருளில்லை. இவ்வர்த்தம் வாசிட்டத்தும் "பணிகளென் னுஞ் சொற்பொருட் பொன்னை யன்றி, யன்னிய மில்லைப் பொன்னாற் பணியென வறைய வேண்டா,பன்னிய வுலகாஞ் சொற்குப் பரமன்றிப் பொருள்வே றில்லை" என வசிட்ட ராற் கூறப்பட்டிருத்தல் காண்க. ஆதலால் இப்பிரபஞ்சம் அசத்தாம். நித்தியவஸ்து மாத்திரம் சத்தாம்.

சீ-ச-ஙை—பிரபஞ்சம் என்னும் சொல்லிற்கு நித்திய வஸ்துவே பொருளாம். வேறு பொருளில்லை யென்று கூறி யது பொருந்தாது. எதனாலெனில், நித்திய வஸ்துவும் அநித்திய வஸ்துவும் பெயராலும் சொரூபத்தாலும் வேறு வேறாக இருக்கின்றனவென்று முன் உபோற்காதப் பிரகர ணத்திற் கூறப்பட்டிருக்கின்றன. அந்தவேறு வேறாகிய வஸ்துக்களை வேறுவேறாயுள்ள அவ்வவற்றின் பெயர்கள் அறிவிப்பனவே யன்றி ஒரு பெயர் அதனோடு சம்பந்த

மில்லாத அன்னிய வஸ்துவை எக்காரணத்தா லறிவிக்கும்? அறிவிக்கமாட்டாது.

கு-உ-ம்—இச்சங்கை சமசத்தையுடைய வேறு வேறு வஸ்துக்களிடத்துப் பொருந்தும். இந்நித்தியவஸ்து கற்பித ஜகத்து என்னும் விஷமசத்தையுடைய இவற்றிற் பொருந் தாது. எதனாலெனில், வாஸ்தவ மண்ணும் அதனிடத்துக் கற்பிக்கப்பட்ட கடமும்போல ஒன்று (நித்தியவஸ்து) சத்தியமும் மற்றொன்று (ஜகத்து) கற்பிதமுமாயிருத்தலா லென்க.

சீ-ச-கை—ஒன்று சத்தியமும், மற்றொன்று கற்பிதமு மாகவேயிருக்குக. அவ்வாறிருப்பினும் பிரபஞ்சம் என்னும் சொல் (வாசகம்) அதன்பொருளை (வாச்சியார்த்தத்தை) அறிவிப்பதன்றி வேறுபொருளை (அவாச்சியார்த்தத்தை) எவ்வாறறிவிக்கும்? அறிவித்தற்கு நியாயமிருந்தாற் கூறுக.

கு-உ-ம்—நீ செய்கிற இச்சங்கை கடம் என்னும் சொல்லும், மண்வடிவ பொருளும் ஆகிய இப்பிரசங்கத்திற் பொருந்தாது. எதனாலெனில், கடம் என்னும் சொல்லிற்கு மண்வடிவ அர்த்தம் அவாச்சியம் அல்லாமையாலென்க.

சீ-வி—அப்படியானால் கடம் என்னும் சொல்லிற்கு மண்வடிவ அர்த்தம் வாச்சியமல்ல என்பது நம்மிருவராலு மொப்புக்கொள்ளப்பட்டது. அதனைத் தேவரீர் அவாச் சியமுமல்லவெனக் கூறுகின்றீர். ஆகவே கடம் என்னும் சொல் மண்வடிவ அர்த்தத்தை எவ்வாறறிவிக்கின்றது?

கு-உ-ம்—கடம் என்னுஞ் சொல்லிற்குப் பரிசத் தன்மையோடு கூடிய மண்வடிவ அதிஷ்டானமாகிய மெய்ய மிசமும், வயிறுடைமை கழுத்துடைமை முதலிய தருமங்

களாகிய பொய்யமிசமும் சேர்ந்து முக்கி(வாச்சி)யார்த்த மாகின்றது. எதனுலெனில், அவ்விருவகை யமிசங்களையு மொன்றுபடுத்தி அவிவேக சனங்கள் இது கடம் என்று வியவகரித்தலாலென்க. அந்தமுக்கியார்த்தத்தின்கண்ணுள்ள மெய், பொய் யென்னு மிருவகை யமிசங்களையும் வேறு வேறு பிரித்துக்கூறுமிடத்து அவை யொவ்வொன்றும் தனித்தனியே அமுக்கியார்த்தமென்றும், இலக்கியார்த்த மென்றும் கூறப்படும். ஆகையினுலே கடம் என்னும் சொல் விற்கு அதிஷ்டானமாகிய மண்வடிவ அர்த்தம் வாச்சியமு மன்று, அவாச்சியமுமன்று, இலக்கியமாம். அதனுல் இலக் கணு விருத்தியால் அறிவிக்கின்றதென்க. அவ்வாறே பிர பஞ்சம் என்னும் சொல்லிற்கு நித்திய வஸ்துவானது வாச்சி யார்த்தமுமன்று, அவாச்சியார்த்தமுமன்று, இலக்கணு விருத்தியாகிய சம்பந்தத்தால் இலக்கியார்த்தமாகின்றது.

எப்படியெனில், மேற்கூறிய கடமாகிய திருஷ்டாந்தம் போலத் தார்ஷ்டாந்தத்தும் பிரபஞ்சம் என்னும் சொல் விற்கு அதிஷ்டான வடிவ சச்சிதாநந்த சொரூப நித்திய வஸ்துவாகிய மெய்யமிசமும், அதிற்கற்பிதமாகிய நாமரூப வடிவ பொய்யமிசமும் சேர்ந்து முக்கி (வாச்சி) யார்த்த மாகின்றன. எதனுலெனில், பிரபஞ்சப் பொருள்களில் அச் சச்சிதாநந்தங்களையும் நாமரூபங்களையு மொன்றுபடுத்தி அவி வேக ஜனங்கள் இது மிருகம், நான் மனிதன் என்பனவாக வியவகரித்தலாலென்க. அந்த யான் என்னும் சொல்லின் முக்கியார்த்தத்தின்கண்ணுள்ள இருவகை யமிசங்களையும் வேறு வேறு பிரித்துக் கூறுமிடத்து அவை யொவ் வொன்றும் தனித்தனியே அமுக்கியார்த்தமென்றும் இலக்

கியார்த்த மென்றும் கூறப்படும். அவ்விருவகை அமிசங் களும் எவ்வாறு பிரித்துக் கூறப்படுகின்றனவெனில், ஞானி யானவன் நடத்தல் முதலிய லௌகிக வியவகாரத்தில் யான் என்னும் சொல்லின் முக்கியார்த்தத்தின் பொய்யமிசமாகிய ஆபாசபாகத்தை வேறு பிரித்துக்கொண்டு யான் நடக்கின் றேன் என்று வியவகரிக்கின்றான். எதனாலெனில், அந் நடத் தற்கிரியை தூலசரீர முதலியவற்றோடு கூடிய சிதாபாச னுடையதாயிருத்தலாலென்க.

அந்த ஞானியே விசாரகாலத்தில் நிருவிகாரத் தன்மை யின் அநுபவமுண்டாகியபோது யான் என்னும சொல்லின் முக்கியார்த்தத்திலுள்ள மெய்யமிசமாகிய கூடஸ்தனைப் பொய்யமிசமாகிய ஆபாசனினின்று வேறு பிரித்துக் கொண்டு யான் கூடஸ்தன் என்று வியவகரிக்கின்றான். எதனாலெனில், அந்த நிருவிகாரத்தன்மைசொப்பிரகாசவடிவ கூடஸ்தனது சொரூபமாயிருத்தலாலென்க. இவ்விதத்தால் யான் என்னும் சொல்லிற்குத் தேகாதிகளோடு கூடிய ஆபா சனும் கூடஸ்த சேதனமுஞ்சேர்ந்து முக்கியார்த்தமும் அவை தனித்தனியாக நின்று இலக்கியார்த்தமுமாகின்றன. ஆதலால் அவற்றை யான் என்னுஞ்சொல்லானது இலக்கணா விருத்தியா லறிவிக்கின்றதென்க. ஆனால் அவ்விரண்டமிசங் களும் தனித்தனிஅமுக்கியார்த்தமென்றும், இலக்கியார்த்த மென்றும் எதனாற் கூறப்படுகின்றதெனில், முக்கியார்த்த சொரூபத்தின் ஏகதேச பாகத்திருத்தலினாலும், இலக்கணா விருத்தியா லறியப்படுதலாலுமென்க. ஆதலால் பிரபஞ்சம் என்னும் சொல்லிற்குக் கூடஸ்தவடிவ நித்திய வஸ்துவானது இலக்கியார்த்தமாதலால் இலக்கணா விருத்தியாற் பொருளா

தலைத் தெரிந்துகொள்க. ஆனால் எதனாலே கூடஸ்தன் மெய்யமிசமும் சரீராதிகள் பொய்யமிசமு மாயினவெனில், பொய்யமிசமாகிய சரீராதிகளின் எந்தப்புறம் பார்த்தாலும் கூடஸ்த வடிவ சத்தே இருந்துவிளங்குகின்றது. அந்தச் சத்தினின்று நாம ரூப வடிவ சரீராதிகளை வேறு பிரித்தாற் பிரிக்கப்பட்ட சரீராதிகள் சத்திற்கு வேறாதலால் அவை அசத்(இல்லாத)தாம். ஆதலாற் கூடஸ்தன் மெய்யமிசமும் சரீராதிகள் பொய்யமிசமுமாயின. பிரபஞ்சப் பொருள்கள் அசத்தானாற்றோற்று. நாமரூபங்கள் தோற்றுகின்றனவே. தோற்றுகின்ற சரீராதி நாமரூபங்களையில்லையெனல் பொருந்தாதெனில், அவை தோற்றுதல் பார்ப்பவனது பார்வையின் குற்றமாம். ஆனால் அப்பார்வையின் குற்றம் யாதெனில், பரிபூரணமா யெங்கும் வியாபித்திருக்கின்ற சத்துவஸ்துவையும் அதனிடத்து மாயையாற் கற்பிக்கப்பட்ட நாமரூபங்களையு மொன்றுபடுத்தி இது பிரபஞ்சம் என்றாவது பிரபஞ்சம் இருக்கிறது என்றாவது அறிகின்றாய். அதனாலே நாமரூபமயப் பிரபஞ்சம் தோற்றுகின்றது. இவ்வாறு மெய்யையும் பொய்யையு மொன்றுபடுத்தி யறிதல்தான் பார்வையின் குற்றம் எனக் கூறப்பட்டது. அவ்வாறின்றி நித்திய வஸ்துவை மாத்திரம் கிரகிப்பாயானால் நாமரூபந் தோற்றாதென்க. அப்படியானாற் கலந்திருக்கின்ற இருவகை வஸ்துக்களுள் நாமரூபங்களைக் கிரகியாமல் சத்துவடிவ நித்திய வஸ்துவை மாத்திரம் எவ்வாறு கிரகிக்கலாமெனில், ஒவ்வொரு விஷயா (நாமரூபா)காரமாகப் பரிணமிக்கின்ற உனது அந்தக்கரண விருத்தியை அவ்வாறாகவொட்டாமற்றடுத்து பல விஷயங்கள் உள்ளடங்குமாறு வியாபகப்படுத்தல்வேண்டும். அவ்வாறு நாமரூபக்கலப்பின்றி வியாபகமாகிய அந்தக்காண

விருத்தியால் சத்துவடிவ நித்தியவஸ்து விளங்குமென்க. விஷயங்களைப் பற்றாமல் வியாபகமாகிய அந்தக்கரண விருத்தியிலொன்றுமில்லையேயெனில், நீ எதைப்பார்த்துக்கொண்டு ஒன்றுமில்லையென்று கூறுகின்றாயோ அந்த ஒன்றுமில்லாமையானது உனது புத்திவிருத்திக்கு விளங்குகின்றதா? விளங்கவில்லையா? விளங்கவில்லையென்று கூறின் அந்தவொன்றுமில்லாமையை (அபாவத்தை) அறிந்தவனாகாய். அவ்வாறின்றி விளங்குகின்றதென்று கூறின், விளங்குகின்ற அவ்வொன்று மின்மையானது இருந்துதான் விளங்க வேண்டும். இல்லாதவஸ்து விளங்காது. ஆதலால் இருந்து விளங்குகின்ற அவ்வபாவ வடிவமே நித்தியவஸ்துவின் சொரூபமாம். அதன் இருப்பு நித்தியவஸ்துவின் சத்து வடிவமாம்.

ஆனால் இத்தன்மையாகிய சத் தசத்துக்களின் விவேகி (ஞானி) யானவன் பிரபஞ்ச வடிவ நாமரூபங்களைக் கிரகியான் என்பதற்குப் பிரமாணமுண்டாவெனில், உண்டு. பகவற் கீதையில் "யாதொரு பொருளை யெல்லா வுயிர்களு மிருள் போற் காணு, ஓதரும் ஞானி யத்தை யுளங்கையிற் கனி போற் காணும், யாதொரு பொருளை யெல்லா வுயிர்களு மென்றுங் காணுங், காதலில் ஞானி யத்தைக் கண்ணினாற் றெரியக் காணான்" என்று கிருஷ்ணபகவான் கூறியிருத்தல் காண்க.

ஆகவே பிரபஞ்சம் என்னும் சொல்லிற்கு நித்திய வஸ்துவைத் தவிர வேறு பொருளில்லையென்பது சங்கை சமாதான பூர்வகமாக நிரூபிக்கப்பட்டது. அதனால் உன்னாற் சொல்லப்பட்ட திருஷ்டாந்தமாகிய கடமும் தார்ஷ்டாந்த

மாகிய பிரபஞ்சமு முறையே தாம் இல்லாத மண்ணினிடத்தும், நித்திய வஸ்துவினிடத்தும் தோற்றுதலால் தனது அபாவ அதிகரணத்திற் றனது அவபாசம் அத்தியாசமாம் என்னும் அத்தியாச விலக்கண முடையனவாம். ஆதலால் விவாத விஷயமாகிய திருஷ்டாந்த கடம்போலப் பிரபஞ்சம் அசத்தாம்.

---

## ௩-வது ஜடவிலக்கணப் பிரகரணம்.

பிரபஞ்சம் ஜடம். அதாவது விளங்கவில்லை யென்னும் உணர்ச்சிக்கு விஷயமாவதென்று முன்னர் உபோற்காதப் பிரகரணத்திற் கூறப்பட்டது. அது பொருந்தாது. எதனுலெனில், கடம்விளங்குகிறது, படம் விளங்குகிறது என விளங்குகின்றதென்னும் உணர்ச்சிக்கு விஷயமாதலாலெனச் சங்கிக்கக்கூடும். அவ்வாறு சங்கிக்கின் சொப்பனுவஸ்தையிலொருவன் அநேக வஸ்துக்களைப் பார்க்கின்ருன். அவைகளெல்லாம் விளங்குகின்றது என்னும் உணர்ச்சிக்கு விஷயமாகின்றனவா? விளங்கவில்லையென்னும் உணர்ச்சிக்கு விஷயமாகின்றனவாவென ஆராயின் அப்போது விளங்குகின்றதென்னும் உணர்ச்சிக்கு விஷயமாகின்றனவென்றே நிச்சயிக்கவேண்டும். அப்படியாயின் அச்சொப்பன பதார்த்தங்கள் இருப்பனவா இல்லாதனவாவெனக் கேட்கின் அவையெல்லாம் விளங்குகின்றபடியால் இருப்பதுதான். விளங்கும் என்னு நியாயத்தால் இருப்பனவென்றே கூறவேண்டும். அவ்வாறு இருப்பனவாயின் ஜாக்கிரத்திற் பிரஹ்மசாரியும் வறியனுமாயிருக்கின்ற வொருவன் ஒருநாட் சொப்பனத்தில் மனைவிமக்களுடையவனும் சம்பத்துடையவனுமாகத் தன்னைக் காண்கிருன். அவ்வாறு காணுதலால் அவனுக்கு அச்

சொப்பனத்திற்கண்ட மனைவிமக்களும் சம்பத்துமே போது மானவையாயிருத்தலால் வேறு மனைவி மக்களையும் சம்பத்தையும் அவன் விரும்பாதிருக்கவேண்டும். அனுபவத்தில் அப்படியில்லை. அச்சொப்பனத்தில் மெய்யாயிருந்த அவையெல்லாம் ஜாக்கிரம் வந்தவுடன் பொய்யாய்ப் போகின்றன. ஆகையினாலே இல்லாத வஸ்துக்களிடத்து உள்ள வஸ்துக்களிடத்துப்போல விளங்குவனவாக அச்சொப்பனாவஸ்தையில் அவனுக்குண்டாகிய ஞானம் பிராந்தியாம். உண்மையல்ல. எதனாலெனில், அக்காலத்தில் அங்கு ஞானத்திற்குச் சாதனமாகிய வியாவகாரிக இந்திரியாதிகளில்லை. அவையில்லாமலிருக்கவும் அவ்விந்திரியாதிகளும், அவற்றாலாகிய ஞானங்களும், அந்த ஞானங்களின் விஷயங்களாகிய வஸ்துக்களும் ஆகிய இவையெல்லாம் விளங்குதல் நித்திராசத்தியின் கற்பனையாம். எதனாலெனில், அவை தமக்குப்போதுமான தேசகாலங்களிற்றோன்றாமல் அற்ப தேசகாலங்களிற் றோன்றுதலாலென்க. அதனாலே அச்சொப்பன பதார்த்தங்கள் அசத்தாம். அவைபோல ஜாக்கிரபதார்த்தங்களும் அசத்தாதலால் விளங்கமாட்டா.

சீ-சங்கை—சொப்பன பதார்த்தங்களும் அவற்றின் ஞானங்களும் ஒரு நாழிகை அல்லது ஒரு சாமம் அல்லது ஓரிரவுமாத்திரமிருந்து ஜாக்கிரம் வந்தவுடன் பொய்யாய்ப் போகின்றன. அதனால் அவை இல்லாதவையாகின்றன. ஆகவே இல்லாத அவ்விஷயங்களை ஜடமென்று கூறுதல் பொருந்தும். ஜாக்கிரபதார்த்தங்கள் அவ்வாறு பொய்யாகாமல் நெடுங்காலம் அதாவது ஒருவன் வாழ்நாள்முழுவதும் பொய்யென்னுந் தன்மையாக மாறுபடாமல் எதார்த்த ஞானத்தின் சாதனமாகிய இந்திரியாதிகளுக்கு விஷயமாய்

விளங்கிக்கொண்டிருக்கின்றன. ஆதலால் அவற்றை ஜட மெனல் பொருந்தாது.

கு-உ-ம்—ஜாக்கிரத்திலுள்ள வியவகாரிக இந்திரியாதிகள் எதார்த்த ஞானத்தின் சாதனமெனக் கூறப்பட்டிருத்தல் வியவகாரிக சத்தையை மெய்யாகக்கொள்ளுகின்ற அஞ்ஞான காலத்தின் பொருட்டாம். அவ்வளவேயன்றிப் பரமார்த்தமா(உண்மையா)கிய ஞானவஸ்தையில் அவ்விந்திரியாதிகளாலுண்டாகின்ற ஞானங்களும் பிராந்தியேயாம். எதனாலெனில், நித்திய வஸ்து வொன்றைத் தவிர மற்றவையெல்லாம் அசத்தும் ஜடமுமாமென்பது சுருதிப்பிரமாணத்தாற் சித்தித்தது. பிரமாணங்களெல்லாவற்றுள்ளும் பிரபலமானது சுருதிப்பிரமாணமாம். அதுவே பிரஹ்ம ஞானத்தின் சாதனமாம். அவ்வொரு பிரமாணத்தைத் தவிர மற்றைய பிரமாணங்கள் பிரஹ்ம ஞானத்தின் சாதனங்களாகா. ஆனால் அவையெல்லாம் வேறெச்சாதனமெனின், அவையெல்லாம் அவித்தியா கற்பிதமாகிய பிரபஞ்ச விஷய ஞானத்தின் சாதனங்களாம். மோக்ஷசாதனமாகிய பிரஹ்ம ஞானமானது இப்பிரபஞ்ச ஞானத்தின் வேறாதலால், அந்த ஞானமுண்டாகிய காலத்தில் இப்பிரபஞ்ச விஷயங்களனைத்தும் அசத்தும் ஜடமுமாந்தன்மை கரதலாமலகம்போலக் காணப்படும். ஆதலால், அத்தன்மையவாகிய கற்பித வஸ்துக்களையெல்லாம் சத்தும் சித்துமாகக் காணுதலால் அவ்விந்திரியங்களின் ஞானம் பிராந்தியென்று கூறப்பட்டது.

மேலும் வேறுவிதமாக (அஞ்ஞான காலத்திலேயே) பிரபஞ்சத்தின் ஜடத்தன்மை (விளக்கமின்மை) காட்டப்படுகின்றது. எப்படியெனில், சுரோத்திரேந்திரிய நஷ்டமான

வனுக்குச் சத்த விஷயத்தின் ஜடத்தன்மை அனுபவ சித்த மாம். அப்படியே துவக்கிந்திரிய நஷ்டமானவனுக்குப் பரிச விஷயத்தின் ஜடத்தன்மை அனுபவசித்தமாம். அப் படியே சக்ஷுரிந்திரிய நஷ்டமானவனுக்கு உருவ விஷயத் தின் விளக்கமின்மை அனுபவசித்தமாம். அப்படியே சிங்கு வேந்திரியம் நஷ்டமானவனுக்கு இரச விஷயம் விளங்காமை அனுபவசித்தமாம். அப்படியே கிராணேந்திரியம் நஷ்ட மானவனுக்குக் கந்தவிஷயம் விளங்காமை அனுபவசித்த மாம்.ஆகவே அவ்வைந்திந்திரியங்களும் நஷ்டமானவனுக்குச் சத்த முதலிய ஐந்து விஷயங்களும் ஜடமன்றோ? ஆகையி னாலே, அந்த ஐவகை விஷயாகாரமாக விருக்கின்ற பிரபஞ் சம் எவ்வாறு சித்தாம்? ஒருவிதத்தாலும் சித்தாகாது. ஜட மேயாம்.

அவ்வாறுகூறின் அவ்விந்திரியமில்லாத சரீரம் சீவிக் காது என இந்திரியான்மவாதியின் அனுசாரமாகிய சங்கை யுண்டாகின்றது. அச்சங்கைக்கு இரண்டு விகற்ப வகையாற் சமாதானங் கூறப்படுகின்றது. எப்படியெனில், ஒவ்வோ ரிந்திரிய மில்லாவிட்டாலும் தேகம் சீவிக்காதா? எல்லா விந் திரியங்களும் இல்லாவிட்டாற் சீவிக்காதா? என்பன இரண்டு விகற்பம். அவற்றுள் உலகத்தில் ஓரிந்திரியம் இரண்டிந்திரி யங்களில்லாமலும் தேகம் சீவித்திருத்தல் காணப்படுதலால் முதல் விகற்பம் பொருந்தாது. இரண்டாவது விகற்பமும் பொருந்தாது. எதனாலெனில், சுழுத்தி யவஸ்தையில் எல்லா விந்திரியங்களு மில்லாதிருக்கவும், அவ்வெல்லா விந்திரியங் களு மில்லாதசரீரம் சீவித்திருத்தல் எல்லோராலும் அறியப் படுகின்றமையாலென்க.

அப்படியானால் பிரபஞ்ச வஸ்துக்கள் ஜடம் என்பதற்கும் அவற்றின் ஞானம் பிராந்தியென்பதற்கும் பிரமாணமுண்டாவெனில், உண்டு. "எந்தைநின், திருவளர் நாட்டங் கருணையிற் பெறலும், யாவையு மெனக்குப் பொய்யெனத் தோன்றி, மேவரு நீயே மெய்யெனத் தோன்றினை, ஓவியப் புலவன் சாயல்பெற வெழுதிய, சிற்ப விகற்ப மெல்லா மொன்றிற், றவிராது தடவினர் தமக்குச், சுவராய்த் தோன் றுந் துணிவுபோன் றனவே" எனப் பட்டினத்துப் பிள்ளையார் திருக்கழுமல மும்மணிக்கோவையும், "மேனியிற் புறத்தினுள்ளின் மேலொடு கீழிற் றிக்கில், வானில்லை யகத்திலெங்கு நானன்றி மற்றொன் றில்லை, யானிலா விடமு மில்லையெனதிடத் திலாது மில்லை, தானிகழ் பொருள்வே றில்லைச் சச்சிதா நந்த மென்றான்" என வாசிட்டமும், "அரவவ் வறிவா மிரண்டுமயக் கவற்று தாரக் கயிற்றுடனே, மருவவ் வறிவு மெய்யாமவ் வகைபோ லொவியா தியவிடய, முரிய செவியா தியவறிவு மொருங்கே மயக்கிங் குளபொருளா, மரிய பிரஹ்ம மொன்றுமத னறிவு மெய்யா வனவாமே" என ஆத்துமாநந்த விளக்கமும் பிரமாணமாதல் காண்க.

இந்தப் பிரகாரம் மண்ணிற் கடம் தனது வியவகார காலத்தும் அதற்கு முன்னும் பின்னும் எப்படியிருக்கவும், விளங்கவுமில்லையோ அப்படியே பிரபஞ்சமும் தனது வியவகார காலத்தும், அதாவது இது பிரபஞ்சம் எனச் சுட்டிக் கூறுங்காலத்தும் அதற்கு முன்னும் பின்னும் தனக்கென இருப்பும், விளக்கமும் இல்லாமையால் ஜடமாம். மேலும் வியவகாரகாலத்தும் விளங்கவில்லையானால் விளங்காத வஸ்துவை இது பிரபஞ்சம் என எவ்வாறு வியவகரிக்

க்கூடும் எனச் சங்கை செய்யின் அதற்குச் சமாதானம் கூறப்படுகின்றது.

நித்திய வஸ்துவானது பிரபஞ்சப்பொருள்களெல்லாவற்றிலுங்கலந்து அவற்றிற்கு இருப்பையும் விளக்கத்தையும் தருகின்றதென்று உபோற்காதப் பிரகரணத்திற் கூறப்பட்டதல்லவா? அஃதெதுபோலெனில்,இப்பியினிடத்தில்லாதவெள்ளிக்கு அவ்விப்பியானது இருப்பையும், விளக்கத்தையும் கொடுத்தல்போலவாம்.அஃதெப்படியெனில், இப்பியை யறியும்பொருட்டு நேத்திரத்தின் வழியாக வெளிப்பட்ட அந்தக்கரண விருத்தியானது, அவ்விப்பியினிடத்துச்சென்று அதனுடைய சாமானிய (நிருவிகற்ப) அமிசத்தை இது என்னும் வடிவினதாகத் தரிக்கின்றது. அப்பொழுது அவ்விடத்து நேத்திர முதலியவற்றின் தோஷவடிவ தடைகளிருக்குமாயின் அத் தடைகளால் அவ்விப்பியின் முக்கோண வடிவுடைமை முதலிய விசேட வமிசம் தோற்றுகிறதில்லை. எப்பொழுது இப்பியின் சாமானிய வமிசம் தோற்றி விசேட வமிசம் தோற்றவில்லையோ அப்பொழுது அவ்விப்பியை உபாதியாகவுடைய சைதன்னியத்தை அதாவது நித்திய வஸ்துவை இடமாகக்கொண்டு அதனையும் அதன் உபாதியாகிய இப்பியையும் மறைத்திருந்த அஞ்ஞானத்தின் ஆவரணம் (மறைப்பு) நீங்குகிறதில்லை. அப்பொழுது விஷயமாகிய இப்பியை உபாதியாகவுடைய நித்திய வஸ்துவும், அவ்விப்பியினிடத்து நேத்திரப் பிரமாணவாயிலாகச்சென்று அதனது நிருவிகற்பமாகிய இது வெனும் வடிவத்தைத் தரித்து அவ்விடத்திருக்கின்ற அந்தக்கரண விருத்தியை உபாதியாகவுடைய நித்திய வஸ்துவும் உபாதிகளின் பேதத்

தால் இப்பியுபகித சேதனம், விருத்தியுபகித சேதனம்எனப் பேதமாகக் கூறப்படினும், சொரூபத்தாற் பேதமில்லாமை யாலும், அக்காலத்தில் விஷயமாகிய இப்பியும், அந்தக் கரண விருத்தியுமாகிய உபாதிகளிரண்டும் ஓரிடத்திருத்த லாலும், அந்த விஷயவுபகிதசைதன்னியத்தின் வேறுகாத விருத்தியுபகித சைதன்னியத்தை யிடமாகக் கொண்டிருக் கின்ற அஞ்ஞானமானது கலக்கத்தை அதாவது அத்தியா சத்தை யுண்டாக்கும் பக்குவத்தை யடைகின்றது. அவ் வாறு பக்குவமடைந்த அஞ்ஞானத்தின் தமோகுணமிசம் கற்பித வெள்ளி வடிவ பரிணாமத்தையும், சத்துவகுணமிசம் அவ்வெள்ளியின் ஞான வடிவ பரிணாமத்தையும் ஏககாலத் தில் அடைகின்றன. அடையவே இப்பியினுடைய இருப் புத்தன்மை விளக்கத்தன்மைகளிரண்டும் கற்பித வெள்ளியி னிடத்து அத்தியஸ்தமாய் வெள்ளியினுடைய அசத்துத் தன்மை ஜடத்தன்மைகளை மறைக்கின்றன. அதனாலே கற் பிதவெள்ளியானது அசத்தும் ஜடமுமாகாமல் சத்தும் சித்து மாகத் தோற்றுகின்றது. வெள்ளியும் வெள்ளித்தன்மைத் தருமமும் இப்பியினிடத்துச் சொரூபமாக அத்தியஸ்தமாய் அவ்விப்பியின் விசேடவடிவத்தையும் இப்பித்தன்மையாகிய தருமத்தையும் மறைக்கின்றன. அதனால் இப்பியானது தனது வடிவமாகத் தோற்றாமல் அவித்தையினாற் கற்பிக்கப் பட்ட வெள்ளி வடிவமாகத் தோற்றுகின்றது. இவ்வாறு இப்பிக்கும் அதிற் கற்பிக்கப்பட்ட வெள்ளிக்கும் பரஸ்பரம் (ஒன்றுக்கொன்று) அத்தியாச முண்டாகின்றன. இவ்விதத் தால் வெள்ளியினிடத்துக் காணப்படுகின்ற சத்துத் தன்மை சித்துத்தன்மைகள் அதற்குச் சொந்தமல்ல. இப்பியினிட மிருந்து அத்தியாசவாயிலாகக் கிடைத்தன வெனவறிக.

ஆதலால் வெள்ளியானது இப்பியினிடமிருந்து இருப்பையும், விளக்கத்தையும் பெற்றமையாற் பார்க்கவும், வியவகரிக்கவும் படுகின்றது. சுயமாக அசத்தும் ஜடமுமாம்.

இத் திருஷ்டாந்தம்போலப் * பிரமாதிரு முதலிய தோஷங்களோடு கூடிய அஞ்ஞான ஜீவர்களுக்கு அகண்ட பரிபூரண சச்சிதாநந்த வடிவமாயுள்ள நித்திய வஸ்துவின் விசேட அமிசமாகிய சேதன ஆநந்தாதிகள் தோற்றுகிறதில்லை. அவைகள் தோற்றாமையால் அந்த நித்திய வஸ்துவை யிடமாகக்கொண்டிருக்கின்ற மாயை வடிவ அஞ்ஞானம் நிவிர்த்தியாகிறதில்லை. அப்பொழுது அம்மாயை வடிவ அஞ்ஞானம் அத்தியாசத்தை யுண்டுபண்ணும் பக்குவத்தை யடைகின்றது. அவ்வாறு பக்குவமடைந்த மாயையின் தமோகுணாமிசம் ஆகாயமுதற் றேகபரியந்தமாகிய பிரபஞ்ச வடிவ பரிணாமத்தையும், சத்துவகுணாமிசம் அதன் ஞானவடிவ பரிணாமத்தையும் ஏககாலத்தில் அடைகின்றன. அதனாலே நித்திய வஸ்துவின் சத்துத் தன்மையும், சித்துத் தன்மையும் ஆகாயாதிப் பிரபஞ்சத்தின் அசத்துத் தன்மையையும், ஜடத்தன்மையையும் மறைக்கின்றன. அதனாற் பிரபஞ்சமானது அசத்தும் ஜடமுமாகாமற் சத்தும் சித்துமாகக் காணப்படுகின்றது. சத்த முதலிய குணங்களோடு கூடிய நாம ரூப வடிவப் பிரபஞ்சமும் ஜடத்துவம், துக்கத்துவம், நாநாத்துவம், சங்கத்துவம், பரிச்சின்னத்துவம் முதலிய அதன் தருமங்களும் சொரூபமாக அத்தியஸ்தமாய்

---

* பிரமாதிரு முதலிய தோஷவடிவ அத்தியாச சாமக்கிரிகளை விரிவஞ்சி யிங்கெழுதவில்லை. அவற்றை அறிய விருப்பமுள்ளார் விசாரசாகர முதலிய விரிந்த நூல்களுட் கண்டுகொள்க.

நித்திய வஸ்துவின் விசேட அமிசமாகிய சேதனத்துவம், ஆநந்தத்துவம், ஏகத்துவம், அசங்கத்துவம், வியாபகத்துவம் முதலியவற்றை மறைக்கின்றன. அதனால் நித்திய வஸ்துவானது சேதனமும், ஆநந்தமும், ஏகமும், அசங்கமும், வியாபகமுமாகிய பிரஹ்மமாகத் தோற்றுமல் ஜடத்துவம், துக்கத்துவம், நாநாத்துவம், சங்கத்துவம், பரிச்சின்னத்துவம் முதலிய தருமங்களோடு கூடியதாகத் தோற்றுகின்றது. அதனால் நித்திய வஸ்துவாகிய ஜீவன் தன்னைப் பிரஹ்மமாக அறியாமல் மாருகக் கர்த்தா போக்தாவாகவும், அஞ்ஞானியாகவும், துக்கியாகவும், ஈசுராதிகளினும் வேருகவும், சரீராதி சங்கமுடையவனுகவும், சரீரத்தளவினனுகவும் அறிகின்ருன். இவ்விதத்தாற் பிரபஞ்சத்தினிடத்துக் காணப்படுகின்ற சத்துத் தன்மை சித்துத் தன்மைகள் பிரபஞ்சத்திற்குச் சொந்தமல்ல. நித்திய வஸ்துவினிடமிருந்து அத்தியாசவாயிலாகக் கிடைத்தனவாம். அக்காரணத்தாலேதான் பிரபஞ்சமானது பார்க்கவும் வியவகரிக்கவும் படுகின்றது. இது வியவகார காலத்தும் விளங்கவில்லையானுல் விளங்காத வஸ்துவை அறிய முடியாது. அவ்வாறு அறியப்படாத வஸ்துவை இது பிரபஞ்சம் என எவ்வாறு சுட்டி வியவகரிக்கப்படும்? என்னும் சங்கைக்குச் சமாதானமாம்.

இங்குப் பிரபஞ்சத்திற்கு ஜடத்துவம் சாதிக்கவாரம்பித்து, அதற்கிடையில் ஜீவவியவகாரஞ்செய்தல் மற்ருென்று விரித்தலாகாதோவெனில், விவாதத்திற்கு விஷயமாகிய ஜடசேதனவடிவ இருவகைப் பிரபஞ்சத்துள் ஜீவசொரூபம் அடங்கியிருத்தலால் மற்ருென்று விரித்தலாகாது. அத்தியாச விலக்கணத்தை முற்றக்கூறிக் குறித்த பிரபஞ்சப் பொருளையே விளக்குதலாமென்க.

அஃதவ்வாறாகுக. ஜீவசொரூபம் பிரபஞ்ச வடிவமென எங்கேகூறப்பட்டிருக்கின்றதெனில், பகவற்கீதையில் "மருவு கின்றவிவ் வுலகின் மாய்தலே, உருவ மாகமுன் புடைய தொன்றுமே, அருவ மொன்றிறு லழிவதின்மையே, பொருவ நின்றதோர் பொருளு முண்டரோ" எனவும், "மொழிசெய் கின்றவிவ் விரண்டு முற்றவே, விழிபி னுலுற னேக்கின் மெய்மையே, யழிவ தாக்கையாங் கழிவு பாடிலா, தொழிவ தென்னெனி னுயிரென் கின்றதே" எனவும், "இவையி ரண் டையுங் கடந்து யாதுமோர், நவையு மின்றியே நாச மின்றி யே, யெவையு மின்றியே யிழிவு மின்றியே, குவையி னின்ற தோர் குறியி லின்பமே" எனவும், இருவகைப் பிரபஞ்ச வடிவமாகிய ஜீவ சொரூபமும் அதன் வேறாகிய நித்திய வஸ்துவின் சொரூபமும் ஸ்ரீ கிருஷ்ண பகவானுற் கூறப்பட் டிருத்தல் காண்க.

ஆகவே இதுவரையும் கூறிவந்த இப்பிரகரணத்தால் என்ன சித்தித்ததெனில், பிரபஞ்சமானது அவிசார காலத் துள்ள பிராந்தி ஞானத்திற்கு விளங்குவதன்றி விசாரத்தா லுளதாகின்ற எதார்த்த ஞானத்திற்கு விளங்காதென்பது சித்தித்தது.

---

## ச-வது துக்கவிலக்கணப் பிரகரணம்.

முன்னர் உபோற்காதப்பிரகாணத்தில் அநித்திய வஸ்து வானது வெறுப்பிற்கு (வேண்டாமென்னும் உணர்ச்சிக்கு) விஷயமாவதென்று கூறப்பட்டது. அந்தப் பிரபஞ்ச விஷயங் கள் பிரியத்திற்கு விஷயமாவதும் சுகத்தைக் கொடுப்பது

மாகக் காணப்படுதலால் அது பொருந்தாதென்று சங்கிக்கின் அச்சங்கை பொருந்தாது.

பிரபஞ்ச விஷயங்கள் பிரியத்தின் விஷயமுமல்ல, சுகத்தைக் கொடுப்பனவுமல்ல. அவ்வாறின்றிப்பிரியத்தின் விஷயமாகுமானால் அவ்விஷயங்களிலுள்ள பிரியமானது எப்பொழுதும் மாறாதிருக்கவேண்டுமே? அனுபவத்தில் அப்பிரியம் மாறுமலொரு தன்மையாக இருக்கவில்லையே? ஒரு காலத்திற் பிரியமாயிருந்த வஸ்து மற்றொரு காலத்தில் வெறுப்பிற்கு விஷயமாகின்றதே? மற்றொருகாலத்தில் உபேக்ஷைக்கு அதாவது விருப்பும் வெறுப்பும் அல்லாத விஷயமாகின்றதே. இவ்வாறு பலவிதமாக மாறுதலடைகின்ற வஸ்து எவ்வாறு பிரிய மாத்திரத்தின்விஷயமாகும்? ஆகவேமாட்டா. அன்றோ?

ஆனால் இங்கே கூறப்பட்ட மாறுதல்கள் எக்காரணங்களாலுளவாகின்றனவெனில், ஒரேவஸ்து ஒருவனுக்கு அனுகூலத்தைச் செய்யுங்காலத்தில் பிரியவிஷயமாகின்றது. பிரதிகூலத்தைச் செய்யுங்காலத்தில் வெறுப்பு விஷயமாகின்றது. அவ்விரண்டு செயலுமில்லாத காலத்தில் பொதுமல் (விருப்பும் வெறுப்பும் அல்லாத) விஷயமாகின்றது. பிரபஞ்சவஸ்துக்களுள் இவ்வித மாறுதலடையாத வஸ்துக்கள் கிடையா. ஆதலாற் பிரபஞ்சப் பொருள்கள் எவ்வாறு ஒரு விதத்தாற் சத்தும் சித்துமாகக் காணப்படினும் மற்றொரு விதத்தால் அசத்தும ஜடமுமாக மாறுதல்பற்றிச் சத்தும் சித்துமாகக் காணப்பட்டமை பிரர்ந்திஞானத்தா லெனவும், அசத்தும் ஜடமுமாகக் காணப்பட்டமை எதார்த்தஞானத்தாலெனவும் நிச்சயிக்கப்பட்டனவோ அவ்வாறு அநுகூலத்தன்மை காரணமாகப் பிரியத்திற்கு விஷயமாகிய வஸ்து மற்றொரு வகை

யால் அதாவது பிரதிகூலத்தன்மை முதலிய ஏதுக்களால் மாறுபடுகின்றது. ஆதலால் இங்கே பிரபஞ்ச வஸ்துக்கள் பிரியத்திற்கு விஷயமாகக் காணப்படுதல் பிராந்தி ஞானத்தாலெனவும் வெறுப்புக்கு விஷயமாகக் காணப்படுதல் எதார்த்த ஞானத்தாலெனவும் கண்டுகொள்க.

மேலும் விஷயங்களிலுள்ள பிரியத்தன்மை பிராந்தியாம் என்பதே விளக்கிக் காட்டப்படுகின்றது. எப்படியெனில், ஒருவனுக்கு ஒரு விஷயமானது அநுகூலத்தன்மையுடையதாகக் காணப்படுங்காலத்துள்ளும் அவ்விஷயானுபவத்திற்கு முன்னும் பின்னும் முறையே எப்பொழுதனுபவிப்பேன் எப்பொழுதனுபவிப்பேன் என்னும் நினைப்புவடிவ இச்சைக்கும், வேண்டாமென்னும் நினைப்புவடிவ வெறுப்பிற்கும் விஷயமாய்த் துக்கத்தையே கொடுக்கின்றது. இவ்வாறு துக்கத்தைக் கொடுக்கின்ற விஷயங்களிற் பிரியத்தன்மைப் புத்தியுண்டாதல் மயக்கத்தாலாதலின் பிராந்தியென்றுகூறப்பட்டது என்றறிக.

தேவரீர் கூறியவாறு விஷயங்கள் அனுபவகாலத்திற்கு முன்னும் பின்னும் முறையே இச்சைக்கும் வெறுப்பிற்கும் விஷயமாகுக. அனுபவ காலத்திலாவது பிரிய விஷயமாகவும் சுகத்தைக்கொடுப்பதாகவும் இருக்கின்றன அல்லவாவெனில், அக்காலத்திலும் அவை பிரியவிஷயமுமல்ல. சுகத்தைக் கொடுப்பனவுமல்ல. எதனாலெனில், சத்து, சித்து, ஆநந்தம் என்னும் மூன்றுசொற்களும் அஸ்தம், கரம், பாணி என்னும் மூன்றுசொற்களும் கையாகியவொருபொருளின் வாசகமாயிருத்தல்போல நித்திய வஸ்துவாகிய ஒருபொருளின் வாசகங்களாயிருத்தல் சுருதியுத்திவித்துவான்களனுபவ மென்ப

வற்றுற் சித்தித்தனவாம். அவ்வாறே அசத்து, ஜடம், துக்கம் என்னும் மூன்றுசொற்களும் அநித்திய வஸ்துவாகிய ஒரு பொருளின் வாசகங்களல்லவா? அவற்றுள் அசத்தென்பதற்கு இல்லாததென்பதும், ஜடம் என்பதற்கு விளங்காததென்பதும், துக்கம் என்பதற்குச் சுகத்தின் விரோதியென்பதும் அருத்தமாம் எனச் சாஸ்திரங்களிற் கூறப்பட்டிருக்கின்றன. ஆகவே அநித்திய வஸ்து வானது சொரூபமில்லாததும், விளங்காததும், சுகவிரோதியுமா மென்பது பெறப்படுகின்றது. அவற்றுள் அநித்தியவஸ்து அசத்தென்பதும், ஜடமென்பதும் முறையே அசத்திலக்கணப் பிரகரணத்தாலும் ஜடவிலக்கணப் பிரகரணத்தாலும் நிரூபிக்கப்பட்டிருக்கின்றன. அவ்வாறு நித்தியவஸ்துவினிடத்து இல்லாததும் விளங்காததுமாகிய சுகவிரோதி, ஜீவர்களுக்கு எவ்வாறு சுகத்தைக்கொடுக்கும்? ஒருவிதத்தாலும் கொடாது.

அப்படியானல் உண்டாகின்ற பிரியத்தின் விஷயமும், சுகத்தின் சாதனமும் யாவையெனில், முறையே அவை நித்திய வஸ்துவும் நிச்சல அந்தக்கரணமுமாம். அவற்றைவிட்டு விஷயங்கள் கொடுக்குமென்று கூறின் மலடியினிடத்துப்பிறவாதவனும் ஒருவராலும் பார்க்கப்படாதவனுமாகிய புத்திரனும் அன்னியருக்கு அனுகூலத்தைச்செய்து பிரியனுகக் கூடும். மலடிமகன் உலகத்தில் யாவர்க்காயினும் அனுகூலத்தைச் செய்கிறதுமில்லை, பிரியனுகிறதுமில்லை. எதனுலெனில், பிறந்தவனல்லனுதலால். அதுபோல அநித்திய வஸ்துவாகிய ஆகாயாதிப் பிரபஞ்சப்பொருள்கள் பிறவாதனவாதலால் ஜீவர்களுக்குச் சுகம்கொடுப்பனவாகா. அதனுலே பிரியவிஷயமாகாவென்க.

அவ்வாறு பிரபஞ்சப்பொருள்கள் பிறவாதனவாயின் சுருதியிற்கூறிய சிருட்டி எதன் பொருட்டெனில், மண்ணினிடத்துக்கடமில்லை. இல்லையாயினும் இல்லாத அக்கடாதிகளில் விருப்புடையாரைக்குறித்துக் குயவனாற் கற்பிக்கப்பட்ட தகட்டு வடிவத்தோடு கூடிய மண்ணுக்குக் கடத்தன்மை கற்பிக்கப்படுதல்போல நித்திய வஸ்துவினிடத்து ஆகாயாதிப்பிரபஞ்சமில்லை. இல்லையாயினும் இல்லாத அப்பிரபஞ்ச விஷயங்களில் விருப்புடைய அஞ்ஞானிகளாகிய ஜீவரைக் குறித்து மாயாவிசிட்ட ஈசுவரனாற் கற்பிக்கப்பட்ட நாமரூபத்தோடுகூடிய நித்தியவஸ்துவிற்குப் பிரபஞ்சத்தன்மை கற்பிக்கப்பட்டிருக்கின்றது. அதனாற் பிரபஞ்சம் பிறவாததாயிற்று.

விஷயங்களினிடத்துச் சுகமுண்டென்னும் புத்தி பிராந்தியென்பது வேறு திருஷ்டாந்தத்தாலும் விளக்கிக்காட்டப்படுகின்றது. எப்படியெனில் ஊர்ப்புறத்திற் கழிந்துகிடக்கின்ற வெள்ளெலும்பை ஊன்விருப்புள்ளவோர்நாயானது கண்டு அவ்வெலும்பினிடத்து ஊனுளதெனநினைத்துக்கடிக்கின்றது. அதனிடத்துள்ள இச்சையைசாற் பலமுறை கடித்தலால் கடிக்கப்பட்ட அவ்வெலும்பாற் குத்தப்பட்டுத் தனது தாடையினின்று மொழுகுகின்ற உதிரத்தை அவ்வெலும்பினின்றொழுகுவதாகப் பிராந்தியடைந்து மேலுமேலும் பலமாகக்கடித்து வாய்ப்புண்ணாற் கஷ்டமடைந்தாற்போல அற்பமுஞ்சுகமில்லாமல் அசத்தும் ஜடமும் துக்கமுமாயுள்ள விஷயங்களினிடத்து இச்சையுடைய அவிவேகியாகிய புருஷன் எனக்கிது வேண்டும் எனக்கிது வேண்டுமென்றும், எப்பொழுது கிடைக்குமோ எப்பொழுது கிடைக்குமோ

வென்றும் நினைத்து நினைத்து அங்நினைப்பாற் றுக்கத்தையே யனுபவிக்கின்றுன். விஷயபோகமானது பிராரத்த கருமத்தின்படி கிடைப்பதல்லது இச்சையின்படி கிடைப்பதல்ல. ஒருவாறு ஊழ்வலியாற் கிடைத்தாலும் கிடைத்த விஷயத்தை அனுபவித்தற்குரிய வூழில்லையானுல் வியாதி முதலியவற்ருற் பிரதிபந்தம் (தடை) உண்டாகின்றது. உண்டாகவே விஷயங்கிடைத்தும் அனுபவிக்கக் கூடவில்லையேயென்று முன்னினும் அதிக துக்கமுளதாகின்றது. இவ்வளவேயன்றி, அவ்விஷயத்திற்கு நாசமுண்டாயின் பெருந்துக்கம். அதாவது மரண ஏதுவாகிய துக்கமுளதாகின்றது. இது பற்றியே சாந்தோக்கிய சுருதியிற் சநற்குமார நாரத சம்வாதவாயிலாகப் பூமாவடிவ பிரஹ்மத்தின் ஆநந்த வடிவத்தன்மை நிரூபணத்தில் "விஷயஜந்நிய சுகம் ஆயிரந்துக்கங்களாற் சூழப்பட்டிருத்தலாற் றுக்கரூபமே யாமென்று மதித்து இச்சநற்குமார முனிவர் அற்ப (விஷய)த்திற் சுகமில்லையென்று கூறினுர்." என்று பஞ்சதசியோகா நந்தப் பிரகாணத்து இருபத்தொராவது சுலோகத்திற் கூறப்பட்டிருக்கின்றது. இவ்வாறு விஷயங்களைக் கஷ்டப்பட்டுச் சம்பாதித்தாலும் அதனையனுபவித்தற்கு வேறாழ் வேண்டியிருக்கின்றது. இதனை "வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி, தொகுத்தார்க்குந் துய்த்தலரிது" எனத்திருவள்ளுவ நாயனுர் கூறியிருப்பதும் கண்டுகொள்க.

இவ்வளவு தடைகளினின்றும் தப்பி யொருவனுக்கு விஷயம் அனுபவிக்கப்பட்டாலும் அதன் அனுபவகாலத்திற்கு முதற்கணம்வரை இச்சைக்கு விஷயமாய்த் துக்கத்தைக்கொடுத்தலன்றி அனுபவ காலத்திற்குப் பிற்கணத்தில்

இதுவேண்டாம் என்று வெறுப்புக்கும் விஷயமாய்த்துக்கத்தைக் கொடுக்கின்றது. ஆனால் அனுபவ காலத்திற்கு முன்னும் பின்னும் துக்கத்தைக்கொடுத்தாலும் அனுபவ காலத்திற் சுகத்தைக்கொடுக்கின்ற தல்லவாவெனில் அப்பொழுதும் சுகசாதனமல்லவேயல்ல. அப்படியானல் அவ்விஷயத்தால் யாதொரு பயனும் இல்லையோவெனில், முன்னர் எனக்கிதுவேண்டும் எனக்கிதுவேண்டுமென் றுண்டாகிய இச்சை மாத்திரம் அதன் அனுபவகாலத்தில் நீங்குகின்றது. இந்த இச்சையின் நீக்கமே அவ்விஷயானுபவத்தாற் கிடைத்த பிரயோசனமெனவறிக. விஷயானுபவத்தின் கதி இவ்வாறிருக்குமானல் சுகத்திற்குச் சாதனம் வேறுயாது எனில், சுகத்திற்குச்சாதனம் நிச்சல (அசைவற்ற) அந்தக்கரணமாம். அஃதெவ்வாறெனில், நிச்சலமாகிய ஜலத்தை அவ்வாறு நிற்கவொட்டாமல் அங்குமிங்கும் சலிப்பிக்கின்ற காற்றைப்போல நிச்சலமாய் (அசைவின்றி) நிற்கக் கூடிய சத்துவகுணமிசமாகிய அந்தக்கரணத்தை அவ்வாறு இராஜசகுணமிசமாகிய இச்சையானது எனக்கிது வேண்டும் எனக்கிதுவேண்டுமென்னு நினைப்புவடிவ பிரவாகத்தை யுண்டுபண்ணுகின்றது. அவ்வலைவால் அந்தக்கரணத்திற்கு இயல்பாயுள்ள தெளிவு (பிரகாச)த்தன்மை நீங்கித் தூலத்தன்மைவடிவ கலக்கமுண்டாகின்றது. தூலத்தன்மை யடைந்த அந்தக்கரணத்தில் அலைபோடு கூடிய ஜலத்திற் பிரதிவிம்பந் தோற்றாததுபோல நித்தியவஸ்துவினுடைய சுகப்பிரதிவிம்பம் தோற்றுகிறதில்லை. விஷயானுபவ காலத்தில் விரும்பிய விஷயங் கிடைத்திருத்தலால் முன் கிடைக்காமையா லுண்டாகிய இச்சை நீங்குகின்றது. அப்பொழுது வேறு விஷயத்தைக்குறித்து இச்சையுண்டாகிறது மில்லை. இவ்விதத்தால் அந்தக்கரண

த்தினிடத்து எந்த விஷயவிச்சையு முண்டாதற்கேதுவில் லாமையால் தூலத்தன்மைக்கேதுவாகிய இச்சை நீங்குகின் றது. அது நீங்கவே அலையில்லாத ஜலம்போலத்தெளிந்து சூக்குமத் தன்மையை யடைகின்றது. எப்பொழுது அந் தக்கரணமானது சூக்குமத்தன்மை யடைந்ததோ அப்பொ ழுதே அந்தர்முக (நித்தியவஸ்துவிற்கெதிர்முக) மாகின்றது. அதனாலே நித்தியவஸ்துவிலுள்ள சுகமானது தனக்கெதிர் முகமாகிய அந்நிச்சல அந்தக்கரணத்தில் முகத்திற் கெதிரா கிய கண்ணாடியில் அம்முகத்தின் பிரதிவிம்பம் தோற்றினாற் போலப் பிரதிவிம்பிக்கின்றது. நித்தியவஸ்துவி (தன்)னிடத் தினின்றுண்டாகிய இச்சுகானுபவத்தை யுள்ளபடி யறியா மல் தனது தாடையினின்றெழுகிய வுதிரத்தைத் தன்னாற் கடிக்கப்பட்ட எலும்பினின்றெழுகியதாகப் பிராந்தி யடை ந்த நாயைப்போல புருஷன் பிராந்தியடைந்து விஷயத்தி னின் றுண்டாகியதாக விபரீத நிச்சயஞ் செய்கின்றான். அந்த நிச்சயத்தால் மேலுமேலும் அவ்விஷயங்களையே யனு பவிக்க விச்சித்து அந்த விச்சையால் ஜனன மரணமாகிய சமுத்திரத்தில்விழுந்து மோக்ஷமாகிய கரைகாணாது தவிக் கின்றான். ஆகவே விஷயானுபவத்திற் றோன்றுகின்ற சுகம் நித்திய வஸ்துவினதாம். அதனைச் சத்தாதிவிஷயங்களினின் றுண்டாவதாக மதித்தல் பிராந்தி யென்று கூறப்பட்ட தென்றறிக.

மேற்கூறிவந்த விதமாக இப்பிரகரணத்தின் விசாரத் தால் என்ன நிச்சய முண்டாயிற்றெனில், பிரபஞ்ச வடிவ மாகச் சொல்லப்பட்ட சத்தாதி விஷயங்கள் அசத்தாகவும், ஜடமாகவும், சுகவிரோதியாகவுமிருத்தலால் அவற்றினிடத்

துச் சுகமுமில்லை, சுகசாதனத் தன்மையுமில்லை யெனவும், அவற்றின் அனுபவகாலத்தில் அவற்றினிடத் துண்டாகிய இச்சை மாத்திரம் நீங்குதலால் அவ்விச்சையின் அற்பகால நீக்கமே அவற்றனுபவத்தின் பயனெனவும், மற்றைய (முன்னும் பின்னுமாகிய) காலங்களில் இச்சைக்கும் வெறுப்பிற்கும் விஷயமாய்த் துக்கத்தையே தருதலாற் றுக்கவடிவமாமெனவும், அவற்றின் அனுபவம் பிறவிக்குக் காரணமாமெனவும், சுகமானது நித்திய வஸ்துவினிடத்திலேயே உளதெனவும், அந்தச் சுகானுபவத்திற்குச் சாதனம் நிச்சலமாகிய அந்தக்காரணமாம் எனவும் நிச்சயமுண்டாயிற்று. ஆதலால் மோக்ஷ இச்சையுடைய அதிகாரிகள் விஷயங்களினிடத்துள்ள இச்சையை முற்றிலுமொழித்துத் தமது அந்தக்கரணத்தை நிச்சலமாகும்படி யப்பியசிக்கவேண்டும்.

---

## ரு-வது சத்திலக்கணப் பிரகரணம்.

இப் பிரகரணத்தாற் சத்தின் இலக்கணம் நிரூபிக்கப் படுகின்றது. சத்தின் இலக்கணம் யாதெனில், எந்தக் காலத்திலும் எந்த ஞானத்தினாலும் பாதிக்க (மித்தையென நிச்சயிக்க)க்கூடாமல் இருக்குந் தன்மையதாம். அப்படியானால் கடம் இருக்கிறது, படம் இருக்கிறது என்பதாகப் பிரபஞ்சப் பொருள்களில் இருப்புத்தன்மை தோற்றுகின்றதே அதனாலே பிரபஞ்சம் சத்து வஸ்துவாகுமேயெனின் பிரபஞ்சமானது முன் அசத்திலக்கணப் பிரகாணத்திற் பாதிக்கப் பட்டுப்போயிற்று. ஆகையால் அது அசத்தாம். (இல்லாததாம்) அவ்வாறு பிரபஞ்சம் இல்லாததானால், கடம் இருக்கிறது என்னுமிடத்தாக கடத்தின்கட் காணப்படும் இருப்புத் தன்மை எதனுடையதாமெனில், அதனிடத்துக் காணப்படும்

இருப்பு (சத்து)த் தன்மையானது நித்திய வஸ்துவினுடைய தாம். அந்த நித்திய வஸ்துவானது ஏகமாயும் வியாபகமாயு மிருத்தலால் அதனிடத்துள்ள இருப்புத் தன்மையானது அந் நித்திய வஸ்துவினிடத்து அத்தியஸ்தமாகிய பிரபஞ்ச வஸ்துக்களிடத்திருப்பதாக அதாவது இதுகடம் என்றுவது அல்லது கடம் இருக்கிறது என்றுவது அஞ்ஞானியாகிய புருஷனது பிராந்தி ஞானத்தின் சாதனமாகிய நேத்திரேந் திரிய முதலியவற்றிற்கு விளங்குகின்றது. எவ்வாறு திருஷ் டாந்தமாகக் கூறப்பட்ட அதிஷ்டான வடிவ கயிற்றின்கண் ணுள்ள இருப்புத்தன்மையானது அதனிடத்து அத்தியஸ்த மாகிய சர்ப்பத்தினிடத்திருப்பதாக அதாவது இது சர்ப்பம் என்றுவது அல்லது சர்ப்பம் இருக்கிறது என்றுவது அவ் வத்தியாசமுடைய புருஷனது பிராந்தி ஞானத்தின் சாதன மாகிய அவித்தியாவிருத்திக்கு விளங்குகின்றதோ அவ்வா றென வறிக.

நித்திய வஸ்துவானது ஏகமாயும் வியாபகமாயும் இருக் கிறதென்று மேற்கூறப்பட்டதே? அஃதவ்வாறிருப்பின் இருக்கின்றபடி ஏகமாயும் வியாபகமாயும் அல்லவா தோற்ற வேண்டும்? அவ்வாறின்றிக் கடமிருக்கிறது, படமிருக்கிறது என்று பிரபஞ்சப் பொருள்களில் மாத்திரம் பரிச்சின்னமா (அவ்வவ் விஷயத்தளவினதா)கவும் விஷயங்கள் தோறும் பலவாகவும் தோற்றுகின்றதே, பரிச்சின்னமும் பலவுமாகத் தோற்றுகின்ற அச் சத்துத்தன்மையை ஏகமென்றும், வியா பகமென்றும்கூறுதல் பிரத்தியக்ஷ விரோதமன்றோ?வெனில், நீ கூறியது உண்மைதான். அந்த ஏகத்துவம் வியாபகத்துவ முதலியன நித்திய வஸ்துவின் விசேடவம்சமாதலால் அவை

மாயையாகிய அஞ்ஞானத்தால் மறைக்கப்பட்டிருக்கின்றன. அதனாலே அஞ்ஞானிகளாகிய ஜீவர்களுக்குத் தோற்றுகிற தில்லை. அஞ்ஞானிகளின் பிராந்தி ஞானத்திற்குத் தோற்றுமைபற்றி விரோதமாகாது. இப்பிராந்தி ஞானத்தின்சாதனமாகிய பிரத்தியக்ஷப் பிரமாணத்தினும் பிரபலமும் பிரஹ்ம ஞானத்தின் சாதனமும் ஆகிய சுருதிப்பிரமாணத்தாற் சித்தித்துள்ளதாதலாலென்க.

பிரத்தியக்ஷப் பிரமாணமாகிய சுரோத்திர முதலிய இந்திரியங்கள் எதார்த்த ஞானத்தின் சாதனங்களென்று சாஸ்திரங்களிற் கூறப்பட்டிருக்க அவற்றையிங்குப் பிராந்தி ஞானத்தின்சாதனங்களென்றுகூறுதல் விரோதமன்றோவெனில், எதார்த்த ஞானத்தின் சாதனங்களெனக் கூறியது வியவகாரிக வஸ்துக்களை மெய்யாகக்கொள்ளுகின்ற அஞ்ஞானுவஸ்தையின் பொருட்டாமென முன்னரே கூறப்பட்டிருத்தல் காண்க. இங்கு நித்தியவஸ்துவின் சத்திலக்கணப்பிரசங்கத்தின் மத்தியில் அஞ்ஞானிகளாகிய ஜீவர்களுக்குத் தோற்றுகிறதில்லையென்று ஜீவவியவகாரம் காணப்படுகின்றமையால் அந்த ஜீவர்கள் என்னுஞ் சொல்லிற்கு உண்மையாகிய அருத்தம் யாது என்றுகேட்கின் ஜீவர்கள் என்னுஞ் சொல்லிற்கு அஞ்ஞான சம்பந்தமுடைய நித்தியவஸ்து என்பது அருத்தமாமென்றறிக.

ஜீவர்களென்னும் சொல்லிற்குப்பொருள் நித்தியவஸ்துவென்று கூறின் முன் உபோற்காதப் பிரகாணத்தில் நித்தியவஸ்து ஏகமெனக் கூறப்பட்டிருக்கின்றது, அந்த ஏகமாகிய நித்திய வஸ்துவினை இங்கு ஜீவர்களெனக்கூறின் ஜீவர்கள் பலராகக் காணப்படுதலால் முன் ஏகமெனக்கூறிய நித்திய

வஸ்துவைப் பின்பு நானா வெனக்கூறுதல் வியாகாத (முன்னுக்குப்பின் விரோத) மன்றோவெனில், வியாகாதமன்று. எதனாலெனில், ஏகமாகிய மஹாகாயமே நானாவாகிய கடாகாயங்கள் எனக்கூறுகின்ற வார்த்தைகளின் விரோதம் அவ்வாகாயத்தின் உபாதிகளாகிய கடங்களின் நானாத்துவத்தை விஷயஞ்செய்வதன்றி உபகித (கடங்களாகிய உபாதிகளையுடைய) ஆகாயத்தை விஷயஞ்செய்யாமையால் வியாகாதமாகாததுபோல ஜீவர்களென்னும் நானாத்துவம் சோபாதிக நித்தியவஸ்துவின் உபாதிகளாகிய சரீராதிகளை விஷயஞ்செய்வதன்றி உபகித (சரீராதிகளாகிய உபாதியுடைய) நித்திய வஸ்துவை விஷயஞ்செய்யாமையா லெனவறிக.

நித்திய வஸ்துவின் விசேடவமிசங்கள் அஞ்ஞானத்தால் மறைக்கப்பட்டிருத்தலால் அஞ்ஞானிகளாகிய ஜீவர்களுக்குத் தோற்றுகிறதில்லை யென்று முன்னர் கூறப்பட்டது. அவ்வாறு மறைக்கின் அம்மறைப்பால் நித்தியவஸ்துவின் சொரூபமறைந்துபோகுக, அவ்வளவன்றி அந்த நித்திய வஸ்துவின் வேறும் இல்லாததுமாகிய பிரபஞ்சம் ஏன்தோற்றுகின்றதெனில்,

அவ்வஞ்ஞானமானது ஆவரண (மறைப்புச்) சத்தி விக்ஷேப (தோற்றச்) சத்தியென்னும் இருவகைச் சத்திகளையுடையதாயிருக்கின்றது. மேலும் அவ்வஞ்ஞானந்தானே மூலாஞ்ஞானம், தூலாஞ்ஞானமென இரண்டுவகையாயிருக்கின்றது. அவற்றுள் மூலாஞ்ஞானமானது நித்திய வஸ்துவை மாத்திரம் மறைக்கின்றது. தூலாஞ்ஞானமானது அநித்தியமாகிய கடாதிப்பிரபஞ்ச வஸ்துக்களையும் அவற்றை உபாதியாகக் கொண்டிருக்கின்ற நித்திய வஸ்துவையும் கூடவே

மறைக்கின்றது. நித்திய வஸ்துவை மாத்திரம் மறைக்கின்ற அம்மூலாஞ்ஞானமானது காரணகாரிய பேதத்தால் இரண்டு வகையாயிருக்கின்றது. அவற்றுட் காரியவடிவ மூலாஞ்ஞானத்தின் விக்ஷேபசத்தியானது நித்திய வஸ்துவினிடத்தில்லாத கடாதிப்பிரபஞ்ச வஸ்துக்களாகிய அர்த்த(விஷய)மாகவும், அவற்றையறிதற்குரிய சுரோத்திராதி இந்திரிய முதலிய ஞான சாமக்கிரி வடிவமாகவும் பரிணமிக்கின்றது. அவ்வஞ்ஞானத்தின் ஆவரண சத்தியானது அப்பிரபஞ்ச வடிவத்தால் நித்திய வஸ்துவின் சேதன, ஆநந்த முதலிய விசேட வமிசத்தை மறைக்கின்றது. மற்றைய காரணவடிவ மூலாஞ்ஞானத்தின் ஆவரண சத்தியும் விக்ஷேப சத்தியும் மேற்கூறிய காரியவடிவ மூலாஞ்ஞானத்தின் இருவகைச் சத்திகளின் காரியங்களாகிய மறைப்பிற்கும் தோற்றத்திற்கும் காரணங்களாகின்றன. அதாவது *பிரமாண (நித்திய வஸ்து) முதலியவற்றின்கண் தோஷ வடிவங்களாயிருந்து மறைப்பித்தலும் தோற்றுவித்தலும் செய்கின்றன. எவ்வாறெனில்,

நித்தியவஸ்துவாகிய அர்த்தத்தை யறிவிக்கும் பதங்கள் இரண்டுண்டு. அவை யான் என்பதும் தான் என்பதுமாம். அவற்றுள் யானென்பது சோபாதிக வஸ்துவையும், தானென்பது நிருபாதிக வஸ்துவையும் அறிவிப்பனவாம். எதனாலெனில், யான் என்னும் சொல்லானது நீ, அவன், அவள், அது என்பன முதலிய இனமுள்ளதாயிருக்கின்றது.

---

* பிரமாண முதலியவற்றின் இலக்கணங்களும், தோஷங்களும் விரிவஞ்சி இங்குக்கூறுமல் விடுக்கப்பட்டன. அவற்றையறிய விருப்பமுள்ளார் விசாரசாகர முதலிய விரிந்த நூல்களிற் கண்டுகொள்க.

அதனல் அது நித்திய வஸ்துவின் சோபாதிக வடிவங்களை அறிவிப்பதாகின்றது. தான் என்னும் சொல்லானது யான் என்னும் சொற்போல இனமுள்ளதாகாமல் இனமில்லாததாயிருக்கின்றது. அதுவுமன்றி மேற்கூறிய சோபாதிக வடிவங்களை அறிவிக்கும் பதங்களிலெல்லாம் யான்தான் வந்தேன், நீதான் இருக்கின்ருய், அவன்தான் போகின்ருன், அவள்தான் சமைக்கின்ருள், காற்றுத்தான் சலிக்கின்றது, ஜலந்தான் குளிர்கின்றது என அநுசூதமா (உள்ளீடா)ய்க் கலந்திருத்தலால் யான் இருக்கிறேன், கடம் இருக்கிறது, படம் இருக்கிறது எனப் பிரபஞ்சப் பொருள்களிலெல்லாம் அநுசூதமாய்க்கலந்து ஏகமாயிருக்கின்ற சத்துவடிவமாய் இனிக்கூறப்படும் நிருபாதிக நித்தியவஸ்துவை அறிவிப்பதாயிருக்கின்றது. அந்த நிருபாதிக நித்தியவஸ்துவானது தன்னிடத்து அஞ்ஞான மொடுங்கியிருக்கும்பொழுது சுத்தப்பிரஹ்மமென்னும் பெயரால் வியவகரிக்கப்படுகின்றது. அவ்வஞ்ஞானம் வெளிப்பட்டுத் தன்னை வியாபிக்கும்பொழுது அது அஞ்ஞான விசிட்டசேதனம் என்ருயினும் அஞ்ஞான உபகித சேதனமென்ருயினும் வியவகரிக்கப்படுகின்றது. அதுவே இங்குச் சோபாதிக நித்தியவஸ்துவென்றுகூறப்படுகின்றது.

அப்படியாஞற் சோபாதிகம் என்பதன்பொருள் யாதெனில், உபாதியோடுகூடியதைச் சோபாதிகமென்பர். உபாதியென்றது இங்கு வியாவர்த்தகஞ்செய்யும்வஸ்துவை. அதாவது தனதுஆசிரயவஸ்துவை அன்னியவஸ்துக்களினின்றும் வேறு பிரித்தறிவிக்கும் வஸ்துவை. அந்த வியாவர்த்தகமானது தனது ஆசிரயவஸ்துவிற் சம்பந்திப்பது சம்பந்தியாதது என்னும் பேதத்தால் இருவகைப்படும். அவற்றுள் சம்

பந்தமுடைய வியாவர்த்தகத்தை விசேடணமென்பர். சம்பந்தமின்றிய வியாவர்த்தகத்தை உபாதியென்பர். விசேஷணமுடையது விசிட்டமென்றும் உபாதியுடையது உபகிதமென்றும் கூறப்படும். அவ்விசேஷண உபாதிகளின் இலக்கணம் யாவையெனில், தனது ஆசிரயவஸ்துவின் சொரூபத்தில் அல்லது கிரியையிற் சம்பந்த முடையதாய் அவ்வஸ்துவை அன்னிய வஸ்துக்களினின்றும் வேறு பிரித்தறிவிப்பது விசேஷணமெனப்படும். அஃதெவ்வாறெனில், தண்டி (தண்டமுடையவன்) வருகின்றான் என்னுமிடத்துத் தண்டமானது தனது ஆசிரயமாகிய புருடனது நடத்தற்கிரியையிற் சம்பந்த முடையதாய் (தானும் உடன்வருவதாய்) அப்புருடனை அன்னிய (தண்டமின்றிய) புருடரினின்றும்வேறு பிரித்தறிவிக்கின்றது. அதனாலே அத்தண்டம் அப்புருடனுக்கு விசேஷணமாகின்றது.

தண்டி புசிக்கின்றான் என்னுமிடத்துத் தண்டமானது தனது ஆசிரயமாகிய புருடனது போசனக்கிரியையிற் சம்பந்தமில்லாததாய் (தான்புசிக்காததாய்) அப்புருடனை அன்னிய (தண்டமின்றிய) புருடரினின்றும் வேறு பிரித்தறிவிக்கின்றது. அதனாலே அத்தண்டம் அப்புருடனுக்கு உபாதியெனப்படுகின்றது. இங்கு ஆசிரய வஸ்துவின் சொரூபமுதலியவற்றிற் சம்பந்த முடைமையும் சம்பந்தமின்மையுமே முறையே விசேடண உபாதிகளுக்குப்பேதமாம். வியாவர்த்தகத் தன்மையிற் பேதமில்லையெனவறிக. தண்டமொன்றே அஃதுடையவனுக் (தண்டிக்)கு நடக்கும்பொழுது அவனது நடத்தற்கிரியையிற் சம்பந்தமுடைமையால் விசேடணமும், புசிக்கும்பொழுது அவனது புசிப்புக்கிரியையிற் சம்

பந்தமில்லாமையால் உபாதியுமாகின்றது. இத்திருஷ்டாந்தம் போலத் தார்ஷ்டாந்தத்தில்,

ஜீவனுக்கு நான் கர்த்தா, போக்தா, சுகி, துக்கி என்னும் அனுபவமுண்டாகியவிடத்து அந்தக்கரணமானது தனது ஆசிரயமாகிய ஜீவசேதனத்தினுடைய ஆபாச பாகத்தில் அல்லது அவனுடைய கர்த்திருத்துவ முதலிய விருத்தி (நான் இதனைச் செய்கின்ற கர்த்தா என்பது முதலிய நினைப்பு அல்லது பரிணாம) வடிவமாகிய கிரியையிற் சம்பந்தமுடையதாய் அதாவது தானும் அந்த அந்த ஆகாரங்களை யடைவதாய்த் தனது ஆசிரயமாகிய ஜீவ சேதனத்தை அன்னிய (ஈசுர) சேதனத்தினின்றும் வேறு பிரித்தறிவிக்கின்றது. அதனாலே அவ்வந்தக்கரணம் ஜீவசேதனத்திற்கு விசேடண மாகின்றது.

ஜீவனுக்கு நான் சாக்ஷியென்னும் அனுபவமுண்டாகியவிடத்து அந்தக்கரணமானது தனது ஆசிரயமாகிய ஜீவசேதனத்தினுடைய விசேஷியபாகமாகிய சாக்ஷியினது [கேவலஅந்தக்கரணத்தையும் அதன்றர்மமாகிய சுக துக்க வடிவவிருத்திகளையும் பிரகாசிப்பிக்கின்ற] சொப்பிரகாச ஞான சொரூபத்தில் அல்லது அதிஷ்டானத்தன்மை வடிவ காரியத்திற் சம்பந்தமில்லாததா யிருந்துகொண்டு தனது ஆசிரய வஸ்துவாகிய ஜீவசேதனத்தை அன்னிய (பிரஹ்ம) சேதனத்தினின்றும் வேறு பிரித்தறிவிக்கின்றது. அதனாலே அவ்வந்தக்கரணம் ஜீவசேதனத்திற்கு உபாதியாகின்றது.

அப்படியானால் (ஜீவனிடத்து அந்தக்கரணத்திற்கு ஒருகாற் சம்பந்த முண்மையும் மற்றொருகாற் சம்பந்த மின்மையுங் கூறினால்) அவ்விசேடணத்தன்மையும் உபாதித்தன்மை

யும் நிற்றலு மோடுதலும்போல வேறு வேறு சுபாவமுடைய தாகவும் ஒன்றுக்கொன்று விரோதமுடையதாகவு மிருக்கின் றனவே, அத்தன்மைய விரோதமுடைய விரண்டு தருமங் களும் ஜீவனுகிய வொருதருமியிலிருக்கமாட்டா. அவ்வா றின்றி யிருக்குமெனக்கூறின் இருட்டாதித்தன் என்றாற் போல அவ்வார்த்தை வியாகாதத்தை யடையுமேயெனில,

வியாகாதமாகாது. எதனுலெனில், அவ்வொரே ஜீவ சொரூபத்தில் அஞ்ஞானமும் அதன் காரிய வடிவ தேகாதி களுமாகிய அநித்தியமும், அவற்றிற் கதிஷ்டானமாகிய சொப்பிரகாச சேதன வடிவ நித்தியமும் என்று கூறுகின்ற இருவகை வஸ்துக்களும் கலந்துநின்று ஜீவனென்னும் சொல் லிற்கு முக்கியார்த்தமாகின்றன. அவையிரண்டும் வேறுவேறு நின்று பொருள்படுமிடத்து அவ்வநித்திய வஸ்துவும் நித்திய வஸ்துவும் தனித்தனி அமுக்கி (இலக்கி)யார்த்தமாகின்றன.

எவ்வாறெனில், ஒரு ஞானியானவன் யான் நடக்கின் றேன்,புசிக்கின்றேன் என்னுமிடத்துச்சாக்ஷியினின்றுசரீரத் திரயங்களோடுகூடிய சிதாபாசனை வேறு பிரித்தறிந்து அச் சிதாபாசனை மாத்திரமே யான் என்று ஜீவவாசகத்தாற் கூறு கின்றான். அங்கு நடத்தல் புசித்தற் கிரியைகளில் அந்தக் காணம் சம்பந்தித்தலால் அது விசேடணமாகின்றது. அந்த ஞானியே சிதாபாசனினின்று வேருகப் பிரித்தறியப்பட்ட கூடஸ்தனிடத்து யான் நிருவிகாரியென்று இலக்கணையி னுலே ஜீவவாசகமாகிய யான் என்னும் சொல்லை உபயோகிக் கின்றான். அங்கு நிருவிகாரத்தன்மையில் அந்தக்காணத் திற்குச் சம்பந்தமின்மையால் அது உபாதியாகின்றது. ஆக வே ஒரே அந்தக்காணம் ஒரே ஜீவனிடத்துள்ள அநித்திய

மாகிய சிதாபாச பாகத்திற்கு விசேஷணமும் நித்தியமாகிய சேதனபாகத்திற்கு உபாதியுமாகின்றபடியால் அச் சிதாபாச பாகமும், சேதனபாகமும் தனித்தனியே முக்கியார்த்த வடிவ ஜீவசொரூபத்தின் ஏகதேசத்தை யறிவித்து அமுக்கியார்த்தங்களாய் வேறு வேருயிருத்தலால் ஒன்றிற்கு விசேஷணமும் மற்ருென்றிற்கு உபாதியுமாதல்பற்றி வியாகாத விலக்கணம் சம்பவியாமை காண்க.

அது வியாகாதமன்ருயினும் அவ்விசேடண வுபாதிகளினிலக்கணங்களைப் பலதரங் கூறுதல் புநருத்தி (கூறியது கூறல்) என்னும் தோஷமாகாதோவெனில், அவ்வாறு பலதரங் கூறினும் அவை முன்னர் ஜீவசொரூபத்தில் அந்தக்கரணத்திற்குள்ள சம்பந்தத்தின் உண்மை யின்மைகளும், பின்னர் ஜீவசொரூபத்திற்குள்ள முக்கியாமுக்கியார்த்தங்களுமாகிய வேறுவேறு பொருள்களை விளக்குதலாற் புநருத்தியாகாதென்க.

ஆனுல் ஒரே ஜீவசொரூபத்திற்கு முக்கியமும் அமுக்கியமுமாகிய இரண்டுபொருள் கூறியது தேவரீர் கற்பிதமா? பிரமாண சித்தமா?வெனில், அவ்வொரே ஜீவசொரூபத்திற்கு முக்கியார்த்தத்தன்மையும், அமுக்கியார்த்தத் தன்மையும் பஞ்சதசியின் திருப்தி தீபத்து ஒன்பது முதல் பதின்மூன்று வரையாகிய ஐந்து சுலோகங்களால் ஸ்ரீ பாரதிதீர்த்த ஆசாரியர் கூறியிருத்தலாற் பிரமாண சித்தமாம். எமது கற்பிதமன்றென்க. ஆகையாற் சமுசயமுள்ளார் அங்குப்பார்த்துத் தெளிந்துகொள்க.

இனிமேற் கூறப்பட்ட அஞ்ஞான விசிட்ட சேதனமானது ஜீவேசுரத்தன்மையின் ஆசிரயமாகிய அஞ்ஞானமும்

அதிற்பிரதிவிம்பித சிதாபாசமும் அவற்றின் அதிஷ்டான சேதனமும் சேர்ந்து அற்பஞ்ஞத்துவாதி குணங்களோடு கூடிய ஜீவனெனவும், சர்வஞ்ஞத்துவாதி குணங்களோடு கூடிய ஈசுரனெனவும் கூறப்படும். அவ்வஞ்ஞானம் மலினத் தன்மையும் சுத்தத்தன்மையுமாகிய ஏதுக்களால் முறையே அவித்தையெனவும், மாயையெனவும் பிரிவை யடைந்திருக் கின்றன. அந்த அவித்தையும் மாயையும் முறையே ஜீவ ஈசுரருக்குக் காரணசரீர மாகின்றன. மேலும் அவ் வவித் தையானது மலினத்தன்மை காரணமாகப் பலவும் பரிச் சின்னமுமாயிருத்தல்பற்றி அவ்வவித்தையை ஆசிரயித்துள்ள [illegible]முமாயிருத்தல்பற்றி அவ்வவித்தையை ஆசிரயித்துள்ள ஜீவர்களும் பலரும் பரிச்சின்னருமாகின்றனர். மாயையானது [illegible] ஏகமும் வியாபகமுமாயிருத்த [illegible] ஏகமும் வியாபகமுமா [illegible]

எவ்வாறெனி[illegible] றேன்,புசிக்கின்றே[illegible] [illegible]ஸ்தலத்தில் நேத்திரமுதலிய திரயங்களோடு[illegible] சிதாபாச[illegible] [illegible]தோஷத்தோடு கூடிய புருஷனுக்கு அத்தோஷத் [illegible]சம்பந்தத்தால் எதிரிற்கிடக்கின்ற கயிற்றினிடத்து எவ் [illegible]முதலில் இது என்னும் வடிவினதாகிய சாமானிய [illegible] உண்டாகின்றதோ விசேடஞான முண்டாகிற [illegible]யோ அவ்வாறு பிரமாண முதலியவற்றின் தோஷத் தோடு கூடிய சோபாதிக நித்திய வஸ்துவாகிய ஜீவனுக்கு அத்தோஷத்தின் (காரண வடிவ மூலாஞ்ஞானத்தின்) சம்பந் தத்தால் யான்இருக்கிறேன் என்று சாமானியமாகிய கற்பித உணர்வுண்டாகின்றது. ஆனல் எதனலே அவ்வுணர்வு கற்பித மென்று கூறப்பட்டதெனில், யான் என்னும் சொல் நீ,

அவன், அவள், அது என்பவற்றையும், இருக்கிறேன் என்னுஞ்சொல் நிற்கிறேன், போகிறேன் என்பன முதலியவற்றினையும் இனங்களாகத் தழுவி நிற்றலானும், அத்தன்மைய இனம் கற்பிதமாகிய துவைதத்திற் சித்தித்தலன்றிச் சத்தியமாகிய அத்துவைதத்திற் சித்தியாமையானும், அந்த அத்துவைதரூபம் அகண்டைகரசமுந் தாமே தானாயிருக்கின்ற நித்திய வஸ்துவிற்கு அவ்வுணர்வு வேண்டாமையானும், அது கற்பிதமாகிய அஞ்ஞானத்தின் காரியமாதலானும் அவ்வுணர்வு கற்பிதம் என்று கூறப்பட்டதென்றறிக. அப்பால் அச்சாமானிய உணர்வு வாயிலாக இருக்கின்ற யான் யாவன் எனத் தன்னிடத்து ஐயவினா வுண்டாகின்றது. ஆனாற் றன்னைக்குறித்து ஐயமுண்டாதலை யெவ்விடத்துங் கேட்டதில்லையேயெனில், அன்னியரிடத்து ஏன் கேட்கவேண்டும். தன்னிடத்திலேயே பிரத்தியக்ஷமாக அனுபவிக்கின்ற அனுபவப் பிரமாண மிருத்தலாலென்க. அவ்வையவுணர்ச்சி தன்னிடத்தில் எவ்வாறனுபவிக்கப்படுகின்றதெனில், நீ மிகுந்த சுழுத்தனாய் நித்திரை செய்யும் காலத்தில் அன்னிய னொருவன் வந்து உன்னைத் திடீரென்றெழுப்பி உன்னிடத்துள்ள யாதாயினுமோர் விஷயத்தைக் குறித்துவினாவினால் அவ்வினாவிற்குச் சாக்கிரத்தில் விடைகூறினாற்போல, உடனே விடை கூறுகின்றாயா சொல்லெனில், சாக்கிரத்திற்போல உடனே விடைகூற முடியவில்லை. சொற்பகால மொன்றுந் தெரியாமல் மயங்கியிருந்து சாகரணமடைந்த (கருவிகளோடு கூடிய) பின்புதான் வினாவின் கருத்தறிந்து விடை கூறுகின்றேனென்று சொல்லுகின்றாய். இங்கு ஒரு நாழிகை அல்லது ஒரு சாமகாலத்தளவு கரணங்களின் சம்பந்தமின்றி அஞ்ஞானத்தோடு கூடியிருந்த உனக்கு இவ்வளவு

அதிற்பிரதிவிம்பித சிதாபாசமும் அவற்றின் அதிஷ்டான சேதனமும் சேர்ந்து அற்பஞ்ஞத்துவாதி குணங்களோடு கூடிய ஜீவனெனவும், சர்வஞ்ஞத்துவாதி குணங்களோடு கூடிய ஈசுரனெனவும் கூறப்படும். அவ்வஞ்ஞானம் மலினத் தன்மையும் சுத்தத்தன்மையுமாகிய ஏதுக்களால் முறையே அவித்தையெனவும், மாயையெனவும் பிரிவை யடைந்திருக் கின்றன. அந்த அவித்தையும் மாயையும் முறையே ஜீவ ஈசுரருக்குக் காரணசரீர மாகின்றன. மேலும் அவ் வவித் தையானது மலினத்தன்மை காரணமாகப் பலவும் பரிச் சின்னமுமாயிருத்தல்பற்றி அவ்வவித்தையை ஆசிரயித்துள்ள ஜீவர்கள் பலரும் பரிச்சின்னருமாகின்றனர். மாயையானது சுத்தத்தன்மை காரணமாக ஏகமும் வியாபகமுமாயிருத்த லால், அதனை ஆசிரயித்துள்ள ஈசுரன் ஏகமும் வியாபகமுமா யிருக்கின்றான். அந்த ஜீவ ஈசுரருள் ஜீவனாகிய சோபாதிக நித்திய வஸ்துவிற்கு,

கயிற்றுப்பாம்புப் பிராந்தி ஸ்தலத்தில் நேத்திரமுதலிய வற்றின் தோஷத்தோடு கூடிய புருஷனுக்கு அத்தோஷத் தின் சம்பந்தத்தால் எதிரிற்கிடக்கின்ற கயிற்றினிடத்து எவ் வாறு முதலில் இது என்னும் வடிவினதாகிய சாமானிய ஞானமே உண்டாகின்றதோ விசேடஞான முண்டாகிற தில்லையோ அவ்வாறு பிரமாண முதலியவற்றின் தோஷத் தோடு கூடிய சோபாதிக நித்திய வஸ்துவாகிய ஜீவனுக்கு அத்தோஷத்தின் (காரண வடிவ மூலாஞ்ஞானத்தின்) சம்பந் தத்தால் யான் இருக்கிறேன் என்று சாமானியமாகிய கற்பித உணர்வுண்டாகின்றது. ஆனால் எதனாலே அவ்வுணர்வு கற்பித மென்று கூறப்பட்டதெனில், யான் என்னும் சொல் நீ,

அவன், அவள், அது என்பவற்றையும், இருக்கிறேன் என்னுஞ்சொல் நிற்கிறேன், போகிறேன் என்பன முதலியவற்றினையும் இனங்களாகத் தழுவி நிற்றலாலும், அத்தன்மைய இனம் கற்பிதமாகிய துவைதத்திற் சித்தித்தலன்றிச் சத்தியமாகிய அத்துவைதத்திற் சித்தியாமையாலும், அந்த அத்துவைதமும் அகண்டைகாசமுந் தாமே தானாயிருக்கின்ற நித்திய வஸ்துவிற்கு அவ்வுணர்வு வேண்டாமையாலும், அது கற்பிதமாகிய அஞ்ஞானத்தின் காரியமாதலாலும் அவ்வுணர்வு கற்பிதம் என்று கூறப்பட்டதென்றறிக. அப்பால் அச்சாமானிய உணர்வு வாயிலாக இருக்கின்ற யான் யாவன் எனத் தன்னிடத்து ஐயவினா வுண்டாகின்றது. ஆனாற் றன்னைக்குறித்து ஐயமுண்டாதலை யெவ்விடத்துங் கேட்டதில்லையேயெனில், அன்னியரிடத்து ஏன் கேட்கவேண்டும். தன்னிடத்திலேயே பிரத்தியக்ஷமாக அனுபவிக்கின்ற அனுபவப் பிரமாண மிருத்தலாலென்க. அவ்வையவுணர்ச்சி தன்னிடத்தில் எவ்வாறனுபவிக்கப்படுகின்றதெனில், நீ மிகுந்த சுழுத்தனாய் நித்திரை செய்யும் காலத்தில் அன்னிய னொருவன் வந்து உன்னைத் திடீரென்றெழுப்பி உன்னிடத்துள்ள யாதாயினுமோர் விஷயத்தைக் குறித்துவினாவினால் அவ்வினாவிற்குச் சாக்கிரத்தில் விடைகூறினாற்போல, உடனே விடை கூறுகின்றாயா சொல்லெனில், சாக்கிரத்திற்போல உடனே விடைகூற முடியவில்லை. சொற்பகால மொன்றுந் தெரியாமல் மயங்கியிருந்து சாகரணமடைந்த (கருவிகளோடு கூடிய) பின்புதான் வினாவின் கருத்தறிந்து விடை கூறுகின்றேனென்று சொல்லுகின்றாய். இங்கு ஒரு நாழிகை அல்லது ஒரு சாமகாலத்தளவு கரணங்களின் சம்பந்தமின்றி அஞ்ஞானத்தோடு கூடியிருந்த உனக்கு இவ்வளவு

மயக்க முண்டாயின் நெடுங்காலம் கரண சம்பந்தமில்லாமல் அஞ்ஞானத்தோடுகூடியிருக்கின்ற சேதனனுக்கு அவ்வளவு மயக்கமும் அம் மயக்கத்தால் ஐயமுமுண்டாதல் தகுதியே யாம்.

அப்படியானால் ஜீவனுக்குப்போல ஈசுரனுக்கும் அவை யுண்டாகவேண்டுமேயெனில், அவ்வீசுரனுக்கு உபாதியாகிய மாயை சுத்தமாயிருத்தலால் ஐயமுண்டாகிறதில்லை. ஆயினும் அம்மாயா சம்பந்தத்தா லுளவாகின்ற சர்வஞ்ஞத்தன்மை முதலிய கற்பிதவுணர்வாதிகளுண்டென்க.

மேற்கூறியவாறு தன்னைக்குறித் தையமடைந்த ஜீவ னுச்கு அப்பால் யாதுண்டாயிற்றெனில், தன்னிடத்து ஐய முண்டாகிய அப்பொழுதே அச்சேதனனை ஆசிரயித்திருக் கின்ற காரியவடிவ மூலாஞ்ஞானத்தின் விக்ஷேப சத்தி யானது அத்தியஸ்த விஷயமாகிய கடாதிப்பிரபஞ்ச வடிவ மாகவும் அதனை அறிதற்குரிய பிராந்திஞான வடிவமாகவும் அதாவது பிராந்தி ஞானத்தின் சாதனமாகிய இந்திரியாதி களின் வடிவமாகவும் பரிணமத்தை யடைகின்றது. அதே காலத்தில் அவ்விக்ஷேப சத்தியின் காரியங்களைக்கொண்டு முறையே நித்திய வஸ்துவின் அசங்கத்தன்மை, சேதனத் தன்மை, ஆநந்தத்தன்மை, அத்துவைதத்தன்மை, வியா பகத்தன்மை முதலிய விசேட அமிசங்களையும், அவற்றின் ஞானங்களையும் ஆவரணசத்தி மறைக்கின்றது. காரணவடிவ மூல வஞ்ஞானமானது அந்த நித்திய வஸ்துவினிடத்துத் தோஷவடிவ காரணமாயிருந்து தனது இருவகைச் சத்திக ளாலும் மேற்கூறிய பிரபஞ்சத்தைத் தோற்றுவித்தலும், நித்திய வஸ்துவின் விசேட வமிசங்களை மறைப்பித்தலும்

செய்கின்றது. அதனாலே இருக்கின்றயானென்று ஐய முற்றிருந்த சோபாதிக நித்திய வஸ்துவிற்குப் பிரமாதிரு முதலியவற்றின் தோஷங்கள்காரணமாக யான் இத்தேகேந் திரியாதி சங்காதமுடைய மனிதன், அஞ்ஞானி, துக்கி, ஈசு ராதிகளினும் வேறானவன், எட்டுச்சாணளவுள்ளவன் (பரிச் சின்னன்) என்பன முதலியனவாகப் பிராந்திஞான முண்டா கின்றது. இவ்வாறு தன்னைத் தேகேந்திரியாதிகளோடு கூடிய மனிதனாகக்கண்ட விபரீத ஞானத்தால் அத்தேகாதி களின் றொழில்களைத் தன்றொழிலாகக்கருதி இத்தொழி லுக்கு யான் கர்த்தாவென்றும், அத்தேகாதிகட்குளவாகுஞ் சுகதுக்கங்களைத் தனக்குளவாயினவாகக் கருதி, யான் இப் போகங்களைப் புசிக்கின்ற போக்தாவென்றும் அபிமானித்து அவ்வபிமானத்தாற் கருமங்களிற் கட்டுப்பட்டு அக்கரும பந்தத்தால் அச்சோபாதிக (தேகாதியுபாதியுடைய) சைதன் னியம் அக்கருமங்களில் உயர்வுதாழ்வுகளுக்கேற்ப உயர்வு தாழ்வுகளாகிய சரீரங்களையடைந்தும், விடுத்தும் வருந்து கின்றது. இவ்விதமாக இகபரபோக மோக்ஷங்களி லிச்சை யும் அவற்றை யடைதற்குரிய சாதனங்களிற் பிரவிர்த்தியும் மேற்கூறிய ஜீவசேதனத்தின் ஆபாச பாகத்தில் மாத்திரம் உண்டாகின்றன. இவ்வாறே ஈசுர சேதனத்தின் விசேஷ (மாயையோடு கூடிய சிதாபாச) பாகத்தில் ஜீவர்களா லிச்சிக் கப்பட்ட போகமோக்ஷங்களைக் கொடுக்குந்தன்மை முதலி யன இருக்கின்றன. ஜீவேசுரர்களுடைய அதிஷ்டானபாகம் அசங்கமாயும், அதாவது அவர்களுடைய ஆபாசபாகத்துள்ள கற்பிதபேதத்தின் சம்பந்தமின்றியதாயும், அத்துவைத மாயும், பரிபூரணமாயும், அநாதிநித்தியமாயும் இருக்கின்றது. ஆகவே ஆபாசனாகிய ஜீவன் ஜனனமரணமாகிய பாவா

பாவங்களையும் அவற்ருலாகிய சர்வதுக்கங்களையும் அடைந்து வருந்துங் காலத்தும் அதிஷ்டான வடிவ ஜீவன் (கூடஸ்தன்) அப் பாவாபாவங்களின் சம்பந்தம் அற்பமுமின்றி என்று நிர்விகாரியாயிருக்கின்றது. இந்தக் கூடஸ்த சொரூபத்தின் இருப்பே ஜீவனிடத்துள்ள சத்துத்தன்மையின் நித்தியப் பிராப்தியாம். அதனையுடைய கூடஸ்தசொரூபம் நித்தியப் பிராத்தமாம்.

ஜீவேசுரருக்கு இங்குக் காரணசரீரமுடைமை மாத்திரம் கூறியிருத்தல்பற்றிப் பிரமிக்கலாகாது. மற்றைய தூல சூக்கும சரீரங்கள் அவசியமின்மைபற்றிக் கூறப்படவில்லை. அவ்விரண்டு சரீரங்களினுடைமை மேல் மஹாவாக்கியப் பிரகாணத்திற் கூறப்படும். இப்பிரகாணத்தாற் சத்திலக்கணங் கூறும் வாயிலாகச் சீவனுக்குத் தனது சத்து வடிவத்தின் நித்தியப் பிராப்தத்தன்மை காட்டப்பட்டது.

---

## ௩-வது சித்திலக்கணப் பிரகரணம்.

இப்பிரகரணத்தாற் சித்தினது இலக்கணம் நிரூபிக்கப் படுகின்றது. எப்படியெனில், சித்தின் இலக்கணமாவது எந்தக்காலத்திலும் தனக்கு வேருகிய வஸ்துக்களால் விளங்குதலும், குன்றுதலுமின்றிச் சுயமாகவே விளங்குதல்என்று முன்னர் உபோற்காதப் பிரகாணத்திற் கூறப்பட்டிருத்தல் பற்றிப் பிரபஞ்சப் பொருள்களெல்லாம் கடம் விளங்குகின்றது, படம் விளங்குகின்றது என ஒவ்வொன்றும் விளங்குதலால் அவையெல்லாம் சித்தாகவேண்டுமெனச் சங்கிக்கக் கூடும். அச்சங்கை பொருத்தமுடையதன்று. எதனாலெனில்,

பிரபஞ்ச விஷயங்களெல்லாம் ஜடமாதலாலென்க. எதுபோ லெனில், மழைக்காலத்திரவிருளில் ஜடமாய் விளங்காதிருந்த குட்டியச்சுவரானது பகற்காலத்தி லொருவகைப் பிரகாசம் அல்லது இருவகைப் பிரகாசங்களைப்பெற்றுத் தானும் பிர காச வஸ்துப்போலக் காணப்படுகின்றது. அவ்வாறே பிர பஞ்சப் பொருள்களு மெனவறிக.

அப்படியானுற் திருஷ்டாந்த தார்ஷ்டாந்தப் பொருள் களைப் பிரகாசிப்பிக்கும் இருவகைப் பிரகாச வஸ்துக்க ளெவையெனில், இராக்காலத்தில் விளங்காதிருந்த குட்டியச் சுவரானது பகற்காலத்தில் எங்கும் ஒருவிதமாகவும் வியா பகமாகவும் விழுகின்ற சூரியப்பிரகாசத்தைப் பெற்றுத் தானும் பிரகாச வஸ்துப்போலக் காணப்படுகின்றது. அங்கு அப்பிரகாசமாகிய குட்டியச்சுவரைப் பிரகாச வஸ்துப்போல விளங்கச்செய்த அச்சூரிய(விம்ப)ப் பிரகாசம் எங்கும் வியா பகமாகச் பிரகாசித்தலாற் சாமானியமென்று கூறப்படும். அச் சூரிய(விம்ப)ப் பிரகாசத்தோடுகூடிய குட்டியச்சுவரின் பக்கத்தில் ஒரு கண்ணுடியைச் சாய்த்துப் பிடித்தால் அக் குட்டியச்சுவரில் முன்காணப்பட்ட சூரிய(விம்ப)ப் பிரகாசத் தோடு கண்ணுடியாலாகிய பிரதி விம்பப் பிரகாசமுஞ் சேர்ந்து இருவகைப் பிரகாசம் காணப்படுகின்றன. பிரதி விம்பப் பிரகாசமில்லாத அன்னியவிடங்களி லொருவகை (சூரிய)ப் பிரகாச மாத்திரம் காணப்படுகின்றது. இவை திருஷ்டாந்த வஸ்துவைப் பிரகாசிப்பிக்கின்ற இருவகைப் பிரகாசங்களாம். இத் திருஷ்டாந்தம்போல் எக்காலத்தும் உதித்தலு மொடுங்குதலுமின்றிச் சதோதயமாக விளங்கு கின்ற நித்திய வஸ்துவின் சித்துவடிவப் பிரகாசமானது

சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, மூர்ச்சை, பிரளய முதலிய எல்லாக் காலங்களிலும், எல்லாத் தேசங்களிலும் பிரபஞ்ச வடிவ எல்லாவிஷயங்களையும் தான் நிருவிகாரமா யிருந்து கொண்டு விளக்குகின்றது. அவையில்லாதகாலத்து அவற்றின் அபாவத்தையும் விளக்குகின்றது. இது விம்ப வடிவ சாமானியப் பிரகாச(விளக்க)மாம். இந்த நித்திய வஸ்துவின் சித்துவடிவ சாமானியப் பிரகாசத்தாற் பிரகாசிக்கப்படுகின்ற விஷயங்கள் அவ்விஷயங்களைக் கிரகிக்கும்பொருட்டு ஜீவர்களுடைய அந்தக்கரண விருத்தியானது ஒவ்வொரு விஷயாகாரங்களையடையும்போது அவ்வந்தக்கரண விருத்தியின்கண்ணுதிக்கின்ற ஆபாசவடிவ பிரதிவிம்பப் பிரகாசத்தாலும் பிரகாசிக்கப்படுகின்றன. இது விசேடப் பிரகாச (விளக்க) மாம். ஆகவே புத்திவிருத்தியின் சம்பந்தமுடைய விஷயங்கள் பிம்ப வடிவமும் பிரதி விம்ப வடிவமுமாகிய இருவகைப் பிரகாச வஸ்துக்களாலும் விளங்குகின்றன. புத்தியின் சம்பந்த மில்லாதபோது சாமானிய வடிவ வொருவகைப்பிரகாச வஸ்துவால் விளங்குகின்றன.

இந்த விம்ப வடிவ சித்தின் பிரகாசமும் பிரதி விம்ப வடிவ ஆபாசப்பிரகாசமும் தார்ஷ்டாந்த வஸ்துவைப் பிரகாசிப்பிக்கின்ற இருவகைப் பிரகாசங்களாம். இந்த இருவகைப் பிரகாசவஸ்துக்களாலும் விஷயங்கள் பிரகாசித்தலைப் பிரத்தியக்ஷவிளக்க (ஞான) மென்றும், விம்ப வடிவ ஒருவகைப் பிரகாச வஸ்துவால் விஷயங்கள் பிரகாசித்தலைப் பரோக்ஷ விளக்க (ஞான) மென்றும் கூறுகின்றனர். ஆனால் விளக்கமானது நித்திய வஸ்துவின் சிறசொரூபமென்று கூறப்படுதலால் அது ஏகமன்றோ? அந்த ஏகமாகிய விளக்கத்தைப்

பிரத்தியக்ஷமென்றும், பரோக்ஷமென்றும் பேதமாகக் கூறு தல் விரோதமன்றோ எனில், விரோதமன்று. எதனாலெனில், அந்தப்பேதம் விஷயங்களோடு புத்திக்குண்டாகின்ற சம்பந்தத்தின் உண்மையின்மைகளாலாகியதா யிருத்தலினென்க. எவ்வாறெனில், புத்தி (யானது உலோகாந்தகுந்தம் (ஈட்டியாகிய ஆயுதம்) போலப் பிரகாசப்பிரகாச வடிவமாயிருத்தலால் அதன்) விருத்தியி (வடிவ பிரகாச பாகத்தி)ன் சம்பந்தத்தால், அதாவது விருத்தி விஷயாகாரத்தை யடைதலால் விஷயாகாரத்தை யடைந்த புத்தி விருத்தியில் ஆபாசனானவன் மனோமய விஷயாகாரமாக உதயமாய் விஷய மாத்திரத்தை இது இன்ன விஷயமென்றறிகின்றான். அப்பொழுது அவ்விஷயம் அவனது ஞானத்திற்கு விஷயமாகுதலால் ஞாதத்தன்மை யுடையதாகின்றது. பின்னர் அப் புத்திக்கு விஷயத்தோடுண்டாகிய அச்சம்பந்தம் விடுபட்டபோது(புத்தியின் சம்பந்தத்தால் முன் மனோமய விஷயாகாரமாக உதயமாகிய) ஆபாசனுக்கு அச்சம்பந்தவிடுபாட்டால் விடுபாடுண்டாகின்றது. அப்பொழுது அவ்விஷயம் அஞ்ஞாதத்தன்மை யுடையதாகின்றது. மேற்கூறிய ஞாதத் தன்மையோடுண்டாகின்ற விளக்கத்தை பிரத்தியக்ஷமென்றும், அஞ்ஞாதத் தன்மையோடுண்டாகின்ற விளக்கத்தை பரோக்ஷமென்றும் கூறுகின்றனர். ஆகவே இப் பிரத்தியக்ஷ பரோக்ஷங்கள் ஞாதவஞ்ஞாதத் தன்மைகளாலும், அந்த ஞாதவஞ்ஞாதத் தன்மைகள் சிதாபாசனது சம்பந்தத்தினுண்மையின்மைகளாலும், ஆபாசனது சம்பந்தத்தினுண்மை யின்மைகள் விஷயத்தோடு புத்திக்குண்டாகின்ற சம்பந்தத்தின் உண்மையின்மைகளாலும் உண்டாதலாற் பிரத்தியக்ஷ பரோக்ஷ பேதம் புத்தியினதீனமாயிருக்கின்றது. ஆதலால் நித்திய

வஸ்துவின் ஏகரூபவிளக்கத்திற்கு விரோதமில்லையெனவறிக. ஆனால் ஆபாசனது தோற்ற நாசத்திற்குப்பிரமாண முண்டா வெனில், உண்டு. பஞ்சதசியின்கூடஸ்ததீபத்து இருபத்து நான்காவது சுலோகத்திற் பாரதி தீர்த்தவாசாரியாற் கூறப் பட்டிருக்கின்றது. இவ்வாறாகவே ஆபாசன் தோற்றினால் உலக விஷயங்களில் நாமமும் உருவமும் தோற்றுகின்றன. அவனது நாசமுளதாயின் அவை தோற்றுவனவல்ல. ஆதலால் பிரபஞ்சம் ஜடமாம். இவ்வாறு ஜடமாயிருந்தும் பிராந்தியினாற் சித்துப்போலக் காணப்படுகின்றது. அதனை விசாரத்தோடு கூடிய புத்தியால் நித்திய வஸ்துவின் சிற் சொரூபத்தினின்றும் பிரித்தால், பிரிக்கப்பட்ட பிரபஞ்சம் சித்தின் வேறாதலாற் ஜடமாம்.

தேவரீர் கூறியவாறு பிரபஞ்ச விஷயங்கள் ஜடமாகுக. அவ்வாறு ஜடமாயின் கடம் விளங்குகிறது, படம் விளங்கு கிறது என அவ் விளக்கமானது கடமுதலியவற்றின் தரும மாகவும் கடமுதலியன தருமியாகவும் காணப்படுதலால் தருமியாகியகடாதிவஸ்துக்களுக்கு நாசமுண்டாகுங்காலத்து ஆசிரய நாசத்தால் அவற்றை யாசிரயித்துள்ள தருமமாகிய விளக்கத்திற்கு நாசமுண்டாகும். அந்த நாசத்தால் அவ் விளக்கத்திற்கு அநித்தியத் தன்மை யுண்டாகிச் சித்துத் தன்மை நித்தியம் என்பதனோடு மாறுபட்டுச் சித்தாந்தத் திற்குப் பங்கமுண்டாகுமே யெனில்,

மைந்தா! நீ தரும தருமித்தன்மைகளின் இலக்கண மறியாது சங்கிக்கின்றாய். அவற்றின் இலக்கண மறிந்தாயா யின் இச்சங்கை செய்யாய். ஆதலால் அவற்றின் இலக்கணத் தைக் கூறுகின்றோம் கேள். எந்த வஸ்துவானது வியாபக

மாயும் அன்னிய வஸ்துவிற் காசிரயமாயு மிருக்கின்றதோ அந்த வஸ்து தருமியென்று சொல்லப்படுகின்றது. எந்த வஸ்துவானது அன்னிய வஸ்துவின் ஆசிரிதமாயும் பரிச்சின்னமாயு மிருக்கின்றதோ அந்த வஸ்து தருமமென்று சொல்லப்படுகின்றது. எப்படி யெனில், கடத்திற் கருமையாகிய தரும மிருக்கின்றது. அத் தருமத்திற்குக் கடம் தருமியென்று கூறப்படுகின்றது. எதனாலெனில், கருமையாகிய தருமம் கடமாத்திரத்தில் (எல்லாக் கடங்களினும்) இல்லை. கடத்தின் ஏகதேசத்தில் (சில கடங்களில்) இருக்கின்றது. அதனாற் பரிச்சின்னமாயும் சுயமாக விராமற் கடத்தை யாசிரயித்து மிருத்தலாற் றருமமாம். கடமானது அக்கருமைத்தரும மாத்திரமன்றி மற்றைய செம்மை, பசுமை முதலிய தருமங்களுக்கெல்லாம் ஆசிரய (ஆதார) மாயும், அதனால் வியாபகமாயும் இருத்தலாற் றருமியென்று சொல்லப்படுகின்றது. இத்திருஷ்டாந்தம் போலத் தார்ஷ்டாந்தமாகிய நித்திய வஸ்துவின் சித்துத் தன்மையானது ஏகமாயும் வியாபகமாயும் கடாதிப்பிரபஞ்ச விஷயங்களின் ஆசிரயமாயு மிருத்தலாற் றருமியென்று பெயர் பெறுகின்றது. அச்சித்துத்தன்மையினிடத்து ஆசிரிதமாய்ப் பரிச்சின்னமா யிருத்தலாற் கடாதிப் பிரபஞ்ச வஸ்துக்கள் தருமமெனப் பெயர் பெறுகின்றன. அப்படியானால் தருமியாகிய விளக்கத்தினிடத்துத் தருமத்துவமும், தருமமாகிய கடாதிவஸ்துக்களிடத்துத் தருமித்துவமும் மாறுகத் தோற்றுதல் எக்காரணத்தால் எனில், தரும தருமித்தன்மைகளிற் றேற்றுகின்ற அந்த மாறுபாடுதான் அஞ்ஞானத்தின் கற்பனையாலுண்டாகிய தென்றறிக.

அப்படியானால் நித்திய வஸ்துவாகிய தருமியினிடத்து அநித்தியவடிவப் பிரபஞ்ச விஷயமாகிய தருமம் இருத்தற்கு யாது சம்பந்தமுளது? எனில், அவ்விரண்டிற்கும் ஆசிரயவாசிரிதத் தன்மைகளால் நீலத்தன்மைக்கும் கடத்திற்குமுள்ள குணகுணித் தன்மைபோலத் தாதான்மியமுண்டு. அச்சம்பந்தம் வாஸ்தவமாக இல்லாமல் உள்ளதாகிய கயிற்றிற்கும் அதனிடத்துக் கற்பிதமாகக் காணப்படுகின்ற பாம்பிற்கும் போலக் கற்பிக்கப்பட்டதாகையாற் கற்பித தாதான்மிய சம்பந்தமுண்டெனக. ஆனால் நித்திய வஸ்துவின் விளக்கமானது கடம் விளங்குகிறது படம் விளங்குகிறது என்று வியவகரித்தலால் அவ்வவ் விஷயத்தளவிற் காணப்படுதலாற் பலவும் பரிச்சின்னமுமாகக் காணப்படுகிறதன்றி உபோற்காதப் பிரகரணத்திற் கூறியவாறு ஏகமும் வியாபகமுமாகத் தோற்றவில்லையே யெனில், பிரபஞ்ச விஷயங்களை விளக்குகின்ற சூரியப் பிரகாசமானது பகற்காலத்திற் கடம் விளங்குகிறது படம் விளங்குகிறது என வியவகரித்தலால் அவ்வவ் விஷயத்தளவிற் காணப்படினும் எவ்வாறு பலவும் பரிச்சின்னமுமாகாமல் ஏகமும் வியாபகமுமா யிருக்கின்றதோ அவ்வாறு நித்திய வஸ்துவின் சிற்சொரூப விளக்கமானது அஞ்ஞானிகளுக்கு அவ்வவ் விஷயத்தளவிற் காணப்படினும் ஞானிகளுக்கு அஃதுள்ளவாறு ஏகமும் வியாபகமுமாக விளங்குமென்றறிக. ஆனால் விளங்குமென்று கூறுதல் நித்தியவஸ்துவின் சித்துத்தன்மையானது ஏகமும் வியாபகமுமாமென்று கூறிய சாஸ்திர வசனத்தாலறிந்த பரோக்ஷமாவதன்றி அபரோக்ஷமாகக் காணப்படாதெனில், அப்படியன்று அசுத்தாந்தக் கரண முடையவர்கட்குப் பரோக்ஷமாகக்

காணப்படினும் சுத்தாந்தக்கரணமுடைய ஞானுதிகாரிகட்கு அபரோக்ஷமாகவே விளங்குமென்க. அப்படியானுல் அவ் விளக்கம் ஏகமும் வியாபகமுமாக விளங்குதலைத் திருஷ்டாந்த யுத்திகளால் விளக்கிக் காட்டவேண்டுமெனில்,

நீ கூறியவாறு நித்தியவஸ்துவின் விளக்கமானது பலவும் பரிச்சின்னமுமாயிருக்கின்ற ஒரு கடத்தை இஃதிருந்தவிடத்தினின்று மெடுத்து வேறிடங்கட்குக் கொண்டுசெல்லுங்காற் கடத்தளவிலுள்ள விளக்கமானது அக்கடம் செல்லுமிடமெல்லாம் அக்கடத்துடன் கூடவே செல்லவேண்டும். அவ்வாறு செல்லுமாயின் முதலிற் கடம் வைக்கப்பட்டிருந்த விடத்தில் நித்திய வஸ்துவின் விளக்கமில்லாமல் நீங்கவேண்டுமே. அவ்வாறு அவ்விடத்து விளக்கம் இல்லாமற் போய்விட்டதா சொல்லெனில், ஆமாம் கடவிளக்கம் கடத்தோடு போய்விட்டது. அவ்விடத்தில் அதனின் வேருகிய சூனியமிருந்து விளங்குகின்றதென்று கூறுகின்ருய். அவ்வாறு கூறுகின்ற உனது வார்த்தை வியாகாதத்தையடைகின்றது. எப்படியெனில், பிரபஞ்ச வஸ்துக்களின் அபாவத்தை (இன்மையை)ச் சூனியமென்பர். இருக்கிற வஸ்து விளங்கவே செய்யும் வஸ்துக்களின் இன்மையாகிய சூனியம் ஒருகாலத்தும் விளங்காது. சூனியமென்பது அபாவப்பொருளின் வாசகமாதலால் அதுபற்றியே விளங்காததென்பதும் பெறப்படுகின்றது. அந்த விளங்காமையை விளங்குகின்றது என்று கூறுதல் நாவில்லான் பாடகன் என்னும் வாக்கியம்போல முன்னுக்குப் பின் விரோதமாகிய தோஷமுடையதாம்.

சூனியமிருந்து விளங்குகிறதென்பது வியாகாதமாகுக. கடத்தின்கட் காணப்படுகின்ற விளக்கமானது பலவும் பரிச்

சின்னமுமாகக் காணப்படுதலால் அவ்வாறு காணப்படினும் அது ஏகமும் வியாபகமுமாயிருக்கிறதென்பதற்குத் திருஷ்டாந்தம் காட்டவேண்டுமெனில், அவ்வாறு திருஷ்டாந்தத்தோடு காட்டுகின்றோம் கேள். எப்படி ஏகமும் வியாபகமுமாகப் பிரகாசிக்கின்ற வெய்யிலாற் பிரகாசிக்கப்படுகின்ற கடபடாதி பிரபஞ்சப் பொருள்களை வெவ்வேறிடங்களுக் கெடுத்துச் செல்லுங்கால் அக்கடபடாதிகளின் கூடவே வெய்யிலுஞ் செல்லுதல்போற் காணப்படினும் செல்லுகிறதில்லையோ கடபடாதிகளே அதிசூக்குமமா யெவ்விடத்து வியாபித்துள்ள கிரணத்தூடு செல்லுகின்றனவோ அக்கடபடாதிகள் செல்லுகின்ற இடமெல்லாம் கிரணம் (வெய்யில்) இருத்தலால் அக்கிரணம் எந்த அதி சூக்குமத்தன்மையாற் றன்னைச் சம்பந்தித்த விஷயத்தளவில் மாத்திரம் அவ்வவ் விஷயத்தோடு காணப்படுகின்றதோ, அன்னியமாகிய வெற்றிடங்களிற் காணப்படுகிறதில்லையோ அந்த அதி சூக்குமத்தன்மையாற்றான் மாத்திரம் காணப்படாமற் செல்லுகின்ற விஷயத்தளவில் அவ்விஷயத்தோடு காணப்படுகின்ற கிரணம் விஷயத்தோடு செல்லுகிறதாகக் காணப்படுகின்றதோ அப்படிக் கடமுதலிய பிரபஞ்ச விஷயங்கள் வெவ்வேறிடங்களிற் போக்குவரவு செய்யுங்கால் நித்திய வஸ்துவின் சித்துத் தன்மை வடிவ விளக்கமானது அக்கடமுதலியவற்றின் கூடவே செல்லுதல்போற் காணப்படினும் அவ்விளக்கம் ஏகமாயும் வியாபகமாயு மிருத்தலாற் செல்லுகிறதில்லை. பிரபஞ்ச விஷயங்களே பரிபூரணமாக வியாபித்திருக்கின்ற விளக்கத்தூடு செல்லுகின்றன. அவ்விஷயங்கள் செல்லுமிடமெல்லாம் விளக்கமிருத்தலால் அவ்விளக்கமானது விஷ

யப்பற்றுடைய அஞ்ஞானிகளுக்கு விஷயத்தோடுகூடி அவ்வவ் விஷயத்தளவில் மாத்திரம் விளங்குகின்றது. அதி சூக்குமத்தன்மையால் அன்னிய (பிரபஞ்ச விஷயமின்றிய) இடங்களில் விளங்குகிறதில்லை. அதனாலே (பிறவிடங்களிற் றான் மாத்திரம் காணப்படாமையினாலே) செல்லுகின்ற விஷயத்தளவில் மாத்திரம் காணப்படுகின்ற விளக்கமானது அவ்வவ் விஷயங்களோடு செல்லுகிறதாகக் காணப்படுகின்றது. அவ்வாறு காணப்படினும் திருஷ்டாந்தமாகக் கூறிய வெய்யிலைப்போல ஏகமும் வியாபகமுமாம் என்றறிக.

ஆகவே விம்பமும் பிரதிவிம்பமுமாகிய இருவகைப் பிரகாசங்களாற் பிரபஞ்சப் பொருள்கள் பிரகாசிக்கப்படுதலால் விளங்குகின்றன. அவ் விருவகைப் பிரகாசங்களினின்றும் பிரிக்கப்படில் இருவகைப் பிரகாசங்களும் இல்லாத மழைக்கால விருளிலுள்ள குட்டியச் சுவர் எவ்வாறு விளங்காதோ அவ்வாறு ஜடமேயாம். இவ்வாறு ஜடமாகிய பிரபஞ்ச வஸ்துக்களை விளங்கச் செய்கின்ற சோபாதிக நித்திய வஸ்துவினிடத்துள்ள இவ்விருவகைச் சித்துத்தன்மைகளுள் பிரதிவிம்பமாகிய சித்துக் கற்பிதமும் விம்பமாகிய சித்து நித்தியமுமாம். எதனாலெனில், பிரதிவிம்பசித்தானது ஜாக்கிர சொப்பன காலங்களில் அந்தக்காண மிருத்தலால் அதனிடத்துத்தோன்றி அச்சாக்கிர சொப்பன பதார்த்தங்களைப் பிரகாசிப்பித்து நின்று மற்றைய சுழுத்தி முதலிய காலங்களில் அவ்வந்தக்கரணம் அஞ்ஞானத்தி லொடுங்குதலால் ஆசிரியமின்மைபற்றிப் பிரதிவிம்பசித்தாகிய தானுமொடுங்குகின்றது. இவ்வித தோற்ற நாசங்களுடைமையாற் கற்பிதமெனப்படுகின்றது. விம்பசித்தானது கற்பிதமாகிய உபாதி

யினுலுளதாகாமல் நிருபாதிகமாயிருத்தலால் நித்தியமெனப் படுகின்றது.

இங்குச் சோபாதிக நித்திய வஸ்துவினிடத்துள்ள கற்பிதப் பிரகாசவடிவ சிதாபாச சைதன்னியமானது அஞ்ஞான சம்பந்தத்தாற் சத்திலக்கணப்பிரகரணத்திற் கூறிய விதமாகத் தேகாதிகளில் யானென தென்னும் அபிமான முண்டாக அவ்வபிமானத்தால் அவற்றின் செயல்களாகிய தருமாதருமங்களைத் தனது செயல்களாகக் கற்பித்து அக் கற்பனையால் அவற்றின் அதிருஷ்டமாகிய புண்ணிய பாவங் களுக்குத் தக்கபடி உயர்வுந்தாழ்வுமாகிய எண்பத்து நான்கு நூறுயிரம் யோனி பேதங்களாயுள்ள பிறவிகளையடைந்து வருந்துவதாகிய பந்தத்தையும் பின்பு நிஷ்காம கருமத்தாலாகிய புண்ணிய பரிபாகத்தால் மோக்ஷத்தையு மடைகின்றது.

விம்பப் பிரகாசவடிவ சாக்ஷிசைதன்னியமானது அத் தேகாதிகளின் பாவாபாவங்களையும் பரிணும வடிவ விகாரங் களையும் தானிரு விகாரியாயிருந்துகொண்டு பிரகாசிப்பிக் கின்றது. அதனுலே அச்சாக்ஷிவடிவ விம்பப்பிரகாச மானது ஏகமும் வியாபகமும் நித்தியமுமாம். ஏதனு லெனில், பிரதிவிம்ப சைதன்னியமானது சுவர்க்க மத்திய பாதலங்களில் அவ்வவ்வுலகங்களுக் குசிதமாகிய சரீரத் தோடுகூடிப் போக்குவரவு செய்யுங்காலத்து அப் போக்கு வரவுகளையும் அவ்வெல்லா வுலகங்களையும் இருக்கின்றபடி தான் அசலமாயிருந்து பிரகாசிப்பித்தலால் ஏகத்தன்மை வியாபகத் தன்மைகளும் ஆபாச சைதன்னியமும் அது சார்தற்குரிய உலகங்களுமாகிய அவற்றின் தோற்ற நாசங்

களையும் பிரகாசிப்பித்தலால் நித்தியத்தன்மையு முடைய தாதல் கண்டுகொள்க. ஆகவே இவ்வளவு பிரசங்கத்தா லென்ன சித்தித்ததெனில், சோபாதிக நித்திய வஸ்துவாகிய ஜீவன் ஆபாசபாகத்தாற் றனது சிற்சொரூபத்தை யிழந்த வன்போல மயங்கித் தன்னை அஞ்ஞானக மதித்துப் பிறப் பிறப்பாதி சமுசாரத்திற் சுழலுங்காலத்தும் தனது சித்து வடிவமாகிய சாக்ஷி சொரூபத்தினின்று நீங்காமையால் அந்தச்சொப்பிரகாச சித்துவடிவம் அவனால் என்றும் அடை யப்பட்டதாகவே யிருக்கின்றது. அதனால் அச்சித்துத் தன்மையின் அடைவு நித்தியப்பிராப்தியாம். அதனை (அந்த நித்தியமாகிய சித்துத்தன்மையினை) யுடைய சாக்ஷி ஜீவனுக்கு நித்தியப்பிராப்தமாம். இவ்வாறு தனது சொரூ பம் சொப்பிரகாசமாகவும் நித்தியமுக்தமாகவும் இருக்கத் தன்னை அஞ்ஞானகவும் சமுசாரியாகவும் மதித்தல் மயக்கத் தாலாம். ஆதலாற் பந்தம் மித்தையாம். இவ்வாறு இச் சித்திலக்கணப்பிரகாணத்தால் ஜீவனுக்குத் தனது நிச சொரூபமாகிய சாக்ஷிவடிவத்தின் நித்தியப்பிராப்தத்தன்மை காட்டப்பட்டது.

---

## எ-வது ஆநந்தவிலக்கணப் பிரகரணம்.

இனி இப்பிரகாணத்தால் நித்தியவஸ்துவின் ஆநந்தத் தின்றன்மை நிரூபிக்கப்படுகின்றது. எல்லாக் காலங்களி லும் மாறுபடாமல் மிகுந்த பிரியத்திற்கு விஷயமாவது ஆநந்தமாம். இத்தன்மைய ஆநந்த சொரூபமுடையது நித்தியவஸ்துவாம். இந்த ஆநந்த விலக்கணத்தில் மாணாக்க னது சங்கை வருமாறு. எவ்வாறெனில், கூடம்பிரியமாயிருக்

கிறதென்னும் வியவகாரத்திற் கேதுவாய்க் கடத்தின்கட் காணப்படுகின்ற பிரியத்தன்மையானது நித்திய வஸ்துவினது ஆநந்த சொரூபமாம் என்று முன் உபோற்காதப்பிரகாணத்திற் கூறப்பட்டது. அதுபொருந்தாது. எதனாலெனில், ஆநந்தமானது நித்திய வஸ்துவினதா யிருக்குமாயின் அவ்வாநந்தத்தின் பொருட்டு நித்திய வஸ்துவிடத்தல்லவா பிரியமுண்டாகவேண்டும்? அவ்வாறின்றிக் கடாதி விஷயங்களினிடத்துண்டாக வேண்டியதில்லை. அனுபவத்திற் பிரபஞ்ச விஷயங்களினிடத்திலேயே பிரியமுண்டாகின்றது. அவ்வேதுவால் பிரபஞ்ச விஷயங்களிற்றான் ஆநந்தமிருக்கின்றது என்று கூறின் நீ சங்கித்தபடி பிரபஞ்ச விஷயங்களினிடத்துப் பிரியமுளதாவது எல்லோராலும் அனுபவிக்கப்பட்டது தான் அப்படியானாலும் அவ்விஷயங்களினிடத்துண்டாகின்ற பிரியம் அவற்றினிடத்து மாறுமலிருக்கிறதில்லை. மாறுபடுகின்றது. ஆநந்த விலக்கணத்தில் எல்லாக் காலங்களிலும் மாறுதலில்லாதிருந்த பிரியம் எனப் பிரியத்திற்கு விசேஷணங் கூறப்பட்டிருக்கின்றது. அதனாலேமாறுதலுடைய பிரியத்திற்கு விஷயமாவது ஆநந்தமாகாதென்பது பெறப்படுகின்றது. ஆனால் அம்மாறுதலுடைய பிரியத்திற்கு விஷயமாவது ஆநந்தமாகாதாயின் மற்றியாதாகுமெனில், ஆநந்தத்திற்கு வேறாகிய எல்லாம் துக்கமேயாம் என்றறிக.

அவ்வாறு பிரபஞ்ச விஷயங்கள் துக்கவடிவமாயின் துக்கத்தினிடத்து யாருக்காவது விருப்பமுண்டாகிறதோ? விருப்பமுண்டாகிறதில்லையே? அவ்வாறு விஷயங்களிடத்தும் விருப்பமுண்டாகக்கூடாதே? அவ்வாறிருக்க, அவ்விஷயங்களிடத்து ஏன் பிரியமுண்டாகின்றது? எனில், அவ்விஷயங்க

ளொவ்வொரு காலங்களில் சோபாதிக நித்தியவஸ்து (ஜீவ ஆன்மா) விற்கு அனுகூலமுடையதாகின்றது. அவ்வக்காலங் களில் மாத்திரம் அவ்விஷயங்களிற் பிரியமுண்டாகின்றது. மற்றைய காலங்களிற் பிரியமுண்டாகிறதில்லை. அவ்வொவ் வொரு காலத்துண்டாகும் பிரியமும் அவ்விஷயங்களின் பொருட்டன்று. ஆன்மாவாகிய நித்திய வஸ்துவின் பொருட் டேயாம். ஆதலால் நித்தியவஸ்துவாகிய ஆன்மாவே பிரி யத்திற்கு விஷயமாம். பிரபஞ்ச விஷயங்களல்லவெனவறிக.

அப்படியானால் ஆன்மாவிற்கு விஷயங்கள் எவ்வாறனு கூலஞ்செய்கின்றன? எனில், ஒரு பிரயாணி (வழிச்செல் வோனு)க்குத் தாகமுண்டானவிடத்துக் கிணற்றில் நீரினைத் துத் தாகசாந்தி செய்யவேண்டியிருக்கும்பொழுது கயிற் றோடுகூடிய கடமானது அக்கிணற்று நீரை மொண்டு மேற் கொண்டுவருதலாகிய அனுகூலத்தைச் செய்கின்றது. அவ் வனுகூலத்தால் அக்கடத்து நீரைக் குடித்துத் தாகத்தைச் சாந்தி செய்தலால் போக்தாவாகிய ஆன்மாவிற்குத் திருப்தி யுண்டாகின்றது. அந்தத் திருப்திக்குக் காரணம் தாகசாந் தியும் தாகசாந்திக்குக்காரணம் நீர் குடித்தலும் நீர் குடித் தற்குக் காரணம் கிணற்று நீரை மொண்டு மேற்கொண்டு வருதலும், நீரைமொண்டு மேற்கொண்டுவருதல் கயிற்றோடு கூடிய கடத்தின் செயலுமாம். கடத்தினது அவ்வனுகூலச் செயலால் நீர் குடித்தலும் நீர் குடித்தலாற் றாகசாந்தியும் தாக சாந்தியாற் போக்தாவாகிய ஆன்மாவிற்குத் திருத்தி யும் உண்டாகின்றன. இவ்விதமாக விஷயங்கள் போக்தா வாகிய ஆன்மாவிற்கு அனுகூலம் செய்கின்றன. இவ்வித அனுகூலத்தால் அக்கடத்தினிடத்துப் பிரியமுண்டாகின்

றது. உண்டாகிய அந்தப்பிரியமும் அக்கடத்தின்பொருட்டன்று, ஆன்மாவின் பொருட்டாம். ஆதலாற் கடம்பிரிய விஷயமன்று. ஆன்மாவே பிரியவிஷயமாம் என்க. அப்படியானல் ஆன்மாவிடத்துண்டாகின்ற அந்தப்பிரியம் இராக வடிவமா, சிரத்தைவடிவமா, பக்திவடிவமா, இச்சைவடிவமா? இவற்றுள் யாதாகும் எனில், அந்தப்பிரீதிக்கு மேற்கூறிய இராக முதலியவற்றின் வடிவமாதல் சம்பவியாது. ஏனென்றல், இராகம் ஸ்திரி முதலியவற்றிலும், சிரத்தையாக முதலியவற்றிலும்,பக்தி,குரு,தெய்வம்முதலியவற்றிலும்,இச்சை அடையப்படாத வஸ்துவிலுமுண்டாவனவாதலாலெனவறிக. அப்படியானுற் பிரீதியின் சொரூபந்தான் யாதெனில்,சுகமே சுகமாத்திரமாம். அந்தச் சுகமாத்திரத்தை அநுசரித்திருப்பதாகிய சாத்துவிகீ (சத்துவகுணத்தின் பரிணாமவடிவ அந்தக்கரணத்தின்) விருத்தியானது பிரீதியின் சொரூபமென்றறிக.

அப்படியானல் அந்த ஒரே சுகத்தைக் கோசரிக்கும் பிரீதியானது இச்சைவடிவமே யாமென்று கூறின், அஃது இச்சைவடிவமாகாது. எதனுலெனில், இச்சையானது முன் கிடைக்காத சுகாதிகள் மாத்திரத்தினை விஷயஞ் செய்வதாம். பிரீதியானது கிடைத்தனவும் கிடையாதனவும். அதாவது கிடைத்த சுகமுதலியவற்றின் கண்ணும், நஷ்டமாகிய சுகமுதலியவற்றின் கண்ணும் இருத்தலால் இச்சை வடிவ விருத்தியினும் வேறுமென வறிக.

பிரீதியின் சொரூபம் அவ்வாறுருக. பசிதாகங்கள் பிராணனுடைய தருமமாகச் சாஸ்திரங்களிற் கூறியிருக்கத் தேவரீரிங்கு "அக்கடத்து நீரைக் குடித்துத் தாகத்தைச்

சாந்தி செய்தலாற் போக்தாவாகிய ஆன்மாவிற்குத் திருப்தி யுண்டாகின்றது" என ஆன்மாவின்றருமமாகக் கூறியது விரோதமல்லவாவெனில், சாஸ்திரங்களில் அவ்வாறு கூறி யிருப்பினும் அதற்குச் சேதனசம்பந்தமுடைய பிராணனது தருமமாகப் பொருள்கொள்ளவேண்டும். அவ்வாறின்றிக் கேவல பிராணனது தருமமாகப் பொருள்கொள்ளின், "நண்ணிய குணத்தின்வே றின்மை நாட்டலாற், கண்ணிய வினைகளுக் குடம்பு காரண, மெண்ணிய துன்பமோ டின்ப மென்றிவை, யுண்ணிய காரண முயிரென் கின்றதே" எனக் கீதையில் ஜடசேதன விசிட்டத்திற்குக் கிருஷ்ண பரமான் மாவாற் கூறப்பட்ட கர்த்திருத்துவ, போக்திருத்துவ விலக் கணத்திற்கு விரோதமாமாதலால் இங்குக்கூறியது விரோத மாகாதென்றறிக. கடமானது நீரைமொண்டுதருதல் வாயி லாக ஆன்மாவின் திருத்திக் கேதுவாயிருத்தலால் அக்கடத் தினிடத்துப் பிரியமுண்டாகின்றதென்று இங்குக்கூறப் பட்டது. அவ்வாறு பிரபஞ்ச விஷயங்கள் ஆன்மாவின் திருத்திக்குச் சாதனமாமென்பதற்குப் பிரமாண முளதா வெனில், உண்டு. பஞ்சதசியின் ஆன்மாநந்தப் பிரகரணத்து ஆறுவது சுலோகத்தில் பதி, ஸ்திரீ, புத்திரன், தனம், ஆ (குதிரை முதலிய பசு) பிராஹ்மணத்துவ ஜாதி, க்ஷத்திரி யத்துவ ஜாதி, சுவர்க்காதி யுலோகங்கள், ஈசுவராதி தெய் வம், இருக்கு முதலிய வேதம், பிருதிவி முதலிய பூதம் என்னும் இவ்வெல்லாப் போக்கிய சமூகங்களும் ஆன்மா வாகிய போக்தாவின் பொருட்டுப் பிரியமுள்ளனவாம் என வும், வியாக்கியானத்தில் பர்த்தா, பாரியை முதலிய போக சாமக்கிரியின் சமூகங்களெவையோ அவை போக்தாவின் சேஷங் (உபகாரி)களாயிருத்தலின் போக்தாவின் சம்பந்தத்

திலேயே பிரியமாயிருக்கின்றன. சொரூபமாகப் பிரிய மாகாவெனவும் கூறப்பட்டிருத்தல்காண்க. ஆனுல்கடமானது போக்தாவின் போகசாதனமாயிருத்தலால், அதனிடத்துப் பிரியமுண்டாகின்றது. அதுபோல ஆன்மாவும் அனுகூல வடிவ பிரியமாயிருக்கின்றது. அந்தப்பிரியத்தின் சமத்து வத்தால் ஆன்மாவிடத்தும் சுகசாதனத்தன்மையுண்டென்று கூறின் அவ்வான்மாவாகிய சாதனத்தாற் போகிப்பவன் யாவன்? கூறுவாயாக.

போகித்தற்குப் போக்தாவுளன் என்று கூறின் அச் சங்கை பொருந்தாது. எதனுலெனில், போகசாதனத் தன்மை வடிவ ஆன்மாவொன்று போகிக்கின்ற ஆன்மா வொன்ருக இரண்டான்மாவிருக்கவேண்டும். அவ்வாறு இரண்டான்மாக்களை யொப்பின் அத்துவைத சுருதிக்கு விரோதமாம். ஆதலாலொரேயான்மா வொப்பவேண்டும். அவ்வாறு போகிப்பவனுகிய கர்த்தாத்தன்மையும் போக சாதனமாகிய கருமத்தன்மையும் ஒரே யான்மாவிடத்துக் கூறின் தானே கர்த்தாவும் கருமமுமாதலாகிய தோஷமுண் டாம். ஆதலால் ஆன்மாசுகத்திற்குச் சாதனமன்றென்றறிக. அவ்வாறு சுகசாதன மல்லவாயின் அல்லவாருக. அவ்வான் மா அனுகூலவடிவபிரியமாயிருத்தலாற் போகவடிவ சுகமாக விருக்கிறதெனில், ஆன்மாவிடத்து நீ கூறியவாறு சுகத் தன்மையிருக்குமானுல் அது அனுபவிக்கப்படுவதாகிய விஷயஜந்நிய சுகத்திற்கொப்பாகும். ஆகவே அந்தச் சுகத் திற் பிரியமாத்திரமுண்டாவதன்றி அதிப்பிரியமுண்டாகாது. ஆன்மாவோ நிரதிசய (மிகுந்த) பிரியத்திற்கு விஷயமா மென்பது சாஸ்திரசித்தாந்தம். ஆதலால், ஆன்மாவிடத்துச் சுகத்தன்மை கூறுதலும் பொருந்தாது என்றறிக. அப்படி

யானுல் எதனுலே அநுபவரூபசுகத்திற் பிரியமாத்திரமும் ஆன்மா விடத்தில்மிகுந்தபிரியமுமிருக்கின்றனவெனில், விஷய சுகத்துண்டாகும் பிரீதியானது அன்னிய விஷய சுகத்திற் செல்லுகின்றது. அதனுலே வியபிசாரியாயிருத்தலால் அச்சுகத்திற் பிரியமாத்திரம் இருக்கின்றது. ஆன்மாவினிடத்துள்ள பிரீதி அவ்வாறு மாறுதலற்றிருத்தலால் அவ் வியபிசாரியாயிருக்கின்றது. அதனுலே ஆன்மாவிடத்துள்ள பிரீதி எல்லாவற்றினுமேலானதாம்.

ஆனுல் ஆன்மாவிடத்துள்ள பிரீதியானது எக்காரணத்தால் எல்லாவற்றினு மேலானதாகின்றதெனில், புருஷனுனவன் செய்யத்தகாத இழிந்த தொழில்களையும் திரவியத்தின் பொருட்டுச் செய்கின்ருன். ஆதலாற் றிரவியம் பிரிய விஷயமாகின்றது. அவ்வாறு சம்பாதித்த திரவியத்தையும் தனது புத்திரனுக்கு வியாதி முதலிய ஆபத்து நேரிடுங் காலத்தில் அவ்வாபத்தினின்றும் அப்புத்திரனை யிரக்ஷிக்கும் பொருட்டுச் செலவுசெய்கின்ருன். அதனுலே திரவியத்தினும் புத்திரன் மிகுந்தபிரியமுடையவனுகின்ருன். தெய்வகதியாகக் கொடிதாகிய பஞ்சநேரிட்டகாலத்தில் உணவின்மையாலாகிய பசிவேதனை பொறுக்கமுடியாதபோது பொருட் செலவுசெய்து இரக்ஷிக்கப்பட்ட புத்திரனையும் தியாகஞ் (அன்னியனிடத்து விற்பனை)செய்து தன் சரீரத்தையிரக்ஷிக்கின்ருன். அதனுலே புத்திரனிலும் தனது சரீரம் மிகுந்த பிரியமுடையதாகின்றது. ஒருவேளை தான்செய்த குற்றத்திற்காக அரசனுணையாற் * கசையடிபடநேரிடுமாயின் அப்

* கசை = கோலிற்கட்டிய கயிற்றினது நுனியில் ஈய முதலியவற்ருற்செய்த குண்டோடுகூடிய கருவி.

பொழுது புத்திரனை விற்பனைசெய்து பாதுகாத்த சரீரத்தை யும் அடிக்கும்படி தியாகஞ்செய்து அதாவது அச்சரீர அபி மானத்தைவிட்டுக் கண் முதலிய இந்திரியங்களை மறைத்து அவ் வடியினின்றும் இரக்ஷிக்கின்றான். ஆதலாற் றனது சரீரத்திலும் மிகுந்த பிரியமுடையது இந்திரியமாம். அக் கண் முதலிய இந்திரியங்களிற் கொடிதாகிய வியாதி யுண்டாகியபோது அவ்வியாதியானது அவ் விந்திரியத்தியாகம் அல்லது பிராணத்தியாகம் ஆகிய இர ண்டிலொன்றன் றியாகத்தாற் றீர்வதன்றி வேறுவகையாற் றீராததாயிருக்குமாயின் அப்பொழுது அவ்விந்திரியத்தை யும் தியாகஞ்செய்து பிராணனைககாககின்றான். அதாவது உயிரோடிருக்க விரும்புகின்றான். ஆதலால் இந்திரியத்திலும் பிராணன் மிகுந்த பிரியமுடையதாம். ஒருவேளை எவ்வித வுபாயங்களாலும்நீக்கக்கூடாத துக்கம்நேரிடுமாயின் அத்துக் கத்தைச் சகிக்கமுடியாமல் இச்சரீரத்தோடு கூடிய பிரா ணனைத்தியாகஞ் செய்துவிட்டாற் சுகமாயிருக்கலாமென நிச்சயித்துக் கங்காப்பிரவேச முதலிய செயல்களால் யாவரா லும் தியாகஞ்செய்ய வரிதாகிய பிராணனையும் தியாகஞ் செய்கின்றான்.

இவ்விதமாகத் திரவியமுதற் பிராணன்வரையுள்ள எல் லா வஸ்துக்களிலுமுள்ள பிரியங்களைக் காட்டிலும் ஆன்மா வின்கண் அதிகப்பிரியமிருத்தலைக் கண்டுகொள்க. ஆனால் விஷயங்களினிடத்துப் பிரீதியுண்டாதலாற் சுகசாதனத் தன்மை காணப்படுகின்றது. அவ்வாறு ஆன்மாவிடத்தும் மிகுந்த பிரியமுண்டாகுதலால் அதனிடத்து யாது காணப் படுகின்றதெனில், போக்தாவாகிய ஆன்மாவிடத்துப்போகத் தன்மை காணப்படுகின்றதென்றறிக.

அப்படியானல் முன் இப்பிரகரணத்தில் தாகத்தைச் சாந்திசெய்தலாற் போக்தாவாகிய ஆன்மாவிற்குத் திருப்தியுண்டாகின்றதென்றும்இவ்விடத்துஆன்மாவின்கண்போகத் தன்மை காணப்படுகின்ற தென்றும் ஆன்மாவிற்குப் போக்திருத்தன்மையும்போகத்தன்மையும் கூறப்பட்டன. அதனல் எதுபோக்தாவோ அது கர்த்தாவுமாம். அந்தக்கர்த்திருத் தன்மையும் போக்திருத்தன்மையும் எதனிடத்திருக்கின்றனவோ அது விகாரியாம். எது விகாரியோ அது அநித்தியமும் ஜடமுமாம். இங்கு ஆன்மாவிடத்துப் போக்திருத் தன்மை போகத்தன்மைகளைக் கூறுதலால் மேற்கூறிய விதமாகக் கர்த்தாவும் போக்தாவுமாகிய ஆன்மா விகாரியாம். ஆகவே விகாரியாகிய அவ்வான்மா அசத்தும் ஜடமும் துக்கமுமாம். ஆகவே வட்டிக்காசைப்பட முதலுமிழக்கப்பட்டதென்னும் நியாயம்போல ஆநந்தத்திற்கு நித்தியத்துவம் சாதித்தற்காரம்பிக்க அம்முயற்சியால் அவ்வாநந்தத்திற்கு நித்தியத்துவம் கெட்டதுமன்றி முன்னுள்ள ஆநந்தத்திற்கும் கேடு வந்ததேயெனில், உனக்குப் பிராந்தியினல் அவ்வாறு தோற்றுகிறதன்றி உண்மையில் அவ்வாநந்தத்திற்கு நித்தியத்தன்மைக்கேடுமில்லை. துக்கத்தன்மையின் அடைவுமில்லை. எதனலெனில், அந்தப் போக்திருத் தன்மை போகத்தன்மைகள் ஆன்மாவின் முக்கியார்த்த சொரூபத்தில் உபாதி குறித்துக் கற்பிக்கப்பட்டனவேயன்றிச் சொரூபமாக இல்லை. சொரூபமாக அகர்த்தாவும் அபோக்தாவுமாமென்க.

அப்படியானல் அந்தக்கற்பித போக்தாவும் போகங்களும் யாவையெனில், நாமரூப விஷயாகாரமின்றி அபரோ

க்ஷமாகப் பிரஹ்மாகாரமடைந்த அந்தக்கரண விருத்தி அல்லது அவித்தியா விருத்திகளோடுகூடிய சேதனம் போக்தாவெனப்படுகின்றது. அனுபவ ரூபமாக எவ்வளவு ஆநந்தங்கள் சொல்லப்படுகின்றனவோ அவையாவும் அந்தப் போக்தாவின் போகங்களாம் என்க. ஆனல் அத்தன்மைய ஆநந்தங்கள் எவையெனில், சாஸ்திரங்களிற் கூறப்பட்டிருக்கின்ற விஷயாநந்த முதலியனவாம் என்றறிக.

இங்கு விஷயாநந்தமுதலியன போக்தாவின் அனுபவங்களெனவும், விஷயாகாரமடையாத அந்தக்கரணவிருத்தி அவித்தியாவிருத்திகளோடுகூடிய சேதனம் போக்தாவெனவும் கூறப்பட்டன. அங்குக் கூறிய அனுபவம் சேதனத்தினதா? அல்லது விருத்தியினதா? அவ்விரண்டனுள் சேதனத்தினதாகக்கூறின் நித்தியவஸ்துவின் அசங்கத்தன்மை நிருவிகாரத்தன்மை முதலியவற்றிற்குக் கேடுண்டாகும். விருத்தியினதாகக் கூறின் அது ஜடமாதலால் அனுபவிக்குந்தன்மையுடையதாகாது. ஆகவே ஆன்மாவிற்கு மேற்கூறிய போக்திருத்தன்மையும் போகத்தன்மையும் பொருந்தாதுஎனின், அப்படியல்ல. அவ்விடத்து விருத்தியும் சேதனமுமாகிய அவ்விரண்டுமாகாமலும் அவற்றின் வேறுமாகாமலும் அவ்விருத்திகளிலுள்ள சிதாபாசம் போக்தாவாகின்றது. கேவலசேதனமுமல்ல. கேவலவிருத்தியுமல்ல. சாஸ்திரங்களிற் கூறிய ஆநந்தங்களெல்லாம் இவ்வாபாசமாகிய போக்தாவினவாம். ஆதலால் மேற்கூறிய போக்தாவும் போகமும் பொருந்தாததாகா. பொருத்தமுடையனவேயாமென்றறிக.

அவ்வாறு ஆபாசனுக்கு ஆநந்தானுபவங்கூறின் அவ்விடத்து அவனுற் பலத்தின்சித்தியும் திரிபுடித்துவைதமுமு

ளவாம். ஆகவே ஆநந்தானுபவத்திற்கு ஆபாசனுலாகின்ற பலத்தின் நிஷேதத்தையும் திரிபுடித்துவைத நிஷேதத்தை யுங் கூறுகின்ற சாஸ்திரங்களுக்கு விரோதமாமேயெனில், அவ்விடத்து நாமரூபவிஷயாகாரமடையாத விருத்திகளில் ஆபாசனிருக்கினும் சச்சிதாநந்தவடிவ நித்தியவஸ்துவோடு ஐக்கியத்தை யடைந்திருத்தலால் நாமரூப விஷயங்களிற் போல விளக்கவடிவபலத்தின் உபயோகத்தைச்செய்தலில்லை. இந்த ஆபாசனது விளக்கத்தையபேக்ஷியாமல் வஸ்துவா வானது சொப்பிரகாசமாயிருத்தலாற் றானேபிரகாசிக்கின் றது. அவ்விடத்துள்ளதாகச் சொல்லப்பட்ட அவ்விருத்தி கள் அதிசூக்குமமாயிருத்தலாலும், பலத்தின்றோற்றமில்லா மையாலும் திரிபுடித்துவைதமுமில்லையென்றறிக.

அப்படியானால் ஆநந்தானுபவத்தில் விருத்திகளினிடத் துச்சிதாபாசமிருக்கினும் பலத்தினுபயோகமும் திரிபுடித் துவைதமுமில்லையென்பதற்குப் பிரமாண முண்டாவெனின், உண்டு. பஞ்சதசியின் திருப்திதீபத்துத் தொண்ணூற்றுநா லாவது சுலோகத்தில் "இச்சிதாபாசன் விருத்தியிலிருக்கினும் பிரஹ்மத்திலொருவனைப்போலாகின்றான். கடமுதலியவற் றிற்போல அன்னியமான அதிசய வடிவபலத்தைச்செய்கி றதில்லை" எனப்பலத்தின் நிஷேதம் கூறியிருக்கின்றது. திரிபுடித்தோற்றத்திற்குக் காரணமாகிய அப்பலத்தின்நிஷே தத்தாலும் யோகானந்தப்பிரகரணத்து அறுபத்தாறுவது சுலோகத்தில் "அஞ்ஞானவிருத்திகள் சூக்ஷமம் என்னும் வெளிப்படை யின்றியனவாம், புத்திவிருத்திகள் வெளிப்ப டையுள்ளனவாம்" என அஞ்ஞானவிருத்திகளுக்கு விளக் கமின்மைவடிவ ஏது கூறியிருத்தலாலும் திரிபுடித்துவைத

யின்மையினிச்சயமுண்டாகின்றது. அன்றியும் அப்பிரகாணத்துப் பதினாறுவது சுலோகத்தாற்கூறிய சாந்தோக்கிய சுருதியும் " சமாதி, சுழுத்தி, மூர்ச்சைகளில் அத்துவைத வடிவஆன்மா அநுபவிக்கப்படுகின்றது " எனக்கூறுதலும் ஆநந்தாநுபவத்தில் பலத்தின் நிஷேதத்திற்கும் திரிபுடித்துவைதமின்மைக்கும் பிரமாணமாதல்கண்டுகொள்க. இங்கு மேற்கூறியவாறு விருத்திகளின்சூக்குமத்தன்மையால் திரிபுடித்துவைதமின்மையும் ஆபாசனுக்கு நாமரூபவிஷயங்களிற்போல பிரஹ்மத்தினிடத்து விளக்கவடிவபலத்தின் சித்தியின்மையும் இருக்குக.

இப்பிரசங்கத்தில் ஆன்மாவிற்குப் போக்திருத்தன்மை போகத்தன்மைகள் கூறியது. அதன் (ஆன்மாவின்) முக்கியார்த்த சொரூபத்தில் உபாதி குறித்துக்கற்பிக்கப்பட்டனவே யன்றிச் சொரூபமாக அது அகர்த்தாவும் அபோக்தாவுமா மெனக் கூறப்பட்டது. அதனுல் ஆபாசனே போக்தா வென்பது சித்திக்கின்றது. அவ்வாறு ஆபாசன் போக்தாவாயின் பஞ்சதசியின் யோகாநந்தப் பிரகரணத்து ஐந்தாவது சுலோகத்தில் "பிரஹ்மத்தின் ஆநந்தம்" என்னும் வாக்கியத்திற்குத் தலையே சொரூபமாக விருக்கின்ற இராகுவை இராகுவினது தலையென்றுகூறும் பேதவாக்கியம் உபசாரமாதல்போலப் பிரஹ்மத்தின் ஆநந்தத்தை யென்னும் பேதவார்த்தை உபசாரத்தாற் சொல்லப்பட்டது. பிரஹ்மத்தின் சொரூபவடிவ ஆநந்தம் என்பது கருத்தென வியாக்கியானம் செய்திருக்கின்றது. ஆதலாற் பிரஹ்மாநந்தம் என்னும் சொல்விற்குப் பண்புத்தொகைப் பொருளாகிய அபேதார்த்தத்

தன்மையாலும், அப்பிரகரணத்து முப்பத்தெட்டாவது சுலோகத்தில் "சுழுத்தியில் விரோதி துக்கமின்மையால் நிர்விக்கினசுகம் அங்கீகரிக்கத் தக்கதாம்" எனச் சுகத்திற்குக் கூறிய நித்தியத்தன்மையாலும், அப்பிரகரணத்துப் பதினாறுவது சுலோகத்தில் "சமாதி, சுழுத்தி, மூர்ச்சைகளில் அத்துவைதவடிவ ஆன்மா அனுபவிக்கப்படுகின்றது." என ஆன்மாவிற்கு நித்திய சொரூபத்தன்மை கூறுதலாலும் நித்தியமாகிய விம்பாநந்தத் தன்மை சித்திக்கின்றது. அவ்விம்பாநந்தத்திற்கு அப்பிரகரணத்து இருபத்து மூன்றுவது சுலோகத்தில் "அத்துவைதத்திற் சுகம் இருக்கவேண்டாம் அத்துவைதமே சுகமாயிருத்தலால்" என அனுபவத்திற்கு விஷயமாகாமையும் கூறப்பட்டிருக்கின்றது. அத்தன்மையாயுள்ள ஆன்மசொரூப வடிவப் பிரஹ்மாநந்தம் அதனினும் வேற்றுச்சத்தையும் கற்பிதத்தன்மையுமுடைய ஆபாசனாகிய ஆநந்தமயனாற் சுழுத்தியில் அனுபவிக்கப்படுதல் முற்றிலும் விரோதமாமெனில்,

அவ்வாறு கூறுதலொருபோதும் விரோதமாகாது. எப்படியெனில், சுருதியில் "பிரஹ்மம் வாக்குமனோதீதகோசரம்" எனப்பிரஹ்மத்திற்கு வாக்குமனங்கட்கு அதீதத்தன்மையும் கோசரத்தன்மையும் உள்ளனவாகக் கேட்கப்படுகின்றன. அவ்வாறே அவ்வாக்கியத்தைப் பிரஹ்மம் வாக்குமனோதீதமென்றும், பிரஹ்மம் வாக்கு மனகோசரமென்றும் இரு வகையாகப் பிரிக்கின் முதல் வாக்கியத்திற்குப் பிரஹ்மமானது வாக்கிற்கும் மனதிற்கும் விஷயமாகாதெனவும், இரண்டாவது வாக்கியத்திற்குப் பிரஹ்மமானது வாக்கிற்கும் மனதிற்கும் விஷயமாமெனவும் பிரஹ்மமாகிய ஓரே

வஸ்துவினிடத்து விஷயமாகாமை விஷயமாதல் என்னும் பரஸ்பரவிரோதமாகிய பேதார்த்தம் தோற்றுகின்றது. அவ்வாறு தோற்றினும் சுருதியில் விரோதார்த்த வசனம் இராதென்பது நிச்சயம். எதனாலெனில், வித்துவான்களாகிய பெரியோர்களால் அவற்றிற்கு விரோதமில்லாத அருத்தஞ் செய்யப்பட்டிருக்தலாலென்றறிக.

அஃதெவ்வாலெனில் பிரஹ்மமானது * வாக்கிற்கு விஷயமாகாது, விஷயமாகும் என்னும் இருவகை வாக்கியங்கட்கும் முறையே வாக்கின் சக்தி விருத்திக்கு விஷயமாகாதென்பதும் இலக்கணா விர்த்திக்கு விஷயமாமென்பதும் அப்படியே மனதிற்கு விஷயமாகாது விஷயமாகுமென்னும் இருவகை வாக்கியங்கட்கும் முறையே மனதின் பலத்திற் (ஆபாசனுக்)கு விஷயமாகாதென்பதும் விருத்தி மாத்திரத்திற்கு விஷயமாகுமென்பதும் அருத்தமாதல் கண்டுகொள்க. இவ்வாறு வாக்கின் இலக்கணாவிருத்திக்கும் மனதின்விருத்தி மாத்திரத்திற்கும் விஷயமாவதும் சோபாதிக வஸ்துவேயாம். இவ்வஸ்துவே வாக்கு மனகோசரம் என்னும் சொல்லிற்குப் பொருளாம். நிருபாதிக வஸ்து எதற்கும் விஷயமாகிறதில்லை. அவ்வஸ்து வாக்கு மனாதீதம் என்னும் சொல்லிற்குப் பொருளாம். ஆனால் நிருபாதிகப் பிரஹ்மம் எக்காரணத்தால் எதற்கும் விஷயமாகிறதில்லையெனில், அது சொப்பிரகாசமாயிருத்தலாலும்சாஸ்திரங்களிற்கூறியபிரஹ்மஞானமானது சோபாதிக விஷயமுடையதாதலாலுமென வறிக. பிரஹ்மஞானமானது சோபாதிக விஷயமுடையதென்பது எச்சாஸ்திரத்தாற் பெறப்படுகின்றதெனில், பஞ்சதசியின் திருப்

* வாக்கு—சுருதி.

திீபத்தில் அபரோக்ஷஞான விலக்கணங் கூறியவிடத்து எண்பத்து நாலாவது சுலோகத்தில் "இவ்வாறு பிரஹ்மத்திற்கு நிருபாதிகத்தன்மையில்லை. பிரஹ்மத் தன்மையின் ஞானம் சோபாதிக விஷயமுடையதா யிருத்தலால்" எனவும் (அவதாரிகை) ஞானத்திற்குச் சோபாதிக விஷயமுடைமையாகிய அதுஎதனாற் சித்திக்கிறதெனில், (சு-ம்) "விதேக கைவல்லியமுண்டாகும் வரையில் உபாதி நீங்காமையால்" எனவும் கூறியிருத்தலாலென்க. அவ்விடத்து விதேக கைவல்லிய முண்டாகும் வரையிலென்று கூறிய காலவளவையானது ஞானத்தின் கர்த்தாவாகிய ஜீவனுக்கு உபாதியாயும் ஞானத்திற்காசிரயமாயுமுள்ள அவித்தை அல்லது அந்தக்கரணத்தோடு கூடியிருக்கின்ற கற்பிததாதான்மிய சம்பந்தத்தின் காலத்தைக் குறிக்கின்றது. ஆகவே எங்கெங்கு ஆநந்தமய(ஜீவ)னுக்கு ஞானத்தின் கர்த்திருத்தன்மை அல்லது ஆநந்தத்தின் போக்திருத்தன்மை கூறப்படுகின்றதோ அங்கங்கு அக்கர்த்திருத்தன்மை போக்திருத் தன்மைகள் அந்தஅவித்தியாவிருத்தி அல்லது அந்தக்கரணவிருத்தியோடுகூடிய சேதனத்திற்குப் பொருந்துமேயன்றிக் கேவல சேதனத்திற்குப் பொருந்தா. இதனாலென்ன சித்திக்கிறதெனில், ஆநந்தமயனாகிய ஜீவனுக்கு விஷயாகாரமடையாது பிரஹ்மாகாரமடைகின்ற அந்தக்கரணவிருத்தி வாயிலாகப் பிரஹ்மஞானாநந்தானுபவமும் அவித்தியாவிருத்தி வாயிலாகப் பிரஹ்மாநந்தானுபவமும் சித்திக்கின்றன. பிரஹ்மத்திற்கு மேற்கூறிய ஞானத்திற்கு விஷயமாந்தன்மையும் போகத்திற்குச் சாதனமாந் தன்மையும் சித்திக்கின்றன.

அப்படியானால் இப்பிரகரணத்தில் பிரஹ்மத்திற்குமுன்னர்ப் போகசாதனத்தன்மை கூடாதெனவும் இங்குக் கூடு

மெனவும் கூறுதல் வியாகாதமன்றோவெனில், முன்னர்ப் போகசாதனத்தன்மை கூடாதென விலக்கியது நிருபாதிகப் பிரஹ்மத்திற்கு. இங்கு கூடுமெனக்கூறியது சோபாதிகப் பிரஹ்மத்திற்கு. ஆதலால் வியாகாதமாகாதென்க.

மேற்கூறியவாறு சோபாதிகப் பிரஹ்மத்திற்குப் போகசாதனத்தன்மை கூறின் அப்போகத்தின் போக்தா அச்சோபாதிகப்பிரஹ்மத்தினும் வேறாகவன்றோ இருக்கவேண்டுமெனில், ஆமாம். அவ்வாறு வேறாகவேயிருக்கின்றதென்றறிக. அவ்வாறு போக்தாவும் போகசாதனமும் வேறுவேறாகக் கூறின் அத்துவைதத்திற்குக் கேடுண்டாமே யெனில், அத்துவைதத்திற்குக் கேடுண்டாகாது. எதனாலெனில், சோபாதிகசைதன்னியம் பேதத்தோடுகூடிய உபாதிகளின் நாநாத்துவத்தால் ஜீவசேதனமெனவும் ஈசுரசேதனமெனவும் வேறு வேறாகச் சொல்லப்படுகின்றது. அக்காரணத்தாலெனவறிக. அப்படியானால் அவ்வேறுவேறாகிய உபாதிகள் யாவையெனில், அந்தக்காரணம் அல்லது அவித்தை ஜீவசேதனத்தின் உபாதி யெனப்படுகின்றது. மாயை ஈசுரசேதனத்தின் உபாதியெனப்படுகின்றது. ஆதலால் அந்தக்காண அவித்தைகளை உபாதியாகக்கொண்ட ஜீவசேதனத்தினிடத்துப் போக்திருத்தன்மையுண்டு. மாயோபாதியுடைய வீசுரசேதனத்தினிடத்துப் போகசாதனத் தன்மையுண்டு.

அப்படியானால் முன்னர்ச் சோபாதிக ஆன்மாவிற்கு அந்தக்காணவிருத்தி வாயிலாகப் பிரஹ்மஞானாநந்தானுபவமும் அவித்தியாவிருத்தி வாயிலாகப் பிரஹ்மாநந்தானுபவமும் உண்டாமென்று கூறியதற்கும் இங்கு ஜீவசேதனத்தினிடத்துப் போக்திருத்தன்மையும் ஈசுரசேதனத்தினிடத்

துப் போகசாதனத் தன்மையும் உண்டென்பதற்கும் பிரமாணமுண்டாவெனில், உண்டு. பஞ்சதசியின் பஞ்சகோசவிவேகத்து இருபத்தொராவது சுலோகவியாக்கியானத்தில் "உலகத்தில் எந்தவெந்தக் கட முதலிய விஷயங்களில் ஞானமிருக்கின்றதோ அந்த வந்தக் கட முதலிய விஷயங்களை அநாதரம் செய்யுமிடத்து (மித்தையென்றறிந்து மறக்குமிடத்து)ச் சகல வஸ்துக்களிலும் விளங்குகின்றது என்னும் வடிவினதாகக் கலந்துள்ள விளக்கமெதுவோ அதுவே (ஞானமாத்திரமே) பிரஹ்மமாம் என்னும் இப்படிப்பட்ட புத்தியானது பிரஹ்மநிச்சயம் என்பது பொருள்" என்று ஜீவனுக்குப் பிரஹ்மஞானுனுபவமும், யோகாநந்தத்து அறுபத்தைந்தாவது சுலோகத்தில் "அந்தர்முகமாகிய ஆநந்தமயன் எவனே அவன் அப்போது சேதனப்பிரதிவிம்பத்தோடுகூடிய அஞ்ஞானத்தினின்றுண்டாகிய விருத்திகளாற்பிரஹ்மசுகத்தை அனுபவிக்கின்றான்" என்று அவித்தியாவிருத்தியால் ஆநந்தமயனுக்குப் பிரஹ்மாநந்தானுபவமும், அறுபத்தேழாவது சுலோகத்தில் "ஆநந்தமயனுக்குப் போக்திருத்தன்மையுண்டு பிரஹ்மாநந்தத்திற் போகிக்கத்தக்கதன்மையுண்டு. மாண்டுக்கியதாபநீயாதி யுபநிஷதங்களில் இது மிகத்தெளிவாம்" என்று ஆநந்தமயனுகிய ஜீவனுக்குப் போக்திருத்தன்மையும்ஆநந்தவடிவப் பிரஹ்மமாகிய அஞ்ஞானவிசிட்ட சேதனத்திற்குப் போக சாதனத்தன்மையும் கூறியிருத்தல் கண்டுகொள்க.

ஆகவே ஆநந்தமயனல் எவ்வளவாநந்தங்கள் அநுபவிக்கப்படுகின்றனவோ அவையாயும் அழிவுபாடுடையனவாம். எதனுலெனில், அவ்வாநந்தங்களை யனுபவிக்கின்ற

போக்தாவாகிய அவ்வாநந்தமயன் கற்பிதனுதலாலென்க. அப்படியானுல் அக்கற்பிதனுன ஆநந்தமயனுக்குண்டாகிய ஞானமுமித்தையாகும் எனில், அந்த ஞானத்தை மித்தை யன்றென்று கூறுபவர் யாவர்? ஒருவரும் மித்தையன் றென்று கூறுவாரலர். அறிஞரெவரும் மித்தையென்றே கூறுவர்.

அப்படியானுல் அந்த மித்தியா ஞானத்தாற் பந்த நிவிர்த்தியுளதாகாது. பந்த நிவிர்த்தி யுளதாகாதபோது அப்பந்தநிவிர்த்தியாலுளதாகின்ற மோக்ஷம் சித்தியாது. ஆதலால் மோக்ஷத்திற்குச் சாதனமாகாத ஞானத்தைச் சாதனத்தோடு சம்பாதித்தல் பயனற்றதாமெனில், இங்குக் கூறியபந்தம் சத்தியமாயிருக்குமாயின் அச்சத்திய பந்தம் மித்தியா ஞானத்தால் நிவிர்த்தியாகாது. பந்தமானது மித் தையாயிருக்கின்றது. அந்த மித்தியாபந்தம் மித்தியா ஞானத்தால் நிவிர்த்தியாமென்றறிக.

பந்தத்தை மித்தையெனல் பொருந்தாது. எதனு லெனில், பந்தம் என்னும் சொல்லிற்குக் கட்டு என்பது பொருள் அக்கட்டானது கருமத்தாலாக்கப்படுகின்றது. கருமத்தாலாக்கப்பட்ட அப்பந்தம் எவ்வாறுமித்தையாகும்? ஒருவாற்றானும் மித்தையாகாது. சத்தியமேயாமென்க. அத் தன்மையாகிய சத்தியபந்தம் அதனைச் சேதித்தலாகிய கருமத்தால் நிவிர்த்தியாகுமேயல்லது எதார்த்தமாகிய ஞானத்தாலும் நிவிர்த்தியாகாது. அத்தன்மையாயுள்ள பந் தம் மித்தியாம் ஞானத்தால் எப்படிநிவிர்த்தியாகும் நிவிர்த் தியாகவேயாகாது சுருதியிலும் கருமத்திற்கு மோக்ஷசித்தி கேட்கப்படுகின்றது. ஆதலால் பந்த நிவிர்த்தியை விரும்பு

கின்ற மோக்ஷவிச்சையுடையவர்கள் சற்கருமங்களைச்செய்ய வேண்டுமெனில், பந்தம் சத்தியமென்றும் கருமத்தாலாக்கப் பட்டதென்றும் கூறின் அப்பந்தத்தைச் செய்தற்குக் கர்த் தாயாவன் கூறுவாயாக? அப்பந்தத்திற்குச் சர்வ சத்திமா ஞகிய ஈசுவரன்கர்த்தாவாகின்முனெனில் அதுபொருந்தாது. ஏனெனில், அவ்வீசுரன் கிருபாசொரூபியாதலாலும் அக் கிருபையுடைமையினுலேயே பக்குவான்மாக்களின் பொருட் டுக் குருவடிவாகவும் சாஸ்திரவடிவாகவும் வெளிப்பட்டு அப் பந்தத்தைநாசஞ்செய்து அவ்வான்மாக்களுக்கு மோக்ஷ சுகத்தைக் கொடுக்கின்முன். அத்தன்மையுடைய காருண் ணியமூர்த்தி துக்ககாரணமாகிய பந்தத்தைச் செய்யா னென்க. அப்பரமேசுரன் செய்யாஞயின் ஆகாதவற்றையும் ஆக்கும் சாமர்த்தியமுடைய மாயைகர்த்தாவாகின்றதெனில் அம்மாயை குணவடிவாகவும் ஜடமாகவுமிருத்தலாற் சேத னத்தோடுகூடி யெதையும் செய்வதன்றித் தான் மாத்திரம் தனித்துநின்று செய்யமுடியாது. அன்றியும் ஜடத்தன்மை யுடைமையால் ஆன்மாக்களையறிந்து பந்தமுறுத்துதலும் கூடாது. ஆதலால் மாயையும் பந்தத்தின் கர்த்தாவாகா தென்றறிக. அப்படியாஞல் ஜீவன் தானே தன்னைப் பந் தனம் செய்துகொள்ளுகின்முனெனில் அதுவும் பொருந் தாது. எதஞலெனில், எந்த ஜீவஞற்றன்னைப் பந்திக்கக் கூடுமோ அவஞல் அப்பந்தத்தை விடுவிக்கவும்கூடும். ஆத லால் அது அவனுக்குப் பந்தமுமாகாது. துக்ககாரணமுமா காது. எது துக்ககாரணமாயும் தன்ஞல் நிவிர்த்திக்கக்கூடாத தாயு மிருக்கின்றதோ அதுவே பந்தமெனப்படும். அத் தன்மையாகிய பந்தத்தைத் தனக்குத்தானே செய்து கொள்பவரைக் கண்டதுமில்லை. கேட்டதுமில்லை. தன்னைத்

தானே பந்தமுறுத்துதல் முடியவுமாட்டாது. ஆதலாற் பந்தத்தின் கர்த்தா ஜீவனுமாகான். இவ்வாறு பந்தத்திற்குக் கர்த்தாவின்மையால் அப்பந்தம் கருமத்தாலாகியதன்று. அவ்வாறு பந்தம் கருமத்தாலாகியதன்றாயினும் காரணமின்றிக்காரிய முண்டாகாதென்பது நியமமாகையால்அப்பந்தத்திற்கு யாதேனுமொரு காரணமிருக்கவேண்டுமே அக்காரணம் யாதெனில், அப்பந்தத்தின் காரணம் அவிசாரமாம். அந்த அவிசாரத்தாற்றோற்றுகின்ற பந்தம் விசாரத்தாலுண்டாகின்ற பிரஹ்மான்ம வைக்கிய ஞானத்தால் நிவிர்த்தியாகும். ஆதலால் மோக்ஷவிச்சை யுடையவர்களெல்லோரும் அந்தமோக்ஷத்திற்குச் சாதனமாகிய ஞானத்தை அவசியம் சம்பாதிக்கவேண்டும். ஏனெனில், சுருதியில் ஞானத்தைத்தவிர மோக்ஷத்திற்கு வேறுமார்க்கமில்லையென்று கூறியிருத்தலாலெனவறிக. அப்படியானால் கருமத்தால் மோக்ஷசித்தி கூறிய சுருதியின் கருத்தியாதெனில் அது உலோகந்தரப் பிராப்தி வடிவ மோக்ஷமாம். மேற்கூறப்பட்ட துக்கநிவிர்த்தி சுகப்பிராப்தி வடிவ மோக்ஷமன்று. ஆதலால் அந்தக்கருமத்தாலாகிய மோக்ஷம் காலாந்தரத்தில் நாசமாமென்றுகண்டுகொள்க. ஆகவே பந்தம் சத்தியமுமன்று. கருமத்தாலாகியதுமன்று. மித்தையேயாம். அந்த மித்தியாபந்தம் ஆபாசனுக் குளதாகின்ற மித்தியா ஞானத்தால் நிவிர்த்தியாமென்றறிக.

அவ்வாநந்தமயனுகிய கற்பிதனுக் குண்டாகின்ற மித்தியா ஞானத்தால் மோக்ஷமுளதாகுக, அவனாலனுபவிக்கப்பட்ட ஆநந்தங்கள் அழிவுபாடெய்துக. அப்படியானும் அவனைக் கற்பிதனென்று கூறியவார்த்தையானது பஞ்சதசியின் யோகாநந்தத்து நாற்பத்தைந்தாவது சுலோகத்

தில் "ஜீவன் பரமான்மாவினிடத்தோடுகின்றான். அதனே டொருமையை யடைந்து தான் அவ்விடத்தைய பிரஹ்மா நந்தமாகின்றான்" எனவும், ஐம்பத்தாறுவது சுலோகத்தில் "சுழுத்தியிற் பிதாவும் பிதாவல்லாதவனுகின்றான் என்றல் முதலிய சுருதியின் ஸ்தானத்தில் ஜீவத்தன்மையின் நீக்கத் தாலும், சம்சாரித்தன்மையின் றேற்றுமையினுலும் சுழுத் தியிற் பிரஹ்மமே யிருக்கின்றது ஜீவனில்லை" எனவும், ஜீவ னுக்கு நித்தியத்தன்மை கூறிய வாக்கியங்களுக்கு விரோத மாகின்றதேயெனின் அதற்குச் சமாதானம்,

ஆநந்தமயனென்னும் சொல்லிற்குப் பொருளாக ஆபா சன் வியவகரிக்கப்படினும் அச்சொல்லிற்குச் சேதனத் தோடுகூடிய ஆபாசனே பொருளாக்கொள்ளல்வேண்டும். எதனுலெனில் அதிஷ்டானமின்றிய ஆரோபம் எவ்விடத் தும் சித்தியாமையாலென்க. ஆகவே ஜீவன் பரமாத்துமாவி னிடத் தோடுகின்றானென்னும் சொல்லிற்குச் சாத்தனுன வன் அரிகேசநல்லூரினின்று திருநெல்வேலிக் கோடுகின் றான் என்னுமிடத்து அவ்வரிகேசநல்லூராகிய இடத்தை விடுதலும் திருநெல்வேலியாகிய இடத்தைச் சென்றடை தலும் என விடுபாடடைவுகளும் புடைபெயர்ச்சியும் ஆகிய இருவகைக்கிரியைகளுண்டாகின்றன. அதுபோல ஜீவன் பரமாத்மாவினிடத் தோடுகின்றான் என்னுமிடத்து விடுதலும் அடைதலுமாகிய வொருவகைக் கிரியை மாத்திர முண்டாகின்றது; புடைபெயர்ச்சியாகிய கிரியையில்லை. எதனு லெனில், அரிகேசநல்லூர் திருநெல்வேலியாகிய இரண்டு நகரங்களும் தூரமாகிய வேறு வேறிடங்களிலிருத்தலாலும் ஓடுகின்ற சாத்தன் பரிச்சின்னனுதாலும் புடைபெயர்ச்சி

வேண்டியிருக்கின்றது. ஜீவனும் பரமாத்துமாவும் வேறு வேறிடங்களிலாயினும், வேறு வேறாகவாயினுமில்லை. ஆதலால் புடைபெயர்ச்சி வேண்டியதில்லையென்க. அப்படியன்று. அவித்தை அந்தக்காரணங்களும் மாயையுமாகிய வேறுவேறிடங்களில் அல்லவா ஜீவனும் பரமான்மாவும் முறையேயிருக்கின்றனவெனில், அந்தமாயை யவித்தைகளுக்கு வியாபகத்தன்மை பரிச்சின்னத்தன்மை முதலிய தருமங்களைக் குறித்து ஏகதேசிகள் பேதங்கூறுவரன்றிச் சொரூபத்தாலும் வியாவர்த்தகத் தன்மையினாலும் பேதமில்லை. எப்படியெனில், மாயையானது எந்தச்சேதனத்தை யாசிரயித்திருந்து வியாவர்த்தகம் செய்கின்றதோ அந்தச் சேதனத்தையே அவித்தையும் ஆசிரயித்திருந்து வியாவர்த்தகம் செய்தலாலெனவறிக. அப்படியானால் ஒரே சேதனத்தை மாயையும் அவித்தையுமாகிய இரண்டும் எவ்வாறு ஆசிரயித்திருந்து வியாவர்த்தகஞ் செய்யும் (வேறு பிரித்தறிவிக்கும்) எனில், கட்டிட வடிவமாகிய மடமானது தனக்காசிரயமாகிய எந்த வாகாயத்தை மடாகாயமென்று வியவகரிக்கும்படி மஹாகாயத்தினின்று வேறு பிரித்தறிவிக்கின்றதோ அந்த வாகாயத்தை அம்மடத்தினுள்ளிருக்கின்ற கடமும் ஆசிரயித்திருந்து இது கடாகாயமென்று வியவகரிக்கும்படி அம்மடாகாயத்தினின்றும் வேறு பிரித்தறிவிக்கின்றது. அவ்விடத்துக்கடமானது தானிருத்தற்கிடங்கொடுத்திருக்கின்ற எந்த வாகாயத்தை வியாவர்தத்கம் செய்கின்றதோ அந்த ஆகாயத்தை மடமும் வியாவர்த்தகம் செய்தலாலொரேயாகத்தை கடம்மடம் என்னுமிரண்டு பாதிகளும் வியாவர்த்தகஞ்செய்தலைக் கண்டுகொள்க. இத்திருஷ்டாந்தம்போல மாயையானது தனக்காசிரயமாகிய எந்தச் சேதனத்தை

ஈசுவரசேதனமென்று வியவரிக்கும்படி சுத்தசேதனத்தி னின்றும் வேறு பிரித்தறிவிக்கின்றதோ அந்தச் சேதனத் தை அம்மாயையினுள்ளடங்கியிருக்கின்ற அவித்தையுமாசிர யித்திருந்து இது ஜீவசேதனமென்று வியவகரிக்கும்படி அவ் வீசுரசேதனத்தினின்றும் வேறு பிரித்தறிவிக்கின்றது. அவ் விடத்து அவித்தையானது தானிருத்தற்கிடங்கொடுத்திருக் கின்ற எந்தச்சேதனத்தை வியாவர்த்தகஞ் செய்கின்றதோ அந்தச் சேதனத்தை மாயையும் வியாவர்த்தகம் செய்தா லாலொரே சேதனத்தை அவித்தை மாயையென்னு மிரண்டு பாதிகளும் வியாவர்த்தகஞ் செய்கின்றதென்றறிக.

அப்படியானல் அவ்வாகாயத்திற்குக் கடத்தளவிலுள் ளது கடாகாயம், மடத்தளவிலுள்ளது மடாகாயம் எனப் பேதந்தோற்றுகின்றது. இதுபோலச் சேதனத்தினிடத்தும் அவித்தையி(தேகத்தி)னவிலுள்ளது ஜீவசேதனம், மாயையி னளவிலுள்ளது, ஈசுவரசேதனமெனப் பேதங்காணப்படு கின்றதே? அந்தப்பேதத்தால் நாநாத்துவம் சித்திக்கின்ற தல்லவா? அந்த நாநாத்தன்மையுடைய சேதனத்தை ஏகமெனல் பொருந்தாதெனின், அந்த நாநாத்தன்மை திருஷ்டாந்தத்திற் கடமடங்களாகிய உபாதிகளேயும் தார்ஷ்டாந்தத்தில் அவித்தை மாயைகளாகிய உபாதிகளே யும் விஷயஞ்செய்கிறதன்றி உபகிதங்களேப்பரிசிக்கிறதில்லே. ஆதலால் ஆகாயமும் சேதனமுமாகிய உபகிதங்கள் ஏக மென்பதற் கிழுக்கில்லே யென்றறிக. ஆகவே திருஷ்டாந்த மாகக் கூறிய கடமட உபாதிகட்கு எவ்வாறு வேறுவேறி டத்திருக்கை சித்திக்கிறதில்லேயோ அவ்வாறு தார்ஷ்டாந்த அவித்தைமாயை கட்கும் வேறுவேறிடத்திருக்கை சித்திக்

கிறதில்லை. இக்காரணத்தால் உபாதிகளுக்கேவேறு வேறிடத்திருக்கை சித்திக்காதபோது உபகித சேதனங்கட்கு எவ்வாறு வேறுவேறிடத்திருக்கை சித்திக்கும் ஒருவாற்றானும் சித்திக்கிறதில்லை, அது சித்திக்காமற்போகவே வேறுவேறாந் தன்மையுமில்லை. ஆவ்வாறு வேற்றுமையின்றி ஏகமாயிருக்கின்ற சேதனத்திற்கு உபாதிகளின்றிருட்டியால் ஜீவசேதனம் ஈசுரசேதனம் எனப்பெயர் மாத்திரத்தின் பேதங்கற்பிக்கப்பட்டிருக்கிறது. அதனாலீசுர சேதனத்தினிடத்து ஜீவசேதனத்திற்குப் புடைபெயர்ந்தோடுதல் சம்பவிக்கிறதில்லை. அவ்வாறு அந்தக்கரண உபகித சேதனத்திற்கும், மாயா உபகித சேதனத்திற்கும் பேதமில்லாமையாலோடுதல் சம்பவியாதாயினும் அந்தக்காணப்பிரதி விம்பனுக்கும், மாயாப்பிரதி விம்பனுக்கும் பேதமும் வேறு வேறாந்தன்மையுமிருத்தலால் அந்த மாயாப்பிரதி விம்பனிடத்து அவித்தியாப்பிரதி விம்பனுக்கோடுதல் சம்பவிக்குமெனில், அவ்விருவரும் அவ்விரண்டு பாதிகளிடத்துப் பிரதிவிம்பிதராதலால் அவ்வுபாதிகட்குப்போல அவர்கட்கும் வேறுவேறிடத்திருப்புச் சித்தியாமையாலோடுதல் சம்பவியாதென்க.

அப்படியானால் சுருதியிற்கூறிய ஓடுதல் என்னும் வாக்கியம் பொருளற்றதாமேயெனில், பொருளற்றதாகாது. விடுபாடு அடைவுகளென்னும் கிரியையை உணர்த்துதலாற் பொருடையதேயாமென்க. ஆனால் அவ்விடுபாடு அடைவுகள் எவ்வாறுண்டாகின்றதெனில் சுழுத்தியில் அவித்தையோடுகூடிய ஆநந்தமயன் சாக்கிரத்தில் அந்தக்கரணத்தோடுகூடி விஞ்ஞானமயனென்னும் பெயரை யடைந்து ஞாதிரு, ஞானம், ஞேயம் என்னும் திரிபுடித்துவை தத்

தோடு கூடியவனுயிருக்கின்ருன். அக்காரணத்தால் யான் இந்த ஞானத்தின் கர்த்தா இச்சுகதுக்க போகங்களின் போக்தாவென்னும் அபிமான முடையனுயிருக்கின்ருன். பின்பு சுழுத்திகாலத்தில் அவ்வந்தக்காரணமானது தனக்குக் காரணமாகிய அவித்தையிலொடுங்குதலால் அவ்விஞ்ஞான மயனே ஆநந்த மயனென்று சொல்லப்படுகின்ருன். அவ்விடத்து அந்தக்கரணமாகிய உபாதி விடுபடும்பொழுது அதிலுள்ள கர்த்திருத்துவ போக்திருத்துவ அபிமானமும் விடுபடுகின்றது. ஆகவே அவ்வந்தக்கரணத்தையும் அதன் கணுள்ள அபிமானத்தையும் விடுதலும் அவித்தையோடு கூடுதலுமே ஒடுதலென்னும் சொல்லிற்குப் பொருளாம். இது திருஷ்டாந்தத்தில் சாத்தனுனவன் முன்னிருந்த அரிகேசனல்லூரை விடுதலும் திருநெல்வேலியைச் சார்தலும் எப்படியோடுதலென்னும் சொல்லிற்குப் பொருளாயிற்ருே அப்படியென்றறிக.

இனி அப்பரமாத்துமாவி லொருமையை யடைந்து என்னும் வாக்கியத்திற்குப் பொருள்கூறப்படுகின்றது. எப்படியெனில், இவ்விடத்து ஒருமையென்னும் சொல்லிற்கு ஐக்கியம் (ஏகம்) என்பது பொருள். அந்த ஐக்கிய மென்னும் அர்த்த நிரூபணம் ஒரேவஸ்துவிலும்சித்தியாது. வேறு வேறுயுள்ள இரண்டு வஸ்துக்களிடத்தும் சித்தியாது. மற்றெத்தன்மைத்தாகிய வஸ்துவிற் சித்திக்குமெனில், உண்மையில் ஏகமாயும், கற்பிதத்தாற் பேதமாயும், (நாநாவாயும்) உள்ள வஸ்துவினிடத்துச் சித்திக்கின்றது. எப்படியெனில், ஜீவான்மா பரமான்மாவென்னும்சொற்களுக்குக் கற்பிதத்தா (உபாதியின் கிரகணத்தா) லிருபொருட்டன்மையும் பாமார்த்

தத்தா (உபாதியின் விடுபாட்டா) லொருபொருட்டன்மை யும் சித்திக்கின்றன. இங்கு அவ்வுபாதியின் விடுபாட்டா லுண்டாகிய வொருபொருட்டன்மையே யொருமையென் னும் சொல்லின் அருத்தமாம். அந்த வொருமையானது ஜீவனுக்கும் பரமான்மாவிற்கும் சாமானாதிகரணியத்தாற் சித் திக்கின்றது. அந்த ஜீவனது முக்கியார்த்த சொரூபத்தில் அதிஷ்டானம் ஆபாசம் என்னும் பேதத்தால் இருவகை அமுக்கியார்த்தங்க ளிருக்கின்றபடியால் அந்த அதிஷ்டான வடிவ சேதனமும், அத்தியஸ்த வடிவ ஆபாசமும் ஒன்றாகத் தப்தாயபிண்டம்போற் கலந்திருக்கின்றன. அதனாற் சரீராதி களோடு கூடிய சேதனத்தை முக்கியார்த்தமெனக் கூறு கின்றனர். அந்தச் சரீராதிகளையும் சேதனத்தையும் வேறு வேறு பிரித்துக்கூறுமிடத்து அவையிரண்டும் தனித்தனி யாக நின்று அமுக்கியார்த்தங்களாகின்றன. அவற்றுள் அதிஷ்டான வடிவ அமுக்கி(இலக்கி)யார்த்தமாகிய கூடஸ்த சேதனத்திற்கு முக்கிய சாமானாதிகரணியத்தாலும் அத்தி யஸ்தவடிவ அமுக்கி (இலக்கி) யார்த்தமாகிய சிதாபாசனுக் குப் பாதசாமானாதிகரணியத்தாலும் பரமான்மாவோடு ஐக் கியமுண்டாகின்றது. எவ்வாறெனில்,

சாக்கிரத்தில் அந்தக்கரணத்தை யுபாதியாகவுடைய காலத்தில் எந்தச்சேதனம் கூடஸ்தனென்னும் பெயரால் வியவகரிக்கப்படுகின்றதோ அந்தச் சேதனம் சுழுத்தியில் அஞ்ஞானத்தை யுபாதியாகக் கொண்டிருக்கும்பொழுது பிரஹ்மமென்னும்பெயரால் வியவகரிக்கப்படுகின்றது. எதனா லெனில், அந்தக்கரணத்தோடு கூடிய சேதனத்திற்கு மேற் கூறியவாறு கர்த்திருத்துவாதி அபிமானத்தாற் பந்த முண்

டாகின்றது. அப்பந்த முடைமையால் ஜீவத்தன்மை யுண்டாகின்றது. பின்பு சுழுத்தி காலத்தில் அவ்வந்தக்கரணமாகியவுபாதி தனக்குக்காரணமாகிய அஞ்ஞானத்தி லொடுங்குகின்றது. ஒடுங்கவே அந்தக்கரண உபாதியோடு கர்த்திருத்துவாதி யபிமானமும் ஜீவசேதனத்திற்கு நீங்குகிறது. அவ்வபிமான நீக்கத்தால் ஜீவத்தன்மை நீங்குகின்றது. அந்த ஜீவத்தன்மையின் நீக்கத்தாலும் அஞ்ஞானமாகிய உபாதியுடைமையாலும் அந்தஜீவனுக்குப் பிரஹ்மத்தன்மை சித்திக்கின்றதென்றறிக.

மேற்கூறிய விதமாக அந்தக்கரணவுபாதியின் விடுபாட்டாற் சீவத்தன்மை நீங்கினும் அஞ்ஞான சம்பந்தத்தாலீசுரத்தன்மை சித்திக்குமேயன்றிப் பிரஹ்மத்தன்மை சித்தியாதென்று கூறின், அவ்வீசுரத்தன்மையானது சுத்த சத்துவ குணமுடைய மாயாவிசிட்ட சேதனத்திற்குச் சித்திக்குமேயன்றி அஞ்ஞான விசிட்ட சேதனத்திற்குச் சித்தியாது. எதனாலெனில், சத்துவாதி முக்குணங்களின் சாம்யாவஸ்தைக்கு அஞ்ஞானமென்பதும், பிரகிருதியென்பதும், சக்தியென்பதும் பரியாயப்பெயர்களாம். இந்த அஞ்ஞானமானது சேதனத்தை யாசிரயித்திருந்தாலும் அதற்குவேறாகத் தோற்றுகிறதில்லை. எதுபோலெனில், இந்திரசாலவித்தை செய்தற்கு முன்னும் பின்னும் அச்சத்தியானது இந்திரசாலிகனுக்கு வேறாகத் தோற்றாமைபோலெனவறிக. அப்படியானால் அந்தச் சத்தியோடுகூடிய சேதனத்திற்கு மாயாவிசிட்டத்தன்மை எக்காரணத்தா லுளதாகின்றதெனக் கேட்கில், அந்தச் சத்திக்கு அம் முக்குணங்களின் சாம்யாவஸ்தை நீங்கிச் சத்துவகுணமானது மேற்பட்டு மற்றைய

குணங்கள் தாழ்ந்திருக்குங்காலத்தில் மாயாவிசிட்டத்தன்மை யுளதாகின்றதென்றறிக. ஆதலால் முக்குணங்களின் சாம்யாவஸ்தை வடிவ அஞ்ஞான விசிட்டத்தன்மையாற் பிரஹ்மத்தன்மையே சித்தமாமென்க. இவ்விதமாக எந்த வஸ்துவிற்கு எந்த வஸ்துவோடு எப்போதும் அபேத மிருக்கின்றதோ அந்த வஸ்துவிற்கு அதனோடு முக்கியசாமாநாதி கரணியம் சொல்லப்படும் என்னும் இலக்கணத்தால் ஜீவ சொரூபத்தில் அதிஷ்டான வடிவமாயிருக்கின்ற கூடஸ்த சேதனத்திற்குப் பிரஹ்மத்தோடு எப்போதும் அபேத மிருத்தலால் அபேத சாமாநாதி காணியமென்று கூறுகின்ற முக்கிய சாமாநாதிகாணியத்தாற் சுருதியிற்கூறிய வொருமை (ஐக்கியம்) சித்திக்கின்றது. அவ்வைக்கியம் எதுபோலெனில், கடாகாயத்திற்கு மஹாகாயத்தோடு எப்பொழுதும் அபேத மிருத்தலால் அக்கடாகாயத்திற்கு அம் மஹாகாயத்தோடு எவ்வாறு முக்கியசாமாநாதி கரணிய மிருக்கின்றதோ அவ்வாறெனக் கண்டுகொள்க.

இனிப் பாதசாமாநாதி கரணியத்தால் ஆபாசனுக்குப் பரமான்மாவோடுண்டாம் ஒருமை (ஐக்கியம்) கூறப்படுகின்றது. எப்படியெனில், நித்தியவஸ்துவாகிய பிரஹ்மத்தின் சிற்சொரூபம் எவ்வாறு பூரணமாயிருத்தலால் ஏகமும் வியாபகமுமாயிருக்கின்றதோ அவ்வாறு அஞ்ஞானமும் அதனை ஆசிரயித்திருத்தலால் ஏகமும் ஆபேக்ஷிக வியாபகமுமாயிருக்கின்றது. அக்காரணத்தால் அந்த நித்திய வஸ்துவினிடத்து அத்தியஸ்தமாயிருக்கின்ற பிரபஞ்சப் பொருள்களெல்லாம் அஞ்ஞானத்தால் மறைக்கப்பட்டிருக்கின்றன. அவற்றுள் எந்தவெந்த விஷயாகாரத்தைப் புத்தி விருத்தி

தரிக்கின்றதோ அவ்விருத்தியால் அந்தவந்த விஷயத்தை
மறைத்திருந்த அஞ்ஞானத்தின் ஆவரணம் நீங்குகின்றது.
நீங்கவே அவ்விஷயத்தளவிலுள்ள நித்திய வஸ்துவின் சிற்
சொரூபம் சொப்பிரகாச மாதலாற் றானேவிளங்குகின்றது.
அவ்வாறுதான் விளங்குகின்றதுமன்றித் தன்னிடத்து அத்தி
யஸ்தமாகிய அவ்விஷயத்தையும் விளக்கு (ஆபாசனுக்கு
விளங்கச்செய்) கின்றது. அதாவது ஞாதத்தன்மை (ஆபா
சனது ஞானத்திற்கு விஷயமாந்தன்மை)யை உண்டுபண்ணு
கின்றது. அந்த விளக்கத்தால் அவ்விஷயத்தினுகாரத்தைத்
தரித்த புத்திவிருத்தியில் உதயமாகிய சிதாபாசன் அக்கட
முதலிய விஷயத்தை இது கடம் எனக் கட (விஷய) மாத்
திரத்தை அறிகின்றான். அவ்வாபாசனின்றிக் கடமுதலிய
விஷயஞானமுண்டாகிறதில்லை. விஷயம் அபரோக்ஷமாகுங்
காலத்தில் அவ்வபரோக்ஷமானது அபரோக்ஷமாகத்தக்கவிஷ
யத்தோடு பிரஹ்மம், ஆபாசன், விருத்தி என்னும் மூன்றன்
சம்பந்தத்தையும் அபேக்ஷிக்கின்றது. எப்படியெனில், விஷய
த்தின் ஞாதத்தன்மை பிரஹ்மத்தின் சம்பந்தத்தாலுண்டா
கின்றது. விஷயம் ஆபாசன்சம்பந்தத்தாற் பிரகாசிக்கப்படுகி
ன்றது. விஷயத்தின் ஆவரணநீக்கம் புத்திவிருத்தியின் சம்பந்
தத்தாலுண்டாகின்றது. இவ்விதமாக அம்மூன்றுவஸ்துக்க
ளின்சம்பந்தமும் உண்டாகியபோது விஷயம் அபரோக்ஷமா
கின்றது. அம்மூன்றனுள் ஆபாசனுக்கும் புத்திவிருத்திக்கும்
எந்த விஷயத்தோடு சம்பந்தமில்லையோ அந்த விஷயம் பிர
ஹ்மத்தின் சம்பந்தமாத்திரத்தால் அஞ்ஞாத(அறியப்படா)த்
தன்மையோடு விளங்குகின்றது. அப்பொழுது அவ்விஷயம்
எவ்வாறு வியவகரிக்கப்படுகின்றதெனில், அப்பொழுது நான்
கடத்தையறியேன் என்றாயினும் அல்லது எனக்குக் கடம்

தோற்றமில்லையென்றாயினும் வியவகரிக்கப்படுகின்றது. இவ்வாறு வியவகரித்தற் கேதுவாய் நித்திய வஸ்துவாகிய ஒன்றன் சம்பந்த மாத்திரத்தால் அஞ்ஞாதத் தன்மையோடு விளங்கும் விஷயத்தைப் பரோக்ஷவிஷயம் என்று கூறுகின்றனர். அந்தக்கட முதலிய விஷயங்களுக்கு இந்த அஞ்ஞாதத்தன்மையும் ஞாதத்தன்மையைப்போல பிரஹ்ம சைதன்னியத்தினலேயே யுண்டாகின்றதென்க. ஆனால் புத்தி, ஆபாசங்களுக்கு விஷயத்தோடுசம்பந்தமின்மை யுண்டாதல் போலப் பிரஹ்மத்திற்கும் சம்பந்தமின்மை யுண்டாகுமோவெனில், அது நித்தியமாதலால் அதன் சம்பந்தம் விடுபடாதென்க. இவ்வாறு அபரோக்ஷ வெளிவிஷயங்களிற் பிரஹ்மம் ஆபாசம் என்னும் இரண்டன் சொரூபமும் வேறுவேறு பிரித்துக் காட்டப்பட்டன. இங்குச்சுருதியிற் கூறிய ஒருமை என்னும் பதத்திற்குப் பொருள்கூற ஆரம்பித்து இடையே சிதாபாசனை வியவகரித்தல் மற்றென்று விரித்தலென்னும் குற்றமாகாதோவெனில், அவ்வொருமை யென்னும் சொல்லின் பொருளினிடத்துச் சிதாபாசனுக்குப் பாதசாமானதிகரணியத்தன்மை வாயிலாகச் சம்பந்தமிருத்தலாலும் அவ்வாபாசனது சொரூபத்தை நிரூபிக்காமல் அவனது பாதம் நிரூபிக்க முடியாததாலும் இவ்வாபாச நிரூபணமானது "ஜீவன் பரமான்மாவோடொருமையை யடைந்து" எனச் சுருங்கச்சொல்லிய வாக்கியத்தின் பொருளை விளங்கக் காட்டுதலாலும் இது சுருங்கச்சொல்லிய அவ்வாக்கியத்திற்கு விளங்கவைத்தலென்னும் அழகாவதன்றிக் குற்றமாகாதென்க.

இனி அச்சிதாபாசனது பாதத்தின் றன்மை காட்டப்படுகின்றது. அப்பாதம் எவ்வாறுண்டாகின்றதெனில், எங்

தப் புருஷன்றனது அந்தக்கரணவிருத்தியை வெளியிற்
காணப்படுகின்ற பல விஷயங்கள் உள்ளடங்குமாறு வியா
பகமாக்குகின்றானோ அவனது அவ்வந்தக்கரணவிருத்தி
யாதொரு விஷயாகாரமுமடையாமல் வியாபித்துப் பிரஹ்மா
காரமாகின்றது. அப்பிரஹ்மாகார விருத்தியாற் பிரஹ்ம
சைதன்னியத்தை யாசிரயித்திருந்த அஞ்ஞானம் நாசமா
கின்றது. அவ்வஞ்ஞானம் நாசமாகவே பிரஹ்மத்தின் சிற்
சொரூபம் சொப்பிரகாசமா யிருத்தலால் அன்னியப்பிரகா
சத்தின் அபேக்ஷையின்றித் தானே பிரகாசிக்கின்றது. அப்
பொழுது அந்தப்பிரஹ்மாகாரவிருத்தியிற் சிதாபாசனிருக்கி
னும் பிரஹ்மத்தோடொருமையை (ஐக்கியத்தை) யடைந்
திருக்கின்றான். விஷயாகார விருத்தியிற்போல வெளிப்பட்
டுத் தோன்றுதலும் பலவடிவ விளக்கத்தைச் செய்தலு
மில்லை. இது முன்சுருதியில் "ஜீவன் பரமான்மாவோடொரு
மையை யடைந்து" எனக்கூறிய வாக்கியத்தின் பொருளாம்.
இப்பிரஹ்மாகாரவிருத்தியானது மஹாவாக்கிய விசாரத்தால்
நான் பிரஹ்மமாயிருக்கிறேன் என்னும் நிச்சயத்தால் உண்
டாகின்றது. ஆதலால் இது மஹாவாக்கிய விசார ஜந்நிய
மெனப்படுகின்றது. ஜீவப்ரஹ்மங்களின் ஐக்கியத்தை
யறிவிக்கும் வாக்கியம் எதுவோ அது மஹாவாககியமெனப்
படும். அவ்வாக்கியத்தில் அகம் (நான்) என்றும், பிரஹ்ம
(பிரஹ்ம) மென்றும், அஸ்மி(இருக்கிறேன்) என்றும் மூன்று
பதங்களிருக்கின்றன. அம்மூன்று பதங்களும் ஜீவனையும்,
ஈசுரனையும் அவ்விருவரது ஐக்கியத்தையும் அறிவிப்பனவாம்.
எப்படியெனில், பிரத்தியச்சேதனனாகியயான் பரிபூரணமாக
விளங்குகின்ற இப்பிரஹ்மமாய் யிருக்கின்றேன் என்பது
அம்மூன்று பதங்களின்றிரண்ட பொருளாம். அவற்றுள்

நான் என்றுகூறப்பட்ட அகம்பதத்திற்கு அத்தியஸ்த வடிவ ஆபாசமும் அதிஷ்டான வடிவ கூடஸ்தனும் ஆகிய இரண்டும்கலந்தவடிவம் முக்கியார்த்தமாம். அவையிரண்டும். தனித்தனியாகப் பிரிக்கப்படுங்காலத்துப் பிரிவுபட்ட அவ்வொவ்வொன்றும் அமுக்கி (இலக்கி) யார்த்தமாகின்றன. அவற்றுள் அதிஷ்டானவடிவ கூடஸ்தனுகிய இலக்கியார்த்தமாகிய ஜீவனுக்குப் பிரஹ்மத்தோடு * முக்கிய சாமானுதிகரணியத்தாலுண்டாகின்ற ஐக்கியம் முன்னர்க் கூறப்பட்டது.

* சாமானுதிகரணிய விலக்கணம் பலவகையாகக் கூறப்பட்டிருக்கின்றது. அவற்றுள் இவ்விடத்திற்குப் பொருத்தமாகிய இலக்கணமாவது பரஸ்பரம் அபின்னமாகிய இரண்டு பதார்த்தங்களின் அபின்னத்தன்மை வடிவசம்பந்தம் சாமானுதிகரணியமெனப்படும். சாமானுதி கரணியமுடைய இரண்டுபதம், அல்லது தர்மம், அல்லது பதார்த்தம் சாமானுதிகரணமாம். அவற்றின் சம்பந்தம் சாமானுதி கரணியமெனப்படும், அது முக்கிய சாமானுதிகரணியம், பாதசாமானுதிகரணியம் என்னும் பேதத்தாலிரண்டுவகையாம்.

அவற்றுள் எந்த வஸ்துவிற்கு எதனோடு எப்போதும் அபேதமிருக்கின்றதோ அந்த வஸ்துவிற்கு அதனோடு முக்கிய சாமானுதிகரணியம் சொல்லப்படும். அதனையே அபேத சாமானுதிகரணியமென்றும் கூறுவர். எப்படியெனில், கடாகாயத்திற்கு மஹாகாயத்தோடு எப்போதும் அபேதமிருக்கின்றது. அதனுற் கடாகாயத்திற்கு மஹாகாயத்தோடு முக்கிய சாமானுதிகரணியமிருக்கின்றது. அதுபோலக் கூடஸ்தனுக்குப் பிரஹ்மத்தோடு எப்போதும் அபேதமிருக்கின்றது. அதனுற் கூடஸ்தனுக்குப் பிரஹ்மத்தோடு முக்கிய சாமானுதிகரணியமிருக்கின்றது.

எந்த வஸ்துவிற்குப் பாதமுண்டாய் எதனோடு அபேதமுண்டாகின்றதோ அந்த வஸ்துவிற்கு அதனோடு பாதசாமானுதிகரணியம் சொல்லப்படுகின்றது. எப்படியெனில், புருஷனுக்குப் பாதமுண்

மற்றைய அத்தியஸ்தவடிவ ஆபாசனுகிய இலக்கியார்த்தமாகிய ஜீவனுக்குப் பிரஹ்மத்தோடு தனது சொருபத்தைப் பாதித்தலாகிய பாதசாமானுதிகரணியத்தாலுண்டாகின்ற ஐக்கியம் பத்தாவது பிரகரணத்திற்கூறப்படும் அதனிலக்கண மாத்திரம் இங்கு கூறப்படுகின்றது. எப்படியெனில், முன் ஆபாச நிரூபணத்திற் கூறிய அந்தக்கரணத்திற் பிரதிவிம்பித்துள்ள விஞ்ஞானமயன் எவனே அவன் இங்குச்சூக்குமமாகிய பிரஹ்மாகார விருத்தியிற்றேன்றிப் பிரஹ்மஞானத்தையும் அந்த ஞானனுபூதியாலுண்டாகின்ற நிரங்குசதிருத்திவடிவ ஆநந்தத்தையும் அனுபவிக்கின்றான். ஆதலாற் பிரஹ்மாநந்தத்தைப் புசித்தலாலும் அவ்விடத்து ஆநந்தசொரூபியாயிருத்தலாலும் ஆநந்தமயனெனப்படுகின்றான். இவ்வாநந்தமயன் அத்துவைதியாயும், நிரபிமானியாயும், ஆநந்த சொரூபியாயும் இருக்கின்றான். விஞ்ஞானமயனுனவன் திரிபுடியினலாகிய துவைதியாயும், துக்கியாயும், கர்த்திருத்துவாதி யபிமானியாயும், விஷயாகாரமடைதலாற் றாலியாயும் இருக்கின்றான். இந்த விஞ்ஞானமயனிடத்துள்ள துவைதித்தன்மை, துக்கித்தன்மை, அபிமானித்தன்மை,

---

டாயத் தாணுவினேடாவது அல்லது பிரதிவிம்பத்திற்குப் பாதமுண்டாய் விம்பத்தோடாவது அபேதமுண்டாகின்றது. அதனுல் புருடனுக்குத் தாணுவோடும் பிரதிவிம்பத்திற்கு விம்பத்தோடும் பாதசாமானுதிகரணியமிருக்கின்றது.

இத்திருஷ்டாந்தம் போலச் சிதாபாசனுக்குப் பாதமுண்டாய்க் கூடஸ்தனேடாவது பிரஹ்மத்தோடாவது அபேதமுண்டாகின்றது. அதனுல் ஆபாசனுக்குக் கூடஸ்தனேடும் பிரஹ்மத்தோடும் பாதசாமானுதிகரணியமுண்டு.

தூலித்தன்மைகளே அவனது சொரூபமாம். அவ்விசேடணங்களின்நீக்கமே ஆபாசனது சொரூபபாதத்தின் அருத்தமென்றறிக. இவ்வாறு விஞ்ஞானமயனிடத்துள்ள அவ்விசேஷணத் தன்மைகள் பிரஹ்மாகார விருத்தியாற் பாதிதமாகவே அவ் விஞ்ஞானமயவாபாசன் அவ்விசேடணத் தன்மைகளின் விடுபாட்டால் ஆநந்தமயனாக மிஞ்சியிருக்கின்றான். அவன் அப்பிரஹ்மாகார விருத்தியிலிருக்கினும் சூக்குமத்தன்மையால் அவ்விடத்துப் பிரஹ்மத்திற்கு வேறாகத் தோன்றாமல் அதனோடு ஐக்கியத்தை யடைகின்றான். இவ்வாநந்தமயனாகிய பிரதி விம்பனுக்கு விம்ப சேதனமாகிய பிரஹ்மத்தோடு எவ்விதத்தா லைக்கியமுண்டாகின்றதெனில், ஆபேக்ஷிக சித்துவடிவனா யிருத்தலாலும் அகம்பதத்தின் முக்கியார்த்த சொரூபத்திற் கலந்திருத்தலாற் சீவத்தன்மையுடையனாதலாலும், மேற்கூறப்பட்ட துவைதித்தன்மையாதிய விசேடண வடிவ தனது சொரூபத்தைப் பாதித்தலாலாகின்ற பாதசாமானாதி காரணியத்தாலெனவறிக. ஆனாற் பிரஹ்மாகார விருத்தியில் ஆநந்தமயனாகிய ஜீவனிருக்கும் பொழுது அவனது சொரூபத்தின் பாதம் எவ்வாறுண்டாயிற்றெனில், அவனது சொரூபம் துவைதித்தன்மை முதலிய விசேடண முடைமையெனவும், அவற்றின் நீக்கமே பாதமெனவும் மேற்கூறப்பட்டிருக்கின்றன. அப்பாதமானது மேற்கூறப்பட்ட பிரஹ்மாகார விருத்திவாயிலாக உண்டாயிற்றெனவறிக. பிரஹ்மாகார விருத்தியிற் பிரஹ்மத்தோடைக்கியத்தை யடைந்திருக்கின்றானெனக் கூறப்பட்டிருத்தலின் அங்கிருப்பவன் ஆபாசத்தன்மை பாதிக்கப்பட்டுப் பிரஹ்மத்தன்மை யடைந்தவனென்றறிக. இவனுக்கு "வீந்த சிதாபாசன் போமளவும் விவகாரந்தொடரும்" எனத் தாண்

டவராய சுவாமிகள் ஆபாசத்தன்மையினிறப்புக் கூறியிருத் தலும் கண்டுகொள்க. ஆகவே விதேக மோக்ஷபரியந்தம் அவனது இருப்பும் விவகாரமும் உளவாமென்றறிக.

ஆதலாற் பாதார்த்தத்தன்மை இவ்விதமாக உண்டாத லன்றி நான் பிரஹ்மமென்று அவ்வாக்கியத்தை உச்சரித் தலாலாவது தியானித்தலாலாவது ஆபாசனுக்கு மேற்கூறிய பாதமும் பிரஹ்மத்தோடைக்கியமு முண்டாதலில்லை. இல்லை யென்பது எதனால் விளங்குகிறதெனில், பஞ்சதசியிற் பா தார்த்தத்தன்மை கூறியிருக்கின்ற கூடஸ்த தீபத்து நாற் பத்து மூன்றாவது சுலோகவியாக்கியானத்தில் "இப்புருடன் தாணு" என்னும் வாக்கியத்தில் எப்படித் தாணுத்தன்மை யின் ஞானத்தால் புருடத்தன்மையின் புத்தி நிவிருத்திக்கப் படுகின்றதோ அதுபோல யான் பிரஹ்மம் என்னும் ஞானத் தினால் யான் கர்த்தாவென்றல் முதலிய வடிவினதாகிய அகம் புத்தி முழுவதும் நிவிர்த்திக்கப்படுகின்றது" எனக் கூறியிருக்கின்றது. அங்குக் கர்த்திருத்தன்மை முதலியவற் றின் பாதத்திற்கு ஞானத்தையேதுவாகக் கூறியிருக்கின்ற தன்றி உச்சாரணத்தையாவது தியானத்தையாவது ஏது வாகக்கூறவில்லை. அதனாலெனவறிக.

இனி "அவ்விடத்தைய . பிரஹ்மாநந்தமாகின்றான்" என்னும் வாக்கியத்திற்குப் பொருள் கூறப்படுகின்றது. ஆபாசன் எவ்வாறு பிரஹ்மாநந்தமாகின்றான் எனில், அவ் வாபாசனுக்கு எந்த எந்த ஏதுவாற் சுகம் அடையப்படுகின் றதோ அந்தவந்த ஏதுப்பொருள்களை அவ்வச்சுகங்களுக்கு விசேடணமாக்கிக்கூறுகின்றனர். எப்படியெனில், விஷயா கார விருத்தியின் ஏதுவாலுண்டாகின்ற சுகத்தை விஷயா

நந்தம் எனக் கூறுகின்றனர். அதுபோலப் பிரஹ்மாகார விருத்தியின் எதுவாலுண்டாகின்ற சுகம் பிரஹ்மாநந்தம் எனக் கூறப்படுகின்றது.

அப்படியல்ல. பிரஹ்மத்தினின்றுண்டாகின்ற ஆநந்தமாதலால் அதற்குப் பிரஹ்மாநந்த மெனனும்பெயர் வந்திருக்கிறதெனில், அவ்வாறு பிரஹ்மாநந்தம் பிரஹ்மத்தினின்றுண்டாகின்றதாகக் கொள்ளின் விஷயாநந்தம் விஷயத்தினின்றுண்டாகின்றதாகக் கொள்ளல்வேண்டும். அவ்வாறு கொள்ளின் அத்துவைதமாகிய ஆன்மாவே ஆநந்தமாம் என்பது முதலிய சுருதிகளுக்கு விரோதமாம். ஆதலால் அவ்வாறு கொள்ளலாகாதென்க. அப்படியானல் பிரஹ்மாகாரவிருத்தி வாயிலாக வுண்டாகிய சுகம் பிரஹ்மாநந்தமாகுக. அதனுற் சுருதியிற் பிரஹ்மாநந்தமாகின்றான் என்று கூறிய வாக்கியத்திற்குப் பொருளாயிற்றுவெனில், விஷயாகாரவிருத்தியிலுள்ள ஆபாசனுக்கு எவ்வாறு அவ்விஷய வடிவத்தன்மை சித்திக்கின்றதோ அவ்வாறு பிரஹ்மாகார விருத்தியிலுள்ள ஆபாசனுக்கு அப்பிரஹ்மாநந்த வடிவத் தன்மை சித்திக்கின்றதென்க. அப்படியல்ல. விஷயாகார விருத்தியிலுள்ள ஆபாசனுக்கு அவ்விஷய வடிவத்தன்மை சித்தித்தல்போல பிரஹ்மாகார விருத்தியிலுள்ள ஆபாசனுக்கு அப்பிரஹ்ம வடிவத்தன்மை சித்திக்குமேயன்றி பிரஹ்மாநந்த வடிவத்தன்மை சித்தியாதெனில், அச்சங்கை பொருந்தாது. எதனுலெனில், அவ்வாநந்தம் பிரஹ்மத்துக்கு வேறுகவில்லை. பிரஹ்மமே யாநந்தமாம். ஆதலால் பிரஹ்ம வடிவத்தன்மையே பிரஹ்மாநந்த வடிவத்தன்மையென்றறிக.

இங்கு விஷயாகாரமடைந்த விருத்தியிலுள்ள ஆபாசனுக்கு விஷயவடிவத்தன்மை சித்திக்கின்றதெனக் கூறப்

பட்டதே? அப்படியானால் விருத்தி விஷயாகாரத்தை யடைந்தகாலத்தில் அவ்விஷயத்திற்கு வேறாக ஆபாசனுக்கு விஷயவடிவத் தன்மை எவ்வாறு சித்திக்கிறதெனில், மண் வடிவ கடத்தினுகாரத்தை யடைந்த புத்திவிருத்தியிலுள்ள ஆபாசனுக்கு மனோமய கடவடிவத்தன்மை சித்திக்கின்ற தென்றறிக. அப்படியானால் மண்மயகடம், மனோமயகடம் எனக் கடமிரண்டாகின்றதே? அங்கு மண்மயகடம் பிரமாண மாகிய இந்திரியாதிகளால் விளங்குகின்றது. அதுபோல மற்றைய மனோமய கடம் எதனால் விளங்குகின்றதெனில், அக்கடம் சாக்ஷியினால் விளங்குகின்றதென்றறிக.

அப்படியானால் கடாகாரத்தை யடைந்த விருத்தியி லுள்ள ஆபாசனுக்கு மண்வடிவ கடத்தினும் வேறுந்தன்மை சித்திக்கின்றது. அதுபோலப் பிரஹ்மாகாரத்தை யடைந்த புத்திவிருத்தியிலுள்ள ஆபாசனுக்குப் பிரஹ்மத்தினும் வேறுந்தன்மை யுண்டு எனில், அச்சங்கை பொருந்தாது. ஏனெனில், கடஞானமானது பிரமாதா பிரமாணம் பிரமேயம் என்னும் திரிபுடிகளாலுண்டாகின்றது. அதனால் அங்கு ஆபாசனுக்குக் கடத்தினும் வேறுந்தன்மை யுண்டாகின் றது. பிரஹ்மானுபூதியானது பிரமாதா பிரமாணங்களின் அபேக்ஷையின்றியுண்டாகின்றது. அதனால் பிரஹ்மாகார விருத்தியிலுள்ள ஆபாசனுக்குப் பிரஹ்மத்தினும் வேறுந் தன்மை சித்திக்கிறதில்லை யென்க.

பிரஹ்மானுபூதியில் விருத்தி வியாப்தி (விருத்திக்கு விஷயமாந்தன்மை) சுருதியாற் கேட்கப்படுகின்றது. அவ் விடத்து ஆபாசனிருப்புங் காணப்படுகின்றது. அவற்றின் இருப்பால் துவைதத்தின் அடைவுண்டாகவே செய்யும்

எனில், அப்படியாகாது. ஏதனாலெனில், விருத்திக்கு விஷய மாந்தன்மை கூறியது பிரஹ்மத்தின் ஆவரணபங்கப் பிரயோசனத்தின் பொருட்டன்றி விளக்கத்தின் பொருட்டல்ல. அக்காரணத்தாற் பிரஹ்மானுபூதியிற் பிரமாணாபேக்ஷையில்லை. அன்றியும் அப்பிரஹ்மாகாரவிருத்தியில் ஆபாசனிருக்கினும் விஷயாகாரவிருத்தியிற்போலப் பல வடிவமாய் விளக்கத்தைச் செய்தலுமில்லை. பிரஹ்மத்திற்கு வேறாகத் தோற்றுகிறதுமில்லை. ஆதலாற் பிரமாதாவின் அபேக்ஷையுமில்லை. ஆகவே, ஆவரணம் பங்கமாகியபோது பிரஹ்ம சேதனம் சுயம்பிரகாசமாதலாற் றானே பிரகாசிக்கின்றது. அதனால், அத்துவைதமே சித்தித்தலாலென்க.

ஆனால் இங்குப் பிரஹ்மாகார விருத்தியில் ஆபாசனிருக்கினும் துவைதம் சித்திக்கிறதில்லையென்றும், விஷயாகார விருத்தியிலுள்ள ஆபாசனுக்கு அவ்விஷயத்தின் வேறாக மனோமய விஷயத்தன்மை உண்டென்றும் கூறப்பட்டனவே? அவை தேவரீராற் கற்பிக்கப்பட்டனவா? அல்லது பிரமாணசித்தமா? வெனின், அவை யெம்மாற் கற்பிக்கப் பட்டனவல்ல. பஞ்சதசியின் துவைதவிவேகத்து முப்பத்தொராவது சுலோகத்தில் "இப்படியே யிருந்தால் மண்வடிவம் மனோமயவடிவம் எனக் கடம் என்னும் விஷயம் இரண்டாகின்றது. மண்வடிவம் பிரமாணத்தாலறியத்தக்கதாகின்றது. மனோமயம் சாக்ஷியினாலறியத்தக்கதாம்" என்றும் இம்மனோமயத் தன்மை கூறியதற்கு ஸ்ரீபாஷ்யகாராள் ஸ்ரீசுரேசுவராசாரியரென்னும் இருவர்களுடைய வாக்கியங்களைப் பிரமாணமாக்கியும் திருப்திதீபத்துத் தொண்ணூற்றுநாலாவது சுலோகத்தில் "இச்சிதாபாசன் விருத்தியிலிருக்கினும் பிரஹ்மத்திலொருவனைப்போலாகின்றான்.

பிரஹ்மத்திற் கடம் முதலியவற்றைப்போல அந்நியமான அதிசயவடிவ பலத்தைச் செய்கிறதில்லை'' என்றும், வித்தியாரணியர் முதலிய பூர்வாசாரியர்களாற் கூறப்பட்டிருத்தலாற் பிரமாணசித்தமாமென்க.

இந்த விதமாகவே சுழுத்தியிலும் ஆநந்தமயனுக்குப் பிரஹ்மாநந்த வடிவத்தன்மை சித்திக்கின்றது. எப்படியெனில், சூக்குமமாகிய அவித்தியாவிருத்தியிலிருத்தலினாலும், துவைதத்தன்மைக் கேதுவாகிய அபிமானித்தன்மை, சம்சாரித்தன்மைகளின் நீக்கத்தாலும், சுகாநுபூதியுடைமையாலும், பிரஹ்மத்திற்கு வேறாகத் தோற்றாமல் அதனோடைக்கியமாயிருத்தலாலும் என்றறிக.

சுருதிவாக்கியம் "சுழுத்தியிற் பிரஹ்மமே யிருக்கின்றது. ஜீவனில்லையெனக் கூறியதன் கருத்து முன்னர் இப்பிரகாணத்தில் ஆநந்தமயனைக் கற்பிதனெனல் பொருந்தாதென்று செய்த சங்கைக்குப் பிரமாணமாகக் கூறப்பட்ட யோகாநந்தத்து ஐம்பத்தாறாவது சுலோகத்திலேயே கூறப்பட்டிருக்கின்றது. அங்குக் கண்டுகொள்க.

ஆகவே இதுவரையும் கூறப்பட்டது ஆபாசனாலனுபவிக்கக்கூடிய பிரதிவிம்பாநந்தமாம். எதனாலெனில், ஜீவவடிவ சோபாதிக நித்தியவஸ்துவின் உபாதியாகிய அந்தக்கரணவிருத்தி அல்லது அவித்தியாவிருத்தி வாயிலாக அனுபவிக்கப்படுதலாலென்க.

அப்படியானால், ஜீவவடிவ சோபாதிக நித்திய வஸ்துவிற்கு இப்பிரதிவிம்பாநந்தமன்றி விம்பாநந்த வடிவத்தன்மை யில்லையோ? வெனில், விம்பமில்லாத பிரதிவிம்பம்

எங்குமில்லையாதலால் அவ்விம்பாநந்த வடிவமாகக் கூடஸ்த ஞகிய சாக்ஷிவியவகரிக்கப்படுகின்றது. இந்தச் சாக்ஷியானது விம்பாநந்த சொரூபமாயிருத்தலால் உற்பத்திநாசங்களில்லாததாம். ஆதலால், அநாதியும் நித்தியமுமாம். அதனுல் எல்லாத் தேசங்களிலும், எல்லாக் காலங்களிலும் இருந்து விளங்குகின்றது. விம்பாநந்த வடிவ சாக்ஷி சைதன்னியம் இவ்விதமாகவிருத்தலால் சாக்கிர சொப்பனங்களிற் பிராந்தியினுலாகிய சம்சாரபந்தத்தால் அத்தியஸ்த விஞ்ஞானமய ஜீவவடிவ நித்தியவஸ்துவானது துக்கமடையுங் காலத்தும் அத்துக்கமானது கானற்சலத்தாலாகிய பனி எப்படிப் பிரசித்தசூரியனைப் பரிசிக்கிறதில்லையோ அதனுல் அச்சூரியன் குளிருடையனுகிறதில்லையோ அப்படி அதிஷ்டான வடிவ கூடஸ்தனுகிய விம்பாநந்த நித்திய வஸ்துவைப் பரிசிக்கிறதுமில்லை. அதனுல் அவ்விம்பாநந்த வடிவ நித்திய வஸ்துவானது துக்கசம்பந்தமுடையதாதலுமில்லை. இவ்வாறு ஆபாசவடிவ நித்திய வஸ்துவானது துக்கமடையுங் காலத்தும் அதிஷ்டானவடிவ நித்தியவஸ்துவிற்குத் துக்க சம்பந்தமில்லை யெனவே, அதற்கு முன்னும் பின்னுமாகிய மற்றைய காலங்களிற் றுக்கசம்பந்த மில்லையென்பது சொல்லவேண்டாவாயிற்று.

இவ்விதமாக ஜீவனிடத்துப் பரமாநந்த வடிவப் பிரஹ்மம் நித்தியப்பிராப்தமாகவே இருக்கின்றது. இங்கோரிரகசியமிருக்கின்றது. அது யாதெனில், ஜீவசொரூபத்தில் அதிஷ்டானவடிவமாயுள்ள கூடஸ்தசேதனம் சொப்பிரகாச சோரூபமாயிருத்தலாலும், அதனை அவ்வாறு பார்த்தலாலும் அபரோக்ஷஞானம் முறையே விஷய விஷயிபேதத்தாலிருவகையாகின்றதெனப் பஞ்சதசியின் திருப்திதீபத்து

நாற்பத்தொன்பதாவது சுலோகத்திற் கூறப்பட்டிருத்தலால் அவையொன்று சொரூபஞானுபரோக்ஷமும், மற்றையது விருத்திஞானுபரோக்ஷமுமாகின்றன. அவற்றுட் சொரூப ஞானுபரோக்ஷம் சொப்பிரகாச வடிவத்தால் நித்தியமாயிருத்தலால் ஜீவனிடத்து அஞ்ஞான காலத்திலும் சித்தித்திருக்கின்றது. எதனுலெனில், எல்லா ஜீவர்களுக்கும் தமது இருப்புத்தன்மை விளங்குதலாலென்க. அவ்வாறு விளங்கினுலும், அச்சொரூப ஞானுபரோக்ஷத்தாற் பந்த நிவிர்த்தியாவது மோக்ஷப்ராப்தியாவது உண்டாதலில்லை. எதனுலெனில், அது அஞ்ஞானத்திற்கு விரோதியாகாமல் ஆசிரயமாயிருத்தலாலென வறிக. அஃதெவ்வாறு காணப்படுகின்றதெனில், யான் அஞ்ஞானி, யான் மனிதன், யான் சுந்தரமான சரீரமுடையவன் என்பன முதலிய வாக்கியங்கள் ஜீவரிடத்துக் காணப்படுதலாலும், அவ்வாக்கியங்களில் அவ்வஞ்ஞானத்திற்கும், அதன் காரியமாகிய மனிதத்தன்மை முதலியவற்றிற்கும் ஜீவவாசகமாகிய யான் என்னும் சொல்ஆசிரயமாகுதலாலென்க.

அப்படியானுல் (ஜீவனது சொரூபஞானம் அஞ்ஞானத்திற்கு விரோதியாகாமல் ஆசிரயமாயிருந்தால்) அந்த அஞ்ஞானத்திற்கு விரோதி வேறேயாதுளது எனில், அவ்வஞ்ஞானத்திற்கு விரோதி அபரோக்ஷ வடிவ விருத்தி ஞானமாம். ஆதலால், அவ்விருத்தி ஞானவடிவ அபரோக்ஷத்தினுலே பந்த நிவிர்த்திமோக்ஷப் பிராப்திகளுண்டாகின்றன. இதனை,"சொரூப ஞானமும் விருத்திஞா னமுமெனச் சோதி ஞானமிரண்டாம், சொரூப ஞானமே விருத்தியின் ஞானமாத் தோன்றும்வே றில்லைமைந்தா,சொரூப ஞானமஞ் ஞான

சத் துருவன்று சுழுத்தியிற் கண்டாயே, சொரூப ஞானத்தின் மருவுமஞ் ஞானத்தைச் சுடும்விருத் தியின்ஞானம்'' என ஸ்ரீ தாண்டவராய சுவாமிகள் கூறியிருத்தலையும் கண்டு கொள்க.

இவ்வாறிருக்கிற இரகசியத்தை யறியாத சில தற்கால சாஸ்திரிகள் அவ்விரண்டன் பேதமறியாது அபரோக்ஷ ஞானமொன்றே யெனக்கருதிச் சாஸ்திரத்தினாலறிந்ததும் சொரூப வடிவ அபரோக்ஷமுமாகிய ஞானத்தினாலேயே விருத்திஞானுபரோக்ஷ சித்தியும், (விருத்தி ஞானுபரோக்ஷத்தா லடையத்தக்க பந்த நிவிர்த்தி மோக்ஷப் பிராப்திகளும்) உண்டாவதுபோல மயங்கியறிகின்றனர். அஃதிருக்குக. இங்குக்கூறிய சொரூப ஞானத்தின் அபரோக்ஷம் விஷயாபரோக்ஷமென்று கூறப்படும். ஜீவனது அந்த அபரோக்ஷ வடிவ சொரூப ஞானம் எப்படியிருக்கிறதெனில், சர்வ துக்கநிவிர்த்தி வடிவமும் பரமாநந்தப்பிராப்தி வடிவமுமாயிருக்கின்றது. அன்றியும் அது நித்தியமாயிருத்தலால் அதனிடத்துள்ள நிவிர்த்தி பிராப்திகளும் நித்தியமாயிருக்கின்றன. அந்த நித்திய நிவிர்த்தியை யுடையது நித்திய நிவிர்த்தமும், நித்தியப் பிராப்தியையுடையது நித்தியப் பிராப்தமுமாம் என்று கூறப்படுதலால், ஜீவனிடத்து அஞ்ஞான காலத்தும் அந்தச் சர்வ துக்கங்களும் நித்திய நிவிர்த்தமாயும், பரமாநந்தவடிவம் நித்தியப் பிராப்தமாயும் இருக்கின்றன. அவற்றுட் சர்வ துக்கங்களின் நித்திய நிவிர்த்தத்தன்மை அசத்திலக்கணமும், ஜடவிலக்கணமும், துக்க விலக்கணமும் நிரூபித்தல் வாயிலாக இரண்டு முதல் நான்குவரையாகிய மூன்று பிரகரணங்களாலும் பரமா

நந்த வடிவப் பிரஹ்மத்தின் நித்தியப் பிராப்தத்தன்மை சத்திலக்கணமும், சித்திலக்கணமும், ஆநந்த விலக்கணமும் நிரூபித்தல் வாயிலாக ஐந்து முதல் இவ்வேழுவரையாகிய மூன்று பிரகரணங்களாலும் சங்கை சமாதான பூர்வகமாக நிரூபிக்கப்பட்டன. மோக்ஷசாதனமாகக் கூறப்படுகின்ற விருத்திவடிவ ஞானுபரோக்ஷம் இனிமேற் கூறப்படுவன வாகிய துவம்பதார்த்த தற்பதார்த்த விவேகப் பிரகரணங் களால் நிரூபிக்கப்படும். இவ்வாறு அபரோக்ஷ வடிவ சொரூபஞான விருத்தி ஞானங்களின் பேதம் காட்டப் பட்டன.

---

## அ-வது மஹாவாக்கியப் பிரகரணம்.

இப்பிரகரணத்தில் முன்னர்ப் பெயர் மாத்திரமாகக் கூறிய மஹாவாக்கியத்தின் அர்த்தம் விரித்துக்கூறப்படு கின்றது. கு-ம். ஜீவனுனவன் ஆநந்த விலக்கணப் பிரகர ணத்தின் முடிவிற்கூறியவிதமாக யாதொரு துக்க சம்பந்தமு மின்றி எப்பொழுதும் சச்சிதானந்த சொரூபியாகவே யிருக் கவும் சத்திலக்கணப் பிரகரணத்திற் கூறியவிதமாக அஞ் ஞான சம்பந்தத்தாற் றன்னைச் சரீரியாகவும், அக்காரணத் தாற் பிறந்திறக்கின்ற அநித்தியனுகவும், சுயமாக அறிவற்ற வனுகவும், துக்கியாகவுமதித்துத் தன்னிடத்துப் பிராந்தியா லுண்டாயிருக்கின்ற துக்க நிவிர்த்தியின் பொருட்டும், தன் னிடத்தில்லாத சுகத்தை யடைதற்பொருட்டும் சுபாசுப கருமங்களைச்செய்து அக்கரும வாயிலாக உற்பத்தியாகின்ற புண்ணிய பாவ வடிவ அதிருஷ்டங்களின் பயனுகிய சுக துக்கங்களைச் சுவர்க்க மத்திய பாதலங்களையடைந்து அனுப

வித்துப் பின்னர் நிஷ்காம கன்மவுபாசனைகளைச்செய்து சித்த சுத்தியைப் பெறுகின்றான். அதனால், "அச்சுத்த சித்தத்தில் இவ்வாறு பிறந்தும்இறந்தும் வருந்துகின்ற யானார்?தோற்று கின்ற இப்பிரபஞ்சம் எத்தன்மையது? எனக்குச் சுகதுக் கங்களைக் கருமானுசாரமாகக் கொடுக்கின்ற கர்த்தா (ஈசுரன்) எத்தன்மையன்?" என்னும் வடிவினதாகிய விசாரமுதிக்கின் றது. இவ்வாறு விசாரமுதிக்கினும் அவற்றின் சொரூபங்கள் தனக்குள்ளவாறு விளங்காமையால் அவற்றை உபதேசிக்க வல்லவராகிய ஞானாசாரியரைத் தேடியடைகின்றான். அவ் வாறே நீயும் இங்குவந்தடைந்தாய். ஆதலால், உனக்குச் சாமவேதத்திலுள்ள மஹாவாக்கிய அர்த்தத்தை முன்னரே உபதேசித்திருக்கின்றோம்.

முன்னரே உபதேசித்திருப்பினும் அருத்தம்தெரியாத அடியேனுக்கு அதனை விரித்துரைக்க வேண்டுமெனில், கூறுகின்றோம் கேள். அவ்வாக்கியமானது தது, துவம், அசி என்னும் மூன்று பதங்களையுடையது. அவற்றுள் முதற்பதம் ஈசுரனை அறிவிக்கின்றது. இரண்டாவது பதம் ஜீவனை யறிவிக்கின்றது. மூன்றாவது பதம் அவ்விருவரது ஐக்கியத்தை அறிவிக்கின்றது. அவற்றுள் ஜீவசொரூபத்தை யறிவிக்கின்ற இரண்டாவதாகிய துவம் என்னும் பதத்தின் அருத்தத்தை முதலிற் கேட்பாயாக. அதனைக் கேட்டுத் தெரிந்துகொள்வாயாகில் அப்பொருளானது முன்னர் யான் துக்கியாயிருக்கின்றேன் என்று அஞ்ஞானத்தாற் கூறிய உனது உண்மை வடிவமாயிருக்கின்றது. ஆதலால், அந்தத் துவம் பதத்தின் அருத்தத்தைக் கூறுகின்றோம். ஏகாக்கிர சித்தத்துடன் கேளென்று அவனை எதிர்முகமாக்கிக்கொண்டு கூறுகின்றார்.

ஜாக்கிரத்திற் சத்தம், பரிசம், உருவம், இரசம், கந்தம் என்னும் குணங்களும் முறையே அவற்றிற் காசிரய(ஆதார)மாகிய ஆகாயம், வாயு, அக்கினி, ஜலம், பிருதிவி என்னும் திரவியங்களுமாகிய விஷயங்களானவை யானை, குதிரை முதலியவற்றைப்போல வேறு வேறு தர்மமுடையனவாயிருத்தலாற் றம்முள் வேறு வேறாம். அவ்விஷயங்களினின்றும் புத்தியினால் வேறு பிரிக்கப்பட்ட அந்தச் சத்தமுதலியவற்றின் ஞானமானது ஞானம் ஞானம் என்று ஒரு வடிவமாகத் தோற்றுதலால்ஆகாயத்தைப்போல ஒன்றற்கொன்று பேதப்படுகிறதில்லை. இனி இந்த ஜாக்கிரத்திற்போலவே சொப்பனத்திலுமென்க. அஃதெவ்வாறெனில், ஜாக்கிரத்தில் விஷயங்கள் வேறு வேறு தர்மமுடையனவாயிருத்தலாலொன்றற்கொன்று பேதமும், ஞானமும் ஒரு வடிவமாயிருத்தலால் ஏகமுமாகின்றவாறுபோலச் சொப்பனாவஸ்தையிலும் சத்த முதலிய விஷயங்களே யொன்றற்கொன்று பின்னமாகின்றன. அவற்றின் ஞானம் பின்னமன்று. ஏகமாம். அவ்வாறு விஷயங்களும் அவற்றின் ஞானமும் முறையே பேதமாகவும், ஏகமாகவும் இருத்தலாற் சொப்பனத்திற்கும் ஜாக்கிரத்திற்கும் பேதமில்லையே? அவ்வாறிருக்க, இது சொப்பனம், இது ஜாக்கிரம் என்னும் பேத விபவகாரம் எதனாலுண்டாகின்றதென்று கேட்கின், இச்சொப்பனத்தில் அறியப்படும் விஷயங்கள் தோற்றமாத்திரமாயிருத்தலாற் றிரமில்லாதன வாகின்றன. ஜாக்கிரத்திலுள்ள விஷயங்கள் மற்றைக் காலங்களிலும் பார்க்கப்படுவனவாயிருத்தலாற் றிரமுள்ளவையாகின்றன. ஆகையால், விஷயங்களின் அஸ்திரத்தன்மை திரத்தன்மைகளின் பேதத்தால் அவ்விரண்டவஸ்தைகளுக்கும் பேதமுண்டென்றறிக.

அவ்வாறு சொப்பன ஜாக்கிரங்களுக்குப் பேதமுண்டெனக்கூறின் அவ்வவ்வவஸ்தைகளிலுண்டாகும் ஞானத்திற்கும் பேதமுண்டாகுமே யெனக்கூறின், அவற்றின் ஞானம் அப்படியாகாது. ஒரு வடிவினதாம். அவ்வாறு ஏகரூபமாயிருத்தலால் வேறுபடுகிறதில்லை. அப்படியே சுழுத்தியவத்தையிலும் அந்த ஞானமானது தனது விஷயத்தினும் வேறும், ஞானத்தினும் வேறன்று. எதனாலெனில், ஞானவடிவமாயிருத்தலால் எவ்வாறு சொப்பன ஞானம் ஜாக்கிர ஞானத்தினும் வேறன்றோ அதுபோலெனவறிக. அப்படியானாற் சுழுத்தியில் விஷயம் யாதிருக்கின்றதெனில், சுழுத்தியில் அஞ்ஞானமே விஷயமாமென்றறிக. அப்படியானாற் சுழுத்தியில் அஞ்ஞானமிருக்கிறதென்பதற்குப் பிரமாணம் யாதெனில், எல்லோருடைய அனுபவமே பிரமாணமாமென்க. அவ்வாறு சுழுத்தியில் அஞ்ஞானம் அனுபவிக்கப்பட்டதென்பது எதனால் விளங்குகின்றதெனில், தூங்கியெழுந்தவன் சுகமாகத்தூங்கினேன், ஒன்றுமறியேனென்று கூறுதலால் அவ்வொன்றுமறியாமையாகிய அஞ்ஞானம் அனுபவிக்கப் படுதலாலென்க. இந்தவிதமாக ஜாக்கிரம், சொப்பனம், சுழுத்தியென்னும் மூன்றவஸ்தைகளிலும் ஞானமானது ஏகமாம். இவ்வாறு ஒரு தினத்திலுண்டாகின்ற மூன்றவஸ்தைகளிலும் ஞானமானது ஏகமாயிருத்தல் போல மற்றையதினங்களிலும், அப்படியே சித்திரை முதலிய மாதங்களிலும், பிரபவ முதலிய வருடங்களிலும், கிருத முதலிய யுகங்களிலும், பிரஹ்மம் வாகமுதலிய கற்பங்களிலும் ஏகமாம். எதனாலெனில், அதனைப்பேதிக்கும் பிரமாணமின்மையாலென்க. இவ்வாறு ஞானம் ஏகமாயிருத்தலால் உண்டாகிறதுமில்லை, நாசமாகிறதுமில்லை யென்றறிக.

அப்படி அந்த ஞானத்தை ஏகமெனக்கூறின் அதனின் வேறாகிய ஞானம் இல்லையென்பது சித்திக்கின்றது. அவ்வாறு அந்நியஞானத்தின் இன்மையுண்டாகவே அந்த ஏகமாகிய ஞானத்தைக் கிரகிக்கும் சாக்ஷியினின்மையுண்டாகும். சாக்ஷியில்லாமற்போகவே உலகத்தில் அந்தத்துவத்தி (தோற்றமின்மையி)ன் அடைவுண்டாமேயெனில், அவ்வாறாகாது. எதனாலெனில், அந்த ஏகமாகிய ஞானம் சுயம்பிரகாசமாம். அந்த ஏகரூபமாகிய ஞானமே ஆத்துமாவாம். எதனாலெனில், நித்தியமாகவும், சொப்பிரகாசமாகவும் இருத்தலாலென்க. ஆத்துமாவிற்கு இவ்வாறு நித்தியமாகிய ஞானவடிவத் தன்மையைச் சாதித்தலாற் சத்தியத்தன்மையும் சாதிக்கப்பட்டதாயிற்று. எதனாலெனில், நித்தியத்தன்மைக்கு வேறாகச் சத்தியத் தன்மையில்லாமையாலும் நித்தியத்தன்மையாகிய சத்தியத்தன்மை எதற்கிருக்கின்றதோ அது நித்தியமும் சத்தியமுமாமென்று வாசஸ்பதிமிசிராசாரியர் கூறியிருத்தலாலுமெனவறிக. நித்தியமாகவும் சொப்பிரகாசமாகவும் உள்ள அந்த ஆத்துமாவே பராநந்தமாம். எதனாலெனில், சோபாதிக (தேகேந்திரியாதியுபாதியுடைய) ஆத்துமாவில் ஏற்றத்தாழ்வாகிய பிரியமுண்டு. இது நிருபாதிகமாயிருத்தலால் அதாவது உபாதியின்றியதாயிருத்தலால் நிரதிசய(எல்லாவற்றினுமேலாகிய)பிரியத்திற்கு விஷயமாகுதலாலென்க. அப்படியானால் ஆத்துமாவாகிய தன்னிடத்துச் சை, யான் கெட்டேன் என்று துவேஷம் (வெறுப்புக்) காணப்படுதலால் பிரியத்திற்கு விஷயமாந்தன்மையே சித்திக்காதபோது எல்லாவற்றினு மேலாகிய பிரியத்திற்கு விஷயமாந்தன்மை யெங்கிருந்துண்டாகும். உண்டாகவே மாட்டாதெனில்,

அந்த வெறுப்புச் சோபாதிக ஆத்துமாவினிடத்துத் துக்கசம்பந்தமாகிய நிமித்தத்தால் உண்டாயினதாயிருத்தலால் வேறுவிதமாக (துக்கத்திற்கேதுவாகிய தேகேந்திரியாதியுபாதிசம்பந்தத்தாற்) சித்தித்திருத்தலாலும் ஆத்துமாவிடத்திற்பிரியம் அனுபவசித்தமாயிருத்தலாலும் பிரியத்திற்கு விஷயமாந்தன்மை சித்தியாதென்பதில்லை. சித்திக்கவே செய்கின்றதென்றறிக. அப்படியானால் ஆத்துமாவினிடத்திற் பிரியம் எவ்வாறனுபவசித்தமாகின்றதெனில், நான் இருக்கலாகாதென்று யாருக்கும் தன்னிடத்து வெறுப்புண்டாகிறதில்லை. எப்பொழுதும் யானிருக்கவேண்டும் என்னும் பிரியம் ஆத்துமாவாகிய தன்னிடத்துண்டாதல் மேற்கூறியவாறு அனுபவசித்தமாமென்றறிக. அப்படியானால் ஆத்துமாவினிடத்துப் பிரியமாத்திரமிருக்குக. எலலாவற்றினுமேலாகிய பிரியத்திற்கு விஷயமாந்தன்மைக்கு ஏதுவில்லாமையால் எல்லாவற்றினும் மேலாகிய என்னும் விசேஷணம் கூடாதெனில், அவ்விசேஷணம் கூடாததாகாது. எப்படியெனில், தனக்கு (ஆத்துமாவிற்கு) வேறாகிய புத்திராதிகளிடத்துள்ள பிரியம் அப்புத்திராதிகள் ஆத்துமாவிற்றுபகாரமாயிருக்கின்ற நிமித்தத்தாலாகியதா யிருத்தலால் ஆத்துமாவின்பொருட்டாம். அப்புத்திராதிகளிடத்து இயல்பாக உண்டாகியதன்று. இந்தப்படி ஆத்துமாவிடத்துள்ள பிரியம் அந்நியமாகிய அப்புத்திராதிகளின் பொருட்டன்று. அதாவது ஆத்துமா அவ்வந்நியபுத்திராதிகளுக்கு உபகாரமாயிருக்கும் நிமித்தத்தாலன்று. ஆனால் ஆத்துமாவின் பொருட்டேயாம். ஆகையால் ஆத்துமாவிடத்துள்ள பிரியம் எல்லாவற்றினும் அதிகமாகிய நிரதிசயமாம். எதனாலெனில், நிருபாதிகமாதலாலென்க. அந்த மேலாகிய பிரியத்திற்கு

விஷயமாந்தன்மையாகிய ஏதுவால் ஆத்துமாவிற்குப் பரமாநந்தத் தன்மையுண்டு.

இந்த விதமாக ஆத்துமா சத்துச்சித்து பரமாநந்தசொரூபம் என்பது நிரூபிக்கப்பட்டது. இதனாலே தத்துவமசி மஹாவாக்கியத்துள்ள துவம்பத அர்த்தமாகிய ஆத்துமா சச்சிதானந்த வடிவமெனச்சித்தித்தது. இது முன் உபோற்காதப்பிரகரணத்திற் றன்னைத் துக்கியென்றுகூறிய உனது நிஜசொரூபமாம். இச்சொரூபத்தினிடத்துத் துக்கசம்பந்தமின்மையையறிவாயாக. ஆகவே யான் துக்கியாயிருக்கின்றேன் என்று கூறிய துவம்பதார்த்தனாகிய நீ துக்கியன்று. சச்சிதானந்தசொரூபி என்பது முன்செய்த உபதேசத்தின் சாமானிய அர்த்தமென்றறிக.

இவ்வாறு சீடனது உண்மை வடிவத்தைச் சுருங்கியநுசாரமாக உபதேசித்தும் தனது தேகத்தினிடத்துள்ள அபரோக்ஷ சத்தியபுத்தியால் மீளவும் சீடன் வினவுகின்றான். சுவாமின்! தேவரீருபதேசித்தபிரகாரம் யான் சச்சிதாநந்த சொரூபியாயிருக்கின் ஜனனமரணாதி சமுசாரதுக்கம் எனக்குண்டாகாது. அநுபவத்தில் அப்படியில்லை. பிறந்தும் இறந்தும் வருந்துகின்ற துக்கியாயிருக்கின்றேன். இத்தன்மையுடையவனாகிய யான் எவ்வாறு சச்சிதாநந்தசொரூபியாவேன்? அவ்வாறு எனது சொரூபம் சச்சிதாநந்தமாயிருக்குமாயின் அதனை அடியேனுக்கு விளங்குமாறுபதேசித்தருள்வீராக.

மைந்தா! உன்னிடத்து ஜனனமரணாதி துக்கம் ஓர் காலத்துமில்லை. இல்லையாயினும் அது உனக்கு அவித்தியாமோகத்தால் உள்ளதுபோலத் தோற்றுகின்றது. அவ்வாறு

தோற்றுதல் உண்மையல்ல. அதன் உண்மையை விளங்கக் கூறுகின்றோம் கேள்.

ஞானாநந்தவடிவ நித்தியவஸ்துவாகிய பிரஹ்ம சேதனத்தினிடத்து இப்பியின்கண் கற்பித வெள்ளியிருத்தல்போலக் கற்பிததாதான்மிய சம்பந்தத்தால் அச்சேதனத்தின் பிரதிவிம்பத்தோடுகூடிய சாத்துவிக விராஜஸ தாமதம் என்னும் முக்குண வடிவப்பிரகிருதியிருக்கின்றது. அதனது சத்துவ குணத்தை மாயையென்று கூறுவர். இராஜஸகுணத்தை அவித்தையென்று கூறுவர். அந்தமாயையிற் பிரதிவிம்பித்த சேதனமானது அம்மாயையை வசஞ்செய்துகொண்டு அம் மாயையுடனும் அதிஷ்டானவடிவ பிரஹ்மசேதனத்துடனுங் கூடிச் சர்வஞ்ஞத்தன்மை முதலிய குணங்களையுடைய ஈசுவரன் என்று கூறப்படுகின்றது. அவ்வீசுரனுக்கு அந்த மாயை காரணசரீரமாகின்றது. அம்மாயையின் வேறாகிய அவித்தையிற் பிரதிவிம்பித்த சேதனமானது அந்த அவித்தையிலுள்ள அசுத்தத்தன்மையின் ஏற்றத்தாழ்வுகளால் அவ்வவித்தையோடும் அதிஷ்டானவடிவ கூடஸ்த சேதனத்தோடுங்கூடி நாநாஜீவர்களாகின்றது. அந்த அவித்தை ஜீவர்களுக்குக் காரணசரீரமாகின்றது. அக்காரணசரீர அபிமானியாகிய ஜீவருக்குப் பிராஞ்ஞரென்று பெயர்.

இனிச் சூக்குமபூத உற்பத்தி கூறப்படுகின்றது. எப்படியெனில், மேற்கூறிய ஜீவர்களுடைய போகத்தின் பொருட்டு மிஞ்சியிருக்கின்ற தமப்பிரதானப் பிரகிருதியினின்று ஈசுவரனது இச்சையால் ஆகாயம், வாயு, அக்கினி, ஜலம், பிருதிவி என்னும் சூக்கும பூதங்கள் உண்டாயின. அவ்வொவ்வொரு பூதங்களின் சத்துவாமிசங்களில்

அரையரைப்பாகங்களால் சுரோத்திரம், தொக்கு, நேத்திரம், சிங்குவை, கிராணம் என்னும் பெயருடைய ஞானேந்திரியங்கள் ஐந்தும் முறையே உண்டாயின. மேற்கூறிய பூதங்களினுடைய சத்துவாமிசங்களின் மற்றைப் பாதிகள் எல்லாவற்றாலும் அந்தக்கரணமுண்டாயிற்று. அவ்வந்தக்கரணமானது விருத்திபேதத்தாற் சமுசயவடிவமனம், நிச்சயவடிவ புத்தி என இரண்டுவிதமாகின்றது.

இனிக் கன்மேந்திரியங்களின் உற்பத்தி கூறப்படுகின்றது. மேற்கூறிய அவ்வைந்து பூதங்களினுடைய இராஜோகுண அமிசங்களின் அரையரைப் பாகங்களால் முறையே வாக்கு, பாணி, பாதம், பாயுரு, உபஸ்தம் என்னும் ஐந்து கன்மேந்திரியங்கள் உண்டாகின்றன. அப்பூதங்களினுடைய இராஜோகுணமிசங்களின் மற்றைய அரையரைப் பாகங்கள் எல்லாவற்றாலும் பிராணன் உண்டாகின்றது. அந்தப் பிராணன் கிரியாபேதத்தால் ஐந்துவிதமாம். அவை நாசியிலிருக்கின்றதும் மேற்செல்லுதலாகிய பிராணனக்கிரியையுடையதுமாகிய பிராணன் என்பதும், குதத்திலிருக்கின்றதும் கீழ்ச்செல்லுதல் அதாவது மல மூத்திரங்களைக் கிழிறக்குதலாகிய அபானனக்கிரியையுடையதுமாகிய அபானன் என்பதும், நாபியிலிருக்கின்றதும் உண்ட அன்னரசங்களை நாடியின் வழியாகச் சரீர முழுவதிலும் நிரப்புதலாகிய சமானனக்கிரியை யுடையதுமாகிய சமானன் என்பதும், கண்டத்திலிருக்கின்றதும் கூடவே உண்ணப்பட்டனவும் பருகப்பட்டனவுமாகிய அன்ன ஜலங்களை வேறு பிரித்தலும் மேற்செல்லுதலுமாகிய உதானனக்கிரியை யுடையதுமாகிய உதானன் என்பதும், சரீர முழுவதிலும் இருக்கின்றதும்

மூட்டுத்திருப்புதலென்னும் வியானனக்கிரியையுடையதுமாகிய வியானன் என்பதுமாம். மேற்கூறிய ஞானேந்திரியமைந்தும், கன்மேந்திரியமைந்தும், பிராணனைந்தும், மனம் புத்தி என்னுமிரண்டும் ஆகிய பதினேழு தத்துவங்களாற் சூக்குமசரீரம் உண்டாகின்றது. இது இலிங்க சரீரமென்றுங் கூறப்படும்.

இனித் தைஜஸ சூத்திரான்மாக்களின் சொரூபம் வருணிக்கப் படுகின்றன. எப்படியெனில், முன் காரண சரீரமாகிய அவித்தை உபாதி உடைமையாற் பிராஞ்ஞர் என்னும் பெயரை அடைந்திருந்த ஜீவர்கள் இப்பதினேழு தத்துவவடிவ ஒவ்வோர் இலிங்க சரீரத்தை அபிமானித்தலாற் தைஜஸரென்னும் பெயரை அடைகின்றனர். இத்தைஜஸர்களாகிய ஜீவர்களோடு கூடிய எல்லா இலிங்க சரீரங்களிலும் அபேத அபிமானமுடைமையால் மாயோபாதியுடைய ஈசுவரன் சூத்திராத்துமாவாகின்றான். அவ்வெல்லா இலிங்க சரீரங்களும் அச் சூத்திரான்மாவிற்கு இரணிய கருப்பமென்னும் பெயருடைய இலிங்கசரீரமாகின்றது.

இனித் தூலசிருட்டி கூறப்படுகின்றது. பரமேஸ்வரன் இந்தச் சீவர்களுடைய போகத்தின்பொருட்டு அந்நபான முதலிய போக்கியங்களும் (போகவஸ்துக்களும்) நால்வகைச் சரீரமாகிய போக ஸ்தானங்களும் உண்டாகவேண்டி ஆகாய முதலிய சூக்கும பஞ்ச பூதங்களைப் பஞ்சீகரிக்கின்றான். அதாவது ஒவ்வொரு பூதத்தையும் ஐந்தைந்து விதமாக்குகின்றான்.

அஃதெவ்வாறெனில், ஆகாயமுதலிய ஒவ்வொரு பூதத்தையும் இரண்டிரண்டு பாகஞ்செய்து அவற்றுள் முதற்பாதி

ஐந்தையும் நான்கு நான்கு பாகம்பண்ணி அரைக்காலரைக் காலாகிய அந்நான்கு பாகங்களைத் தத்தமது இரண்டாவ தாகிய அரையரைப் பாகத்துடன் சேர்க்காமல் அந்நிய பூதங்களின் அரையரைப் பாகத்துடன் சேர்த்தலால் அவ் வாகாய முதலிய ஒவ்வொன்றும் ஐந்தைந்தாகின்றன. இவ் வாறு பஞ்சீகரணம் பண்ணப்பட்ட தூல பூதங்களால் பிரஹ்மாண்டம். அப் பிரஹ்மாண்டத்துள் இப்பிருதிவியின் மேலுங் கீழுமாயுள்ள பதினான்கு புவனங்களும்; அப்புவனங் களிலுள்ள அந்தவந்தப் பிராணிகளாற் பூசிக்கத்தக்க அந்த முதலியனவும், அந்தந்தப் புவனங்களுக்குத் தக்க சரீரங் களும் ஈஸ்வரனது ஆணையால் உண்டாகின்றன.

மேற்கூறிய பிரஹ்மாண்டமாகிய தூலதேக (சமஷ்டி தூலதேக)த்தோடு அவற்றிலுள்ள விசுவ (எல்லா) நரர்களை யும் நானென்றபிமானித்தலால் சூத்திரான்மாவாகிய ஈஸ் வரன் வைசுவாநரனாகின்றான். அப்பிரமாண்டத்தோடு கூடிய எல்லாத் தூல சரீரங்களுஞ்சேர்ந்து அவ் வைசுவாநரனுக்கு விராட்டென்னும் பெயருடைய தூலசரீரமாகின்றது.தைஜஸ ராகிய ஜீவர்கள் அவற்றுள் வியட்டி (ஒவ்வொரு) சரீரத்தில் நானென்னும் அபிமானம் வைத்தலால் விசுவர்கள் என்னும் பெயருடையவர் ஆகின்றனர். இந்த ஜீவர்கள் தேவர் மனி தர் முதலாகச் சொல்லப்படுகின்ற பலவித பேதமுடையவ ராகின்றனர். மைந்தா! இவ்வாறு சேதனத்திற்குப் பிரகிருதி வடிவ அஞ்ஞானத்தின் உபாதியுடைமையால் ஜீவத்தன்மை யும் ஈஸ்வரத்தன்மையும் உண்டாகின்றன. அவற்றுள் ஜீவத் தன்மை யடைந்திருக்கின்ற உனக்கு அவ்வவித்தையின் சம் பந்தத்தால் வெள்ளியில்லாத இப்பியினிடத்து இது

வெள்ளியென்னும் ஞானம் பிராந்தியினுல் உண்டாதல்போல ஜீவத்தன்மை மனிதத்தன்மை முதலியன இல்லாத சுத்த சேதன வடிவ ஆன்மாவாகிய உன்னிடத்து யான் தேகேந்திரியாதிகளோடுகூடியமனிதன்என்னும் பிராந்திஞானம்உண்டாயிருக்கின்றது. அப்பிராந்தி ஞானத்தால் தேகேந்திரியாதிகளின் உற்பத்தியை உனதுபிறப்பாகவும் அவற்றினது நாசத்தை உனது இறப்பாகவும் கருதி வருந்துகின்றாய். இத்துக்கம் பிராந்தியினுலாகியதன்றி உண்மையன்று. உண்மையில் மேற்கூறிய ஆன்மசொரூபமாகிய நீ அந்தத் தற்பதார்த்தப்பிரமமாயிருக்கின்றாய். இதனை உறுதியாக நிச்சயஞ் செய்க. எதனாலெனில், இவ்விரகசியார்த்தத்தை சாமவேதத்திலுள்ள மஹாவாக்கியம் அறிவிக்கின்றது. எப்படியெனில், முன்னம் உனக்குச் சாமானியமாக உபதேசித்த அம்மஹாவாக்கியார்த்தத்தை இப்பொழுது விரித்துரைக்கின்றோம்கேள். அவ்வாக்கியத்துள்ள துவம், தது, அசியென்னும் மூன்று பதங்களும் முறையே ஜீவனையும் ஈஸ்வரனையும் அவ்விருவரது ஐக்கியத்தையும் அறிவிக்கின்றன. எப்படியெனில், துவம் என்னும் பதத்திற்கு வியட்டி தேகேந்திரியாதிகளோடு கூடியதும் அபரோக்ஷத்தன்மை, பரிச்சின்னத்தன்மை, அற்பஞ்ஞத்தன்மை முதலியவற்றை யுடையதுமாயுள்ள பிரத்தியக்கு சேதனமாகிய நீ என்பதும்,

தது என்னும் பதத்திற்குச் சமட்டி தேகாதிகளோடு கூடியதும் பரோக்ஷத்தன்மை, வியாபகத்தன்மை, சர்வஞ்ஞத்தன்மை முதலியவற்றை உடையதுமாயுள்ள அந்த ஈஸ்வரன் என்பதும்,

அசி என்னும் பதத்திற்கு இருக்கிறாய் என்பதும் அருத்தங்களாம். ஆகவே அம்மூன்று பதங்களாலாகிய அவ்

வாக்கியத்தின் திரண்டபொருள் ஒவ்வொரு தேகாதிகளோடு கூடியதும் அபரோக்ஷத்தன்மை, பரிச்சின்னத்தன்மை, அற்பஞ்ஞத்தன்மை முதலியவற்றை யுடையதுமாயுள்ள பிரத்தியக்கு சேதனமாகிய நீ எல்லாத் தேகாதிகளோடு கூடியதும் பரோக்ஷத்தன்மை, வியாபகத்தன்மை, சர்வஞ்ஞத்தன்மை முதலியவற்றை யுடையதுமாயுள்ள அந்த ஈஸ்வரனாயிருக்கின்றாய் என்பதாம்.

இவ்வாக்கியத்தைக் கேட்ட சீடன் சங்கிக்கின்றான். சுவாமீ! தேவரீர்கூறிய அருத்தம் அடியேன் புத்திக்குப் பொருத்தமாகவில்லை, எதனாலெனில், ஜீவனாகிய எனது சொரூபத்திற்கும் ஈசுவரனது சொரூபத்திற்கும் பரஸ்பரம் விரோதமிருக்கின்றது. எப்படியெனில், நான் ஏகசரீரி. அவன் அநேகசரீரி. நான் அபரோக்ஷன். அவன் பரோக்ஷன். நான் பரிச்சின்னன். அவன் வியாபகன். நான் அற்பஞ்ஞன். அவன் சர்வஞ்ஞன். இவ்வாறு இவை முதலிய விரோதங்களிருத்தலால் நான் எவ்வாறு அவ்வீசுரனாவேன்? அன்றியும் நான் சுகபோகங்களை அவனிடத்து யாசிக்கின்றேன். அவன் அச்சுகபோகங்களை யெனக்குக்கொடுக்கின்றான். இத்தன்மைகளை யுடைய ஈவோனாகிய ஈசுவரனுக்கும் ஏற்போனாகிய ஜீவவடிவ எனக்கும் ஐக்கியம் கூறுதல் முற்றும் விரோதமாகத் தோற்றுகின்றதன்றி என் புத்திக்குப் பொருத்தமாகத் தோற்றவில்லையேயென்று கூறினான்.

[இனி அம்மஹா வாக்கியார்த்தம் திருஷ்டாந்த பூர்வகமாக நிரூபிக்கப்படுகின்றது.]

மைந்தா! ஜீவஈசுவரது ஐக்கிய விஷயமாய் உனக்குண்டாகிய விரோதபுத்தி நீங்கி உண்மையாகிய ஐக்கிய ஞான

முண்டாகும்வண்ணம் அம்மகாவாக்கியார்த்தத்தைத் திருஷ்டாந்தத்தோடு கூறுகின்றேம் கேள். எப்படியெனில், எங்கும் வியாபகமாயிருக்கின்ற ஓரே ஆகாயத்தை யாதோருபாதியு மில்லாதிருக்கும்பொழுது மஹாகாய மென்றும், அதனுள் மேகத்திற்கு இடங்கொடுத்திருக்கிற ஆகாயத்தை மேகாகாயமென்றும், கடத்திற்கு இடங்கொடுத்திருக்கிற ஆகாயத்தைக் கடாகாயமென்றும்,ஜலம்நிரம்பிய கடத்திற்கு இடங்கொடுத்திருக்கிற ஆகாயத்தைக் கடஜலாகாயமென்றும் பெயர் மாத்திரம் வேறுவேருகக் கற்பித்து நான்காகாயமாக நினைக்கின்றதன்மைபோல,

அகண்ட பரிபூரணமாயிருக்கின்ற ஓரே சேதனத்தை மாயா உபாதிபற்றிப் பிரஹ்ம சேதனமென்றும், மாயா விசேடணம்பற்றி ஈசுவரசேதனமென்றும், அவித்தையுபாதிபற்றிக் கூடஸ்த சேதனமென்றும், அவித்தியா விசேஷணமபற்றி ஜீவசேதனமென்றும் பெயர்மாத்திரம் வேறுவேருகக் கற்பித்து நான்குசேதனமாக அறிஞர் கூறுவர். அவையே விளக்கிக்காட்டப்படுகின்றன. எப்படியெனில்,

(க) பிரஹ்மாண்டத்தின் உள்ளும் புறமும் ஏகமாயும் வியாபகமாயுமுள்ள ஆகாயத்தை மஹாகாயமென்பர்.

(உ) மேகத்திற் கிடங்கொடுத்திருக்கிற ஆகாயத்தையும் அந்த மேக ஜலத்திற பிரதிவிம்பித்திருககின்ற பிரதிவிம்ப வாகாயத்தையும் சேர்த்து மேகாகாயமென்றுகூறுவர்.

(ந) ஜலத்தினுல் நிறைந்திருக்கிற கடத்திற்கு எவ்வளவாகாயம் இடங்கொடுத்திருக்கிறதோ அவ்வளவாகாயத்தைக் கடாகாயமென்று கூறுவர்.

(ச) கடஜலத்தில் மேகநக்ஷத்திரங்களோடு பிரதிவிம்பித்திருக்கிற பிரதிவிம்பவாகாயத்தையும் முற்கூறிய கடாகாயத்தையும் சேர்த்துக் கடஜலாகாயமென்பர். இவை திருஷ்டாந்தமாகக் கூறிய நால்வகை ஆகாயங்களாம். இத் திருஷ்டாந்தம்போலத் தார்ஷ்டாந்தத்தும்,

(க) மஹாகாயம்போலப் பிரஹ்மாண்டத்தின்உள்ளும் புறமும பரிபூரணமாயிருக்கின்ற சேதனம் பிரஹ்ம சேதனமென்று சொல்லப்படும். இந்தப் பிரஹ்மமானது தூரத்திலிருக்கின்றதென்றாவது, சமீபத்திலிருக்கின்றதென்றாவது சொல்லக்கூடாதது.எதனாலெனில், யாதாயினுமொரு வஸ்து தனக்குவேறாக இருக்குமானால் அதுகாலத்தினாலும்,தேசத்தி(இடத்தி)னாலும்,வஸ்துவினாலும் அளவுபட்டதாய்த் தூரத்திலாவது சமீபத்திலாவது இருக்கக்கூடும். பிரஹ்மம் அப்படியிருக்கிறதல்ல. வேறெப்படியிருக்கிறதெனில், எல்லாக்காலத்திலும், எல்லாத் தேசத்திலும், எல்லா வஸ்துக்களின் சொரூபமுமாயிருக்கின்றது. அதனாலே காலத்தினாலும், தேசத்தினாலும், வஸ்துவினாலும் அளவுபடாமலிருக்கின்றது. இது முற்கூறப்பட்ட மஹாவாக்கியத்திலுள்ள "தத்" தென்னும் பதத்தின் இலக்கியார்த்தமாம் என்றறிக.

(உ) மாயையும், அம்மாயைக்கு ஆதார(ஆசிரய)மாகிய சேதனமும், மாயையினிடத்துத் தோன்றுகின்ற பிரதிவிம்ப சேதனமும் ஆகிய மூன்றுஞ்சேர்ந்து ஈஸ்வரனென்று சொல்லப்படும். அந்த ஈஸ்வரன் மேகாகாயத்திற் கொப்பாகும். அவன் அம் மஹாவாக்கியத்திலுள்ள "தத்" தென்னும் பதத்தின் வாச்சியார்த்தமென்றறிக.

(௩) புத்தி அல்லது வியட்டி அஞ்ஞானம் எவ்வளவு சேதனத்தை இடமாகக் கொண்டிருக்கின்றதோ அவ்வளவு சேதனத்தைக் கூடஸ்தன் என்றுசொல்லுகின்றனர். கூடஸ்தன் என்று சொல்லுதலால் நிருவிகாரத்தன்மையும் நித்தியத்தன்மையும் சித்திக்கின்றன. இந்த நித்திய நிருவிகாரியாகிய கூடஸ்தன் அம்மஹாவாக்கியத்திலுள்ள "துவம்" என்னும் பதத்தின் இலக்கியார்த்தமென்றறிக.

(௪) பலகன்ம வாசனையோடுகூடிய புத்தியும் அல்லது வியட்டி அஞ்ஞானமும், அவற்றிற் காதாரமாகிய கூடஸ்த சேதனமும், அவ்வஞ்ஞானத்தில் தோன்றுகின்ற பிரதிவிம்ப சேதனமுமாகிய மூன்றுஞ்சேர்ந்து ஜீவனென்று சொல்லப்படும். அந்த ஜீவன் அம் மஹாவாக்கியத்திலுள்ள "துவம்" என்னும் பதத்தின் வாச்சியார்த்தமென்றறிக. இவை தார்ஷ்டாந்தமாகிய நால்வகைச் சேதனங்களாம்.

அவற்றுள் தற்பதவாச்சியார்த்தமாகிய ஈஸ்வரனுக்கும் துவம்பத வாச்சியார்த்தமாகிய ஜீவனுக்கும் நீ கூறியவாறு சரீரமுடைமை முதலிய பலவகைவிசேடணங்களால் விரோதமிருத்தலால் அவ்விருவருக்கும் ஐக்கியங் கூடாதாயினும் அத் தத்துவம் பதங்களின் இலக்கியார்த்தமாகிய பிரஹ்மத்திற்கும் கூடஸ்தனுக்கும் சொரூபத்தாற் பேதம் இல்லாமையால் ஐக்கியம் கூடுமென்றறிக.

அப்படியானல் அந்த இலக்கியார்த்தத்தின் சொரூபம் எதுவோ அதைக்கூறினுல் அந்த இலக்கியார்த்தத்தின் சொரூபத்தைக்கேட்டு அதனிடத்து விரோதமில்லாமையை அறிதலால் என் புத்தியிலுண்டாகிய பேத நிச்சயமானது நீங்கும். அதனுல் ஐக்கிய நிச்சய முண்டாகும். ஆதலால்

அவ் விலக்கியார்த்தத்தின் சொரூபத்தைக் கூறவேண்டு மெனில், கூறுகின்றோம் கேள். எங்கெங்கு வாச்சியார்த் தங்களுக்கு அர்த்தவிரோதம் தோற்றுகின்றதோ அங்கங்கு இலக்கணையாற் பொருள் கொள்ளுதல் வடநூற்றுணிபு. ஆகையால் அவ் விலக்கணையின் சொரூபம் தெரியவேண்டு மானல் முதலில் அவ் விலக்கணையை அறிதற் கேதுவாகிய சத்தியின் சொரூபத்தைத் தெரிந்துகொள்ளவேண்டும். ஆதலால் முதலிற் சக்தியின் சொரூபத்தைச் சுருக்கமாகக் கூறுகின்றோம் கேள். சத்த(பத)த்திற்கு அதன் அர்த்தத்தோடுள்ள சம்பந்தம் விருத்தியெனப்படும். அந்த விருத்தியானது சக்திவிருத்தி, இலக்கணுவிருத்தி என்னும் பேதத்தால் இரண்டுவிதமாம். அவற்றுள் சத்தத்திற்கு அதன் அர்த்தத்தோடுள்ள சாக்ஷாது (நேரேயுள்ள) சம்பந்தம் சக்தி விருத்தி என்று சொல்லப்படுகிறது. இச்சக்தி விருத்தியினலறியப்படும் பொருள் சத்த(பத)த்தின் வாச்சியார்த்த மென்றும், சக்கியார்த்தமென்றும், முக்கியார்த்த மென்றும் சொல்லப்படும்.

இனி இலக்கணு விருத்தியாவது யாதெனில், சத்தத்திற்கு அதன் அர்த்தத்தோடுள்ள பாம்பரா சம்பந்தம் இலக்கணு விருத்தியென்று சொல்லப்படும். அதாவது சத்தத்திற்கு அதன் சக்கியார்த்தத்தோடு நேரே சம்பந்தமுண்டு. அச் சக்கியார்த்தத்திற்கு அந்நியமாகிய எந்த வஸ்துவோடு நேரே சம்பந்தம் இருக்கின்றதோ அந்த வஸ்துவினிடத்தில் மேற்கூறிய சத்தத்திற்குப் பரம்பராசம்பந்தம் (சக்கியார்த்த வாயிலாகச் சம்பந்தம்) இருக்கின்றது. இந்தப் பரம்பரா சம்பந்தத்தினை இலக்கணு விருத்தியென்றும், இப்பரம்பரா

சம்பந்தமுடைய வஸ்துவை அதாவது இலக்கணு விருத்தியா லறியப்படும் வஸ்துவை இலக்கியார்த்தமென்றும் கூறுவர்.

இவ் விலக்கணையானது விட்டவிலக்கணை, விடாதவிலக்கணை, விட்டுவிடாத விலக்கணை என மூன்றுவகைப்படும். அவற்றுள் விட்டுவிடாத விலக்கணையே மஹாவாக்கியத்தில் உபயோகியானபடியால் மற்றைய இரண்டிலக்கணைகளையும் விரிவஞ்சி விடுத்து இவ்வோரிலக்கணையின் சொரூபமும் இதற்குரிய திருஷ்டாந்தமும் மாத்திரம் இங்குக் கூறப்படுகின்றது. அவ்விட்டுவிடாத விலக்கணையின் சொரூபமாவது வாச்சியார்த்தங்களிலுள்ள விரோதமாகிய ஒருபாகத்தை விட்டு விரோதமில்லாத மற்றைப்பாகத்தை விடாமற் கொள்ளுதலாம்.

அப்படியானல் அதனை யுணர்த்தும் திருஷ்டாந்தம் யாதெனில், கூறுகின்றேம் கேள். திருநெல்வேலி என்னும் நகரத்திலிருந்து யாத்திரையாகப் பிரயாணித்த தேவதத்தன் சோமதத்தன் என்னும் இருவரும் காசியை அடைந்திருக்குங் காலத்தில் அங்கு அந்நகரத்தரசன் இரதம், கஜம், துரகம், பதாதி என்னும் நால்வகைச் சேனைகளும் தன்னைச் சூழ்ந்துவர மதயானையின்மீது ஆடையாபரண வலங்கிருதனுகப் பவனிவந்தான். அவ்வரசனை அச்சமயம் பார்த்திருந்த தேவதத்தன், சோமதத்தன் என்னும் இருவரும் பின்னர்த் தமதுநகரமாகிய திருநெல்வேலிக்குவந்து சிலகாலஞ் சென்றபின்பு அந்நகரத்திலிருக்கின்ற தேவாலயத்தின்கண் சுவாமி தரிசனஞ்செய்யச் சென்றிருந்தபொழுது முன்னர்க்காசியில் பவனிவரப்பார்க்கப்பட்ட அவ்வரசன் வைராக்கிய முடைய

ணுய்ச் சந்நியாசம்பெற்று விபூதி உருத்திராக்க காஷாய தண்டு கமண்டலதாரியாய் அவர்களுக்கெதிரேநின்று சுவாமி தரிசனஞ்செய்யக் கண்டார்கள். அவர்களில் தேவதத்த னுனவன் சோமதத்தனை நோக்கி, முன்னர்க் காசியில் யானை யின்மீது பவனிவந்த அரசனே இந்தச் சந்நியாசி என்று கூறினுன்.

அதைக்கேட்ட சோமதத்தன் கூறுகின்றுன். நீ கூறி யது முழுவிரோதமாய் இருக்கின்றது. எதனுலெனில், சந்நி யாசியை அரசனென்று கூறுதலாலென்க. அது மாத்திர மன்று. அவன் ஊர் காசி. இவன் ஊர் திருநெல்வேலி. அவனது ஆடையாபரணங்கள் பீதாம்பர கடக மகுடாதிகள். இவனது ஆடையாபரணங்கள் காஷாய வஸ்திர விபூதி உருத்திராக்காதிகள். ஆதலால் அக்காசியையும் அப்பீதாம் பராதிகளையுமுடைய அரசனுகிய அவன் இத் திருநெல்வேலி யையும் இக்காஷாயாதிகளையுமுடைய சந்நியாசியாகிய இவ னுகமாட்டான் என்று கூறினுன். அதற்குத் தேவதத்தன் கூறுகின்றுன். எப்படியெனில், அவன், இவன் என்னும் பதங்களின் வாச்சியார்த்தங்களிற் பொருந்தியிருக்கின்ற விரோத பாகமாகிய அரசன் சந்நியாசி யென்னும் பெயர் களையும், காசி திருநெல்வேலியாகிய வாசஸ்தானங்களையும், பீதாம்பர காஷாய வஸ்திரமென்னும் உடைகளையும், கடக மகுட விபூதி உருத்திராக்கங்களென்னும் அணிகளையும் இரு வருடைய சரீரங்களிற் சம்பந்தப் படுத்தாமற் புத்தியினுலே வேறு படுத்திவிட்டு அவ்விரண்டு பதங்களின் அவிரோத பாகமாகிய கிருபையோடு கூடிய கண்கள், மதுரத்தோடு கூடிய வசனம், முழந்தாள்வரை நீண்டகைகள் ஆகிய இவற்

ரூடு கூடிய சரீர மாத்திரத்தை விடாமற் கவனித்துப் பார்த்தால் காசியில் யானைமேற்பார்க்கப்பட்ட சரீரமும் திருநெல்வேலியில் ஆலயத்தின்கட் பார்க்கப்பட்ட சரீரமும் ஏகமாக விளங்கும் என்று கூறினன். இது விட்டுவிடாத விலக்கணைக்கு உதாரணமாம்.

அப்படியானால் தது. துவம் என்னும் இரண்டு பதங்களுக்கும் முறையே பிரஹ்மமும், கூடஸ்தனும் எதனாலே இலக்கியார்த்தமும், ஈசுவரனும் ஜீவனும் வாச்சியார்த்தமுமாயினவெனில், வாச்சியார்த்தமாகிய ஈசுவர ஜீவர்களின் சொரூபமானது அவ்விருவருடைய சரீர முதலியவற்றாற் சுருதிப் பிரமாணத்தாலும், பிரத்தியக்ஷப் பிரமாணத்தாலும் அறியப்படுகின்றன. எப்படி யறியப்படுகின்றனவெனில், முன் இப்பிரகாணத்திலேயே சிருட்டிக்கிரமங் கூறியவிடத்து ஞாநாநந்த வடிவமாகிய பிரஹ்ம சேதனத்தினிடத்து முக்குணவடிவப் பிரகிருதி யிருக்கின்றதென்றாரம்பித்துத் தைஜஸாகிய ஜீவர்களொவ்வொரு சரீரத்தில் நானென்னும் அபிமானம் வைத்தலால் விசுவர்களென்னும் பெயருடையராகின்றனர் என்பது வரையாகக் கூறியிருக்கின்ற வாக்கியங்களாலென்க. அதனாலே பிரஹ்மாண்டத்தோடு அதனுள்ளடங்கிய எல்லாச்சீவர்களின் மூவகைச்சரீரங்களும், அவற்றிற்குக் காரணமாயுள்ள தூலசூக்கும வடிவ பஞ்ச பூதங்களும், மாயையும், அதிலுள்ள சிற்பிரதி விம்பமும், அவ்வெல்லாவற்றின் அதிஷ்டான சேதனமுஞ்சேர்ந்து ஈசுவர சொரூபமென்றும், பிரசித்தமாயுள்ள ஒவ்வொரு தூல சூக்கும காரண வடிவ சரீரங்களும், அவற்றிற் பிரதிவிம்பித்துள்ள சிற்பிரதி விம்பமும், இவற்றின் அதிஷ்டான சேதனமும் சேர்ந்து ஜீவசொரூபமென்றும் சுருதிஞானமுடையவருக்கு

அவ்விரண்டு சொரூபமும் விளங்குகின்றன. எதனாலெனில், பிரமாணத்தால் நேரே விளங்குவனவாகிய அச்சரீராதிகள் அவ்விருவருக்கும் சொரூபமாகக் கூறப்பட்டிருத்தலா லென்க.

இனி அவ்விலக்கியார்த்தத்தைக் கூறுகின்றோம் கேள். இலக்கியார்த்தமாக முன் கூறப்பட்ட பிரஹ்மமும் கூடஸ்த னும் சொப்பிரகாச சேதனமாயிருத்தலாற் சுருதிப் பிரமா ணத்திற்கு மாத்திரம் விஷயமாம். அஃதொழிந்த வேறெந் தப் பிரமாணங்களுக்கும் விஷயமாகிறதில்லை. அச்சுருதிப் பிரமாணத்ாலும் இலக்கணவிருத்தியால்விஷயமாவதன்றிச் சத்தி விருத்தியால் விஷயமாகிறதில்லை. அவ் விலக்கண விருத்தியால் விஷயமாமென்பதும், அச் சேதனத்தை யாசிர யித்து அதனையே மறைத்திருக்கின்ற அஞ்ஞானத்தின் ஆவரணத்தைப் போக்குதல் மாத்திரமாம் வேறன்றென்க.

ஆதலால் எப்பிரமாணங்களாலும் அறியக்கூடாத கூடஸ்த பிரஹ்மங்களை அவற்றிற்குபாதிகளாயுள்ள சரீராதி களைஅதாவதுசரீராதிகளோடு சம்பந்தமுடையஜீவேஸ்வரரை அதிகாரிகட்கு முதலிற்காட்டிப் பின்பு அவாது ஞானவாயி லாக அறியத்தக்க இலக்கண விருத்தியால் அறிவிக்கவேண் டும். இது இலக்கண விருத்தியாலன்றி சத்தி விருத்தியால் அறிவிக்கக் கூடாமைக்குக் காரணமாகிய அவரிடத்துள்ள அப்பிரமேய(பிரமாணங்களாலறியப்படா)த் தன்மையாம்.

இனி சத்தி விருத்தியினா லறியப்பட்ட ஜீவேஸ்வரர் களின் ஞானவாயிலாக விட்டுவிடாதவிலக்கணையால் கூடஸ்த பிரஹ்மங்களையும் அவற்றின் ஐக்கியத்தையும் கூறுகின்றோம் கேள். [ஜீவேஸ்வர சொரூபமாகிய சக்கியார்த்தத்தில் அதிட்

டானத்தன்மைச் சம்பந்தத்தால் அறியத்தக்க இலக்கியார்த்தமாகிய கூடஸ்த பிரஹ்மங்களை அறிவித்தல்] ஒன்றினுளொன்ருகக் கலந்திருக்கின்ற தூலாதிசரீரமும் அதனிடத்துத் தோன்றிச் சத்தாதி விஷயங்களைக்கிரகித்து நாசத்தையடைகின்ற சிற்பிரதி விம்பமும், இவற்றுக்கெல்லாம் அதிஷ்டானமும் ஆசிரயமுமாயுள்ள கூடஸ்த சேதனமும்சேர்ந்து ஜீவசொரூபமாயிற்று. ஜடசேதனக் கலப்பாயுள்ள இந்த ஜீவசொரூபத்தில் இனிக்கூறப்படும் பஞ்சகோச விவேகத்தால் மித்தையாகக் காணப்படுகின்ற தூலதேகமுதற் சிற்பிரதி விம்பம்வரையுள்ள வஸ்துக்களாகிய உபாதிவடிவ ஒரு பாகத்தை அவற்றின் குணங்குறிகளை அறிந்து கற்பிதமாயிருத்தல பற்றிப் பொருளாகக் கருதாது விடுதலால் அவ் வுபாதியின் சம்பந்தமின்றிய உபகிதமாயும் அசங்கமாயும் மிஞ்சியிருக்கின்ற கூடஸ்த சேதனம் அறியப்படுதலால் அது இலக்கியார்த்தமெனப்படுகின்றது.

இப்படியே தூல சூக்கும வடிவ பஞ்ச பூதங்களும், சமட்டி ஜீவர்களோடு அவர்களுடைய தூலாதி சரீரங்களும், மாயையும், அதிற் பிரதிபிம்பித்து சிருட்டியாதிகளைச் செய்கின்ற சிற்பிரதிவிம்பமும், அவற்றுக் கெல்லாம் அதிஷ்டானமும் ஆசிரயமுமாயுள்ள பிரஹ்ம சேதனமும்சேர்ந்து ஈஸ்வரசொரூபமாயிற்று. ஜடசேதனக் கலப்பாயுள்ள அவ்வீஸ்வரசொரூபத்தில் இனிக்கூறப்படும் பஞ்சபூதாதி ஜகத்து விவேகத்தால் மித்தையாகக் காணப்படுகின்ற அத்தூலதேகமுதற் சிற்பிரதிவிம்ப மீருயுள்ள வஸ்துக்களாகிய உபாதி வடிவ ஒரு பாகத்தை அவற்றின் குணங்குறிகளையறிந்து மித்தையாயிருத்தல்பற்றிப் பொருளாகக் கருதாது விடுதலால் அவ்

வுபாதியின் சம்பந்த மின்றிய உபகிதமாயும், அசங்கமாயும் வியாபகமாயும் மிஞ்சியிருக்கின்ற பிரஹ்ம சேதனம் அறியப் படுதல்பற்றி அந்தப் பிரஹ்மசேதனம் இலக்கியார்த்த மெனப்படுகின்றது.

இனி அக் கூடஸ்த பிரஹ்மங்களின் ஐக்கியம் எவ்வா றறியப்படுகின்றதெனில், இவ் விட்டுவிடாத இலக்கணையின் திருஷ்டாந்தத்திற் கூறப்பட்டிருக்கின்ற அரசனும் சந்நியா சியுமாகிய இருவரும் ஏகரென்பதை அவ் விருவாது இலக்கி யார்த்தவடிவ சரீரத்தினிடத்துள்ள கண்ணினது கருணையும், வாக்கினது இனிமையும், கையினது நீட்சியும் ஆகிய இலக் கணங்கள் எப்படி அச்சரீரத்துள்ள கண்ணின் கருணையே இச் சரீரத்துள்ள கண்ணின் கருணையெனவும், அச் சரீரத் துள்ள வாக்கின் இனிமையே இச் சரீரத்துள்ள வாக்கின் இனிமை யெனவும், அச் சரீரத்துள்ள கையின் நீட்சியே இச் சரீரத்துள்ள கையின் நீட்சி யெனவும் அறியுமாறு ஏக வடிவாயிருந்து அவ்விருவாது சரீரமும் ஏகமென்பதை அறி விக்கின்றனவோ அப்படியே தார்ஷ்டாந்தத்திற் கூறப்பட்ட கூடஸ்த பிரஹ்மம் இரண்டும் ஏகமென்பதை அவ்விருவகை இலக்கியார்த்தத்துள்ள சத்தும், சித்தும், ஆனந்தமுமாகிய இலக்கணங்கள் அப்பிரஹ்மத்துள்ள சத்துத் தன்மையே இக் கூடஸ்தனிடத்துள்ள சத்துத் தன்மை யெனவும், அப் பிரஹ்மத்துள்ள சித்துத் தன்மையே இக் கூடஸ்தனிடத் துள்ள சித்துத் தன்மை யெனவும், அப் பிரஹ்மத்துள்ள ஆனந்தத் தன்மையே இக் கூடஸ்தனிடத்துள்ள ஆனந்தத் தன்மை யெனவும் அறியுமாறு ஏகவடிவாயிருந்து அவ்விரு வகைச் சேதனமும் ஏக மென்பதை அறிவிக்கின்றன வென் றறிக.

இப்பொழுது சிஷ்யன் இதுவரையும் சிரவணம் செய்த வாக்கியார்த்தங்களாற் றனக்குண்டாகிய பிரயோஜனத்தையும் மேல் உபதேசிக்கவேண்டிய விஷயத்தையும் பற்றி ஆசிரியரிடம் தெரிவிக்கின்றான்.

சுவாமி! இதுவரையும் சுருதி யநுசாரமாகவும், திருஷ்டாந்த வடிவ யுக்தி யநுசாரமாகவும் உபதேசிக்கப்பட்ட "தத் துவம்" பதங்களின் வாச்சியார்த்த இலக்கியார்த்தங்களும் அவற்றின் ஐக்கியமும் சமுசயமின்றி விளங்குகின்றன. இனி இப்படியே எனது அநுபவத்திற்கும் விளங்குமாறு உபதேசிக்க வேண்டும். ஏனெனில், அவ்வநுபூதியின் ஞானமின்றிக் கிருதகிருத்தியத் தன்மை வடிவ நிரங்குச திருத்தி உண்டாகாதெனத் தோற்றுகின்ற படியாலென்க. எதனாலவ்வாறு தோற்றுகின்றதெனில், கூடஸ்த பிரஹ்மங்களின் ஐக்கிய ஞானம் சுருதி யுக்திகளாற் சமுசயமின்றியுண்டாகியும் தேகத்தினிடத் துண்டாகின்ற நானென்னும் பிராந்தியும், ஜகத்தினிடத் துண்டாகின்ற சத்தியத் தன்மையின் பிராந்தியும் எனது புத்தியை விட்டு நீங்காமையால் என்க. ஆதலால் இப்பிராந்தியானது எவ்வளவு காலம்வரை நாசமாகவில்லையோ அவ்வளவு காலம்வரை இதற்கு முன் அநுபவித்து வந்த துக்காநுபவம் நீங்காது. அது நீங்காத போது பரமானந்தவடிவ பிரஹ்மப் பிராப்தியாகிய மோக்ஷம் எப்படி யுண்டாம்? உண்டாகவே மாட்டாது. அதனால் மோட்ச காரணமாயுள்ள அந்த ஐக்கியாநுபூதி அடியேனுக்குண்டாகும் வண்ணம் திருவுளமிரங்கி அருள்புரிவீராக.

குரு உத்தரம்:—மைந்தா! உன்னால் விரும்பப்பட்ட நிரங்குச திருத்தியைத் தரத்தகுந்த ஐக்கியாநுபூதியானது

மேற்கூறப்பட்டுள்ள கூடஸ்த பிரஹ்மங்களை முறையே பஞ்ச கோசங்களினின்றும், பஞ்சபூதாதி சகத்தினின்றும் விவேகித்தலால் உளதாகும். ஆதலால் அவ்விருவகை விவேகங்களையும் உபதேசித்து உனது புத்தியினிடத்துள்ள பிராந்தியைப் போக்குகின்றோம்.

---

## கூ-வது துவம்பதார்த்த விவேகப் பிரகரணம்.

சிஷ்யன் வினவுகின்றான்:—சுவாமி! முன்னர் பஞ்ச கோசங்களினின்று கூடஸ்தனை விவேகிக்க வேண்டுமெனக் கூறினீர். அந்தப் பஞ்சகோசங்கள் யாவை? அவற்றின் விவேகம் எத்தன்மையது? அவற்றை உபதேசிப்பீராக.

குரு உத்தரம்:—மைந்தா! நீ வினவிய பஞ்சகோசங்களையும் அவற்றின் விவேகத்தையும் கூறுகின்றோம் கேள். அந்நமயம், பிராணமயம், மனோமயம், விஞ்ஞானமயம், ஆநந்தமய மென்னும் இவை பஞ்சகோசங்களின் பெயர்களாம். அவற்றுள்,

(க) மாதாபிதாக்களுண்ட அரிசி, கோதுமை முதலிய அந்நத்தா லுண்டாகிய சுக்கில சுரோணிதமென்னும் வீரியத்தா லுற்பத்தியாய்ப் பிறந்தபின் பால் முதலிய அந்நத்தால் விருத்தியடைகின்ற தூலசரீரம் அந்நமயகோசமாம்.

(உ) எந்த வாயு தூலதேகத்திற் பாதமுதற் சிரசுவரை வியானவடிவமாக நிறைந்து நின்று சாமர்த்திய (பல)த்தைத் தருவதாய் நேத்திர முதலிய இந்திரியங்களைப் பிரவிருத்திக்கச் செய்கின்றதோ அந்த வாயு பிராணமயகோசமென்று சொல்லப்படுகின்றது.

(௩) எது தேகத்தில் யான் என்னுந் தன்மை வடிவ அகந்தையையும், வீடு முதலியவற்றில் இது எனது என்னும் அபிமான வடிவ மமதையையுஞ் செய்கின்றதோ அந்த மனம் மனோமய கோசமாம்.

(௪) சேதனத்தின் பிரதிவிம்பவடிவ சிதாபாசனோடு கூடிய புத்தி சுழுத்தியி லொடுங்கியதாய் ஜாக்கிரத்திற் சிரசு முதல் நகம்வரையாகச் சரீரத்தில் வியாபித்து யான் கர்த்தா என்னும் அபிமான முடையதா யிருக்கின்றதோ அந்தப் புத்தி விஞ்ஞானமய கோசமாம்.

(௫) புத்திவிருத்தி ஓர் காலத்து (புண்ணிய கருமத்தின் பலமாகிய சுகத்தை அநுபவிக்குங்காலத்து) அந்தர்முக (ஏகாக்கிர)மாய் ஆன்ம சொரூபமாகிய ஆனந்தத்தின் பிரதிவிம்பத்தை யடைகின்றதோ, புண்ணிய கன்மத்தின் பலாநுபவ மில்லாத மற்றோர் காலத்து நித்திரை வடிவமாக ஒடுங்குகின்றதோ (சமஸ்கார வடிவமாகின்றதோ) அந்த விருத்தி ஆனந்தமய கோசமாம்.

அல்லது, காரணசரீரமாகிய அவித்தையிலுள்ள மலின சத்துவ குணமானது இஷ்ட விஷயத்தைப் பார்த்தலாலும், கைக்கொள்ளுதலாலும், அநுபவித்தலாலும் (பிரிய மோத பிரமோத வடிவங்களாய்) உண்டாகின்ற சுகவிசேஷங்களோடு சேர்ந்து ஆனந்தமய கோசமாகின்றது. இவை பஞ்சகோசங்களின் சொரூபங்களாம்.

ஆனால் இவற்றிற்குக் கோசமென்னும் பெயர் எக்காரணத்தா லுண்டாயிற் றெனில், கத்தியின் உறை முதலியன கத்தி முதலியவற்றை மறைத்தலால் அவற்றிற்குக் கோசமென்னும் பெயர் உண்டாயினாற்போல, இப்பஞ்சகோசங்

களும் ஆன்மாவை மறைத்தலாற் கோசம் என்று கூறப் படுகின்றன.

அப்படியானால், அவை ஆன்மாவை எவ்வாறு மறைக் கின்றன வெனில், முறையே மனிதத்துவம், சாமர்த்தியத் துவம், சங்கற்பத்துவம், கர்த்திருத்துவம், சுகித்துவம் என் னும் அப் பஞ்சகோசங்களின் தர்மங்கள் யான் என்னுஞ் சொற்பொருளாகிய ஆன்மாவின் தாதான்மியமாகிய அபி மானத்தால் அவ்வான்மாவுடன் கலந்து அவ்வான்மாவின் தர்மங்களாக * அதனதன் வியவகார காலத்தில் யான் மனி தன், யான் சாமர்த்தியவான், யான் சத்தியசங்கற்பன், யான் கர்த்தா, யான் சுகி என வியவகரிக்கப்படுதலால் முக்கியார்த் தத் தன்மையாக நின்று மறைக்கின்றன. அப் பஞ்ச கோசங்களின் மறைப்பால் ஆன்மாவினிடத்துச் சமுசார சம்பவம் தோற்றுகின்றது. இச்சமுசார சம்பவம் அவற்றின் விவேகத்தாலன்றி நாசமாகாது. ஆதலால் அக்கோசங்களி னின்றும் ஆன்மாவை விவேகிக்க (வேறுபடுத்த) வேண்டும். அவ்விவேகம் எத்தன்மையதெனில், கூறப்படுகின்றது.

(க) அந்நமயமாகிய தேகம் பிறத்தற்கு முன்னும், மரித்தற்குப் பின்னும் இல்லாமையாலும், அந்நத்தின் காரிய மாதலாலும் ஆன்மா வன்று. அப்படியே,

---

* அன்னமயமாகிய தேக வியவகாரம் வந்த காலத்து யான் தேகம் என தேகாத்தியாசம் உண்டாகிறதில்லை. அதன் தர்மமாகிய மனிதத்தன்மை மாத்திரம் அத்தியஸ்தமாய் யான் மனிதன் என ஆன்மாவை மறைக்கின்றது. இப்படியே மற்றக் கோசங்களிலும் அதனதன் தர்மமாத்திரம் ஆன்மாவிடத்து அத்தியஸ்தமாய் மறைத் தல் காண்க.

(உ) பிராண மயமாகிய வாயுக் கடம்போல ஜடமாயிருத்தலும்,

(ங) மனோமயமாகிய மனம் காமாதி விருத்திகளால் விகாரியாகுதலும்,

(ச) விஞ்ஞான மயமாகிய புத்தி ஜாக்கிரத்தில் தேக முழுவதிலும் வியாபித்துச் சுழுத்தியி லொடுங்குவதாகிய விலயாவஸ்தையை அடைதலும்,

(ரு) ஆனந்த மயமாகிய புத்தி விருத்தி, அல்லது அவித்தியா விருத்தியானது புண்ணிய கருமத்தின் பலம் அநுபவிக்குங் காலம், அல்லது நித்திரைக்காலம் ஆகிய ஒவ்வொரு காலத்தில் மாத்திரம் இருத்தலும் ஆகிய இவ் வேதுக்களால் ஆன்மா வல்ல வென்றறிக.

அப்படியானால் இப் பஞ்சகோசங்கள் தாமே அறியப் படுகின்றன. அறியப்படுகின்ற விவற்றை ஆன்மா வல்ல வென்று கூறின் இவற்றிற்கு வேறாக ஆன்மா தோற்றாமை யால் இல்லை. அதாவது சூனியமே ஆன்மாவா மெனின் பஞ்ச கோசங்கள் தாம் விளங்குகின்றன என்று நீ கூறியது உண்மைதான் என்றாலும் இப் பஞ்சகோசங்கள் எந்த அநு பவத்தால் அநுபவிக்கப் படுகின்றனவோ அந்த அநுபவம் யாவராற் றடுக்கப்படும். ஒருவராலும் தடுக்கப்படமாட் டாது. ஆதலால் அத் தன்மையாயுள்ள எந்தச் சிற்சொரு பத்தால் இக் கோசங்களின் அநுபவ முண்டாகின்றதோ அந்தச் சித்து வடிவ ஆன்மாவே உனது உண்மை வடிவ மென்றறிக.

அப்படி யானால் அப்பஞ்ச கோசங்களை யறிகின்ற ஆன் மாவினிருப்பு எவ்விதத்தா லறியப்படுகின்ற தெனில், அந் நுவய வெதிரேகங்களா லறியப்படுகின்ற தென்க. அவ் வந்நுவய வெதிரேகங்கள் யாவையெனில், கூறப்படுகின்றது.

அந்நமய கோச விவேகம்: சொப்பனுவஸ்தையில் நீ வறியனாய் பசிவேதனை பொறுக்க முடியாமல் அவ் வேதனை யைப் போக்கும் பொருட்டு அந்நம் யாசிக்க வீடுதோறும் செல்லும் காலத்தில் அச் சொப்பனுவஸ்தையை அறிந்து கொண்டிருந்தது யாது. நீ ஆன்மாவாகக் கருதுகின்ற அந்ந மயமாய்ப் பஞ்சணையில் அசைவற்றுக் கிடந்த தூலதேகமா? அதனின் வேறு? அங்கு நீ அநுபவித்ததைக் கூறுவாயாக.

அங்கு எனது இத் தூலதேகத்தைக் காணேம். ஆத லால் அச் சொப்பனத்தை யறிந்தது இத் தூலதேகத்தின் வேறன வஸ்துதான் என என் புத்திக்கு விளங்குகின்றது.

மைந்தா! நீ கூறிய விது உண்மைதான். ஆகவே அங்கு அச் சொப்பனத்தைச் சாக்ஷிவடிவா யிருந்தறிந்த தெதுவோ அதுவே ஆன்மாவாம். ஆதலாற் சொப்பனத் தில் ஆன்மா விருந்து விளங்குதலால் அவ் விளக்கமானது ஆன்மாவின் அந்நுவயமாம். (இருப்பாம்) அச் சொப்பனத் தில் ஆன்மா விளங்கும்போது தூலதேகம் விளங்காமை அதன் (அத் தூலதேகத்தின்) வெதிரேகமாம். (இன்மை யாம்) ஆகவே சொப்பனத்திலும் அப்படியே சுழுத்தி முத லிய வற்றிலும் இல்லாத தூலதேகம் ஆன்மாவன்று. அநா ன்மாவா மென்றறிக.

இனிச் சொப்பன விவேகம்: எப்படி யெனில், சுழுத்தி யை விட்டெழுந்தவன் சுழுத்தியில் ஒன்று மறியாமற் றூங்

கினேனென்று கூறுதற்குக் காரணமாயிருந்த அஞ்ஞானத்தின் சாக்ஷியாய் அதாவது அஞ்ஞானத்தை விளக்குவதாய் விளங்கிக் கொண்டிருக்கின்றதெதுவோ அதுவே அங்குள்ள வான்மாவின் அந்நுவயமாம். ஆங்கு ஆன்மா விளங்கும் போது வறுமையடைந்து வீடுதோறும் போய் அங்நம் யாசித்த சூக்குமசரீரம் விளங்காமை அதன் (அச் சரீரத்தின்) வெதிரேகமாம். ஆகவே சுழுத்தியிலும் அப்படியே. இனிக் கூறப்படும் சமாதியிலும் இல்லாத சூக்குமசரீரம் ஆன்மாவன்று. அநான்மாவாம்.

ஆனல் இங்குப் பஞ்சகோசங்களை விவேகிக்க வாரம்பித்து அதற்கிடையில் இலிங்க சரீரத்தை விவேகித்தல் பொருத்தமுடையதல்லவே யெனின், அப்படியன்று. அந்த இலிங்க சரீர விவேகத்தாற் பிராணமயம், மனோமயம், விஞ்ஞானமயமென்னும் மூன்று கோசங்களும் ஆன்மாவினின்று விவேகிக்கப்பட்டனவாகின்றன. ஆதலாற் பொருத்தமுடையதன்றன்று. பொருத்தமுடையதேயாம். எக்காரணத்தாலெனில், பிராணமயம் இராஜஸ குணமாத்திரத்தின் அவஸ்தையாயும் மனோமயம் ஞானேந்திரியத்தால் வியவகாரஞ் செய்தலாலும் இச்சைமுதலிய இராஜோகுண விருத்தியோடு கூடியிருத்தலாலும் சாத்துவிக இராஜஸமென்னும் இரண்டு குணங்களின் அவஸ்தையாயும் விஞ்ஞானமயம் சத்துவ குணமாத்திரத்தின் அவஸ்தையாயும் இருத்தலால் வேறு வேறு கூறப்படினும் அம்மூன்று கோசங்களும் அவ்வொரே இலிங்க சரீரத்தின் சத்துவ இராஜோ குணங்களின் அமிசமாயிருத்தலால் அவ் விலிங்க சரீரம் விவேகிக்கப்படுதலால் அம்மூன்று கோசங்களும் விவேகிக்கப்பட்டன வாகின்றமையறிக.

இனிக் காரண சரீர (ஆனந்தமய கோச) விவேகம் எப்படி யெனில், காற்றில்லா விடத்துள்ள விளக்கு அசைவற நிற்றல்போல * சமாதியில் தியேய (தியானிக்கப் படுகின்ற பிரஹ்ம) மாத்திரத்தின் ஆகாரத்தை யடைந்து அசைவற நிற்கின்ற சித்தத்திற்குச் சாக்ஷியாய் ஆன்மா விளங்கிக் கொண்டிருத்தலால் அவ் விளக்கம் ஆன்மாவின் அந்நுவயமாம். அங்கு ஆன்மா விளங்கும்போது சுழுத்தி (அஞ்ஞானம்) தோற்றாமை அதன் (அஞ்ஞானத்தின்) வெதிரேகமாம். ஆகவே சமாதியில் இல்லாத வஞ்ஞானம் ஆன்மாவன்று. அநான்மாவாம். இவ்வாறு பஞ்ச கோசங்களினின்றும் ஆன்மா வேறு பிரித்துக் காட்டப்பட்டது.

மேற்கூறியவாறு தூல சூக்கும சரீர வடிவமாயுள்ள அந்நமயாதி நான்கு கோசங்களையும் விவேகித்து ஆனந்தமய கோச விவேகத்திற் காற்றில்லா விடத்துள்ள விளக்குப்போலச் சமாதியிற் றியேய மாத்திரத்தின் ஆகாரத்தை யடைந்து அசைவற நிற்கின்ற சித்தத்திற்குச் சாக்ஷியாய் ஆன்மா விளங்கிக்கொண்டிருத்தலால் அவ் விளக்கம் ஆன்மாவின் அந்நுவயமா மென்று ஆசிரியர் கூறிய வாக்கியங்களைக் கேட்டவுடனே உபதேசிக்கின்ற விஷயங்களின்

---

* அப்பியாசஞ் செய்கின்ற முதற்காலத்திற் கிரகிக்கப் படுகின்ற தியாதா, தியானம், தியேயம் என்னும் திரிபுடிகளுள் அப்பியாச முதிர்ந்தபோது சித்தமானது தியானிப்பவன் தியானம் என்னும் இரண்டையும் முறையே கிரகியாமல் விட்டுத் தியானிக்கப்படுபொருளாகிய தியேயம் (பிரமம்) ஒன்றையே விஷயஞ் செய்வதாகின்றது. அத் தன்மையாகிய சித்தத்தின் நிலை சமாதி என்று சொல்லப் படுகின்றது.

ஆகாரங்களை அப்போதப்போதே யடையுஞ் சுபாவமுடைய ஏகாக்கிர சித்தத்தை யுடைய சீடனானவன் தனது சித் தத்தை அவ்வாறு அசைவற நிறுத்தியபோது அசைவற்ற வச்சித்தம் தூலத்தன்மையின் விடுபாட்டாற் சேதனத்தி னுகார(நிராகார)த்தை யடைந்தது. அடையவே யந்நிராகார விருத்தியால் சேதனத்தை மறைத்திருந்த ஆவரணம் நாச மாயிற்று. அப்போது நாமரூபமய பரிணம வடிவ விட்சேப மும் ஏகாக்கிரத் தன்மையால் இலயமும் இல்லாமையால் அச் சூக்கும விருத்தியிலுள்ள ஆபாசனுக்கு தனது அதிர்ஷ் டானவடிவ கூடஸ்த சேதனத்தோடு கணப்போது ஐக்கிய முண்டாயிற்று. பாத சாமானுதி காணிய வடிவ அவ் வைக் கிய அநுபவத்தால் ஆசிரியர் கூறியவாறு அந்தக் கரணத் திற்குச் சாக்ஷியாய் விளங்குகின்ற சொப்பிரகாசமாகிய பிரத் தியச் சேதனத்தை (கூடஸ்த வடிவ சச்சிதாநந்த சொரூ பத்தை) அபரோக்ஷமாகத் தரிசித்தனன். இவ்வாறு தரிசிக் கவே அகமும் முகமும் குளிரவும் மலாவு மெழுந்து ஆசிரி யரை வணங்கி ஆண்டவரே தேவரீர் உபதேசித்த துவம் பதார்த்த விவேகத்தால் என்னுடைய நிஜ சொரூபமாகிய கூடஸ்த சைதன்னியத்தை அபரோக்ஷமாகத் தரிசித்தேன். தரிசித்தும் பிரபஞ்சத்திலுள்ள சத்தியத்துவ புத்தி முன் போலவே யிருக்கின்றது. மித்தியாத்துவ ஞான முண்டாக வில்லையே யெனக் கூறினன். அதைக்கேட்ட வாசிரியர் மகிழ்ந்து ஓ உத்தம சித்த முடைய புத்திர சிகாமணியே! இப்பொழுதுகூறிய துவம் பதார்த்த விவேகத்தால் நீ உனது நிஜ சொரூபமாகிய கூடஸ்த சேதனத்தை அபரோக்ஷமா கத் தரிசித்தாயல்லவா? அதனுலே உனது சரீரத்தில் முன் னர் யானென் றிருந்த அபரோக்ஷ சத்திய புத்தி நீங்கிவிட்

டதா அல்லவா? இதனைக் கூறுவாயாக. சுவாமி! தேகத்தி லுள்ள நானென்னும் அபரோக்ஷ சத்திய புத்தி நீங்கி விட் டது. ஜகத்தில் மாத்திரம் அச் சத்தியத்துவ புத்தி நீங்க வில்லை. முன் போல சத்தியமாகவே தோற்றுகின்றது. மைந்தா! ஜகத்திலுள்ள சத்தியத்துவ புத்தி நீங்கி மித்தி யாத்துவ ஞானம் உண்டாதற் கேதுவாகிய தற்பதார்த்த விவேகத்தை இனிக் கூறுகின்றோம். அவ் விவேகத்தால் ஜகத்தில் அபரோக்ஷ மித்தியாத்துவ நிச்சயமும் அத்து வைத பிரஹ்மாநுபூதியும் உளவாம். ஆதலால் அதனையும் ஏகாக்கிர சித்தனா யிருந்து கேளென்று தற்பதார்த்த விவே கத்தைக் கூறத் தொடங்கினார்.

---

## ௰-வது தற்பதார்த்த விவேகப் பிரகரணம்.

சீ—ஞ:—சுவாமி! தேவரீர் முன் பஞ்சகோச விவேக வாயிலாக எனது உண்மை வடிவத்தை யறிவித்தாற்போலப் பூதாதி விவேகத்தால் அகண்டானுபூதியை அறிவிக்க வேண் டுமென, அவ்வாறே யறிவிக்கின்றார். சௌமியனே! (பிரியமுள்ளவனே) சிருட்டிக்கு முன்னே இது (ஜகத்து) ஒரே அத்துவிதிய சத்ரூபப் பிரஹ்மமா யிருந்தது என் னுஞ் சுருதியில் சிருட்டிக்கு முன் ஜகத்திற்குக் காரணமா கிய சத்ரூபப் பிரஹ்மம் கேட்கப் படுகின்றது. அப் பிரஹ் மம் வாக்கிற்கும் மனதிற்கும் விஷய மாகாததாயிருத்தலா லதன் உபாதியைக்கொண் டறியப்படுவதன்றித் தான் மாத் திரமாக அறியப்படுவதன்று. ஆகையாற் பூதபௌதிக ஜகத்து அதன் காரியமாயும் உபாதியாயு மிருத்தலா லப்பூதாதி ஜகத் தின் விவேக வாயிலாக அந்தப் பிரஹ்மத்தை யறிவிக்கும்

பொருட்டுஉபோற்காதத் தன்மையாக வப் பூதாதி ஜகத்தின் சொரூபம் சுருக்கமாகக் காட்டப்படுகின்றது.

அஃதாவது ஆகாயம், வாயு, அக்கினி, ஜலம், பிருதிவி என்னும் இவை பஞ்ச பூதங்களின் பெயர்களாம். சத்தமும், பரிசமும், உருவமும், இரசமும், கந்தமுமாகிய விவை அப் பூதங்களின் குணங்களாம். அவை முறையே ஆகாயத்தில் ஒன்றும், வாயுவில் இரண்டும், அக்கினியில் மூன்றும், ஜலத்தில் நான்கும், பிருதிவியில் ஐந்துமாக குறைந்துங் கூடியு மிருக்கின்றன. எப்படியெனில்,

இனி அக்குணங்களே விளக்கிக்காட்டப்படுகின்றன. முதலாவதாகக் கூறப்பட்ட ஆகாயத்தில் எதிரொலி வடிவ சத்தமாகிய ஒரு குணமிருக்கின்றது. வாயுவில் வீ சீ என்னும் சத்தமும், குளிர்ச்சியும் வெப்பமு மல்லாத பரிசமுமாகிய இரண்டு குணங்களிருக்கின்றன. அக்கினியிற் புகு புகு வென்னும் சத்தமும், உஷ்ணமாகிய பரிசமும், காந்தியாகிய உருவமுமாகிய மூன்று குணங்களிருக்கின்றன. ஜலத்தில் புளு புளு வென்னும் சத்தமும், குளிர்ச்சியாகிய பரிசமும், வெண்மையாகிய உருவமும், மாதுரியமாகிய இரசமும் என நான்கு குணங்களிருக்கின்றன. பிருதிவியில் கட கட என்னும் சத்தமும், கடினத் தன்மைப் பரிசமும், கருமை வெண்மை செம்மை பொன்மை பசுமை புகைமை என்னும் சித்திரவர்ணமாகிய உருவமும், தித்திப்பு, புளிப்பு, உவர்ப்பு, கசப்பு, துவர்ப்பு, கார்ப்பு என்னும் அறுவகை யுருசியு (இரசமு)ம், சுகந்தம் துர்க்கந்தம் என்னும் இரு வகைக் கந்தங்களும் ஆகிய ஐந்து குணங்களிருக்கின்றன. இவ்வாறு பஞ்ச பூதங்களின் குணங்கள் வேறு வேறு பிரித்துக் காட்டப்பட்டன.

இனி அப்பஞ்ச பூதங்களின் காரியமாகிய ஞானேந்திரியங்களின் பெயர், இருப்பிட முதலியன கூறப்படுகின்றன. அவையாவன சுரோத்திரம், துவக்கு, சக்ஷு, சிங்ஙுவை, கிராணம் என்னும் இவை ஞானேந்திரியங்களின் பெயர்களாம். இவ்வைந்திந்திரியங்களும் தூலசரீரத்தின்கண் நிலைத்திருக்கின்றன. எவ்வாறெனில், சுரோத்திரேந்திரியமானது காதின்கண்ணிருக்கின்றது. சத்தமாகிய விஷயத்தைக் கிரகிக்கின்றது. துவக்கிந்திரியமானது தோலின்கண்ணிருக்கின்றது. பரிசமாகிய விஷயத்தைக் கிரகிக்கின்றது. சக்ஷு விந்திரியமானது நேத்திரத்தினிட மிருக்கின்றது. உருவமாகிய விஷயத்தைக் கிரகிக்கின்றது. சிங்ஙுவேந்திரியமானது நாக்கின்கண்ணிருக்கின்றது. இரசமாகிய விஷயத்தைக் கிரகிக்கின்றது. கிராணேந்திரியமானது மூக்கினிடமிருக்கின்றது. கந்தமாகிய விஷயத்தைக்கிரகிக்கின்றது. இந்த ஞானேந்திரியங்களைந்தும் சூக்குமமாயிருத்தலாற் பிரத்தியக்ஷமாக அறியப்படுவனவல்ல. ஆனால் அவை சத்தாதி விஷயங்களைக் கிரகித்தலாகிய காரிய லிங்கத்தால் அநுமித்தறியத் தக்கனவாயிருக்கின்றன. அன்றியும் அவ்விந்திரியங்கள் பெரும்பாலும் வெளிமுகமாக வோடுகின்றன. ஒவ்வொரு சமங்களில் உள் விஷயங்களையும் கிரகிக்கின்றன. எவ்வாறெனில், ஒவ்வொரு காலத்திற் காதை மூடினால் உடலினுள்ளே பிராணவாயுவினாலும் உதராக்கினியினாலும் உண்டாகும் சத்தம் கேட்கப்படுகின்றது. நீர் குடித்தலினாலும் அன்னம் உண்ணுதலினாலும் சீதோஷ்ண வடிவ பரிசம் கிரகிக்கப்படுகின்றது. கண்ணை மூடிய காலத்தில் உள்ளிருள் காணப்படுகின்றது. ஏப்பமிடுங்காலத்தில்

இரச கந்தங்கள் கிரகிக்கப்படுகின்றன. இவ்வாறு இந்திரியங்களுக்கு உள்ளுணர்வு மிருக்கின்றது.

இனிக் கன்மேந்திரியங்களின் பெயரும், தொழிலும், இடமுங் கூறப்படுகின்றன. எவ்வாறெனில், வாக்கு, பாணி, பாதம், பாயு, (குதம்) உபஸ்தம் (குய்யம்) என்னுமிவை அவற்றின் பெயர்களாம். வசனம் (பேசுதல்), ஆதானம் (ஏற்றலிடுதல்), கமனம் (நடத்தல்), விசர்க்கம் (மலநீக்கம்), ஆனந்தம் (இரதிபோகம்) இவ்வைந்தும் முறையே அவற்றின் தொழில்களாம். வாயும், கையும், காலும், மலத்துவாரமும், மூத்திரத்துவாரமும் முறையே அவற்றின் ஸ்தானங்களாம்.

இனி மனத்தின் (அந்தக்காரணத்தின்) காரியம், இடம், உள்ளிந்திரியத் தன்மை முதலியன கூறப்படுகின்றன. மனதிற்கு பத்து இந்திரியங்களையும் பிரேரிக்கும் செய்கை யிருக்கின்றது. அதனால் அம் மனம் அவ் விந்திரியங்களுக்கு அதிபதி யாகின்றது. இருதய கமல மாகிய கோளகத்திலிருககின்றது. அம் மனம் இந்திரியங்களி னுதவியின்றி வெளியிலுள்ள சத்த முதலிய விஷயங்களி னிடத்துச் செல்லும்படியான சுதந்திர மில்லாததா யிருக்கின்றது. அதனால் அது அந்தக் கரணம் அதாவது உள்ளிந்திரியமாம். அம் மனம் பத்து இந்திரியங்களுக்கும் அதிபதி என்னுந்தன்மை விளக்கிக்காட்டப்படுகின்றது. எப்படியெனில், இந்திரியங்கள் சத்த முதலிய விஷயங்களைச் சார்ந்த விடத்து இம் மனது அவ்வவ் விஷயங்களிலுள்ள குண தோஷங்களை விசாரிப்பதா யிருக்கின்றது. அஃதெவ்வாறெனில், ஆன்மா (ஆபாசவிசிட்ட சைதன்னியம்) பிரஹ்மா ஞானத்தின் ஆசிரயமாகிய பிரஹ்மாதாவா யிருத்தலால் எல்லா ஞானங்களி

லும் சாதாரணமா (சமமா) யிருக்கின்றது. நேத்திர முத லிய இந்திரியங்கள் உருவ முதலியவற்றின் ஞானத்தை யுண்டாக்குதல் மாத்திரத்தாற் கிருதார்த்த மாகின்றது. ஆகவே ஆத்துமாவும் இந்திரியமு மாகிய விரண்டினாலும் விஷயங்களிலுள்ள குணதோஷங்களை விசாரிக்குந் தன்மை பொருந்த வில்லை. குணதோஷங்களின் விசாரம் தோற்று கின்றது. அவ்விசாரம் காரணமின்றிச் சம்பவிக்க மாட் டாது. ஆகையால் அவ்விசாரத்திற்குக் காரணமாக பரிசே ஷத்தால் மனமே அங்கீகரிக்கத் தக்கதாம். மேலும் அம் மனமானது பலவித விருத்திகளோடு கூடியதாயிருத்தலால் அவ்விருத்திகளுக்குக் காரணமாகிய சாத்துவீகாதி முக்குண முடையதென் றறியப்படுகின்றது. அஃதெவ்வாறெனில், வைராக்கியம், பொறுமை முதலிய சாந்த விருத்திகள் சத் துவ குணத்தால் உண்டாயினவாம். காமக் குரோதாதி கோர விருத்திகள் இரஜோ குணத்தா லுண்டாயினவாம். சோம்பல், மயக்க முதலிய மூட விருத்திகள் தமோ குணத் தினாலுண்டாயினவாம். ஆகவே சத்துவ குணத்தாலாகிய விருத்திகளால் புண்ணியமும் இரஜோகுணத்தாலாகியவிருத் திகளாற் பாவமும் உண்டாகின்றன. தமோ குணத்தாலாகிய விருத்திகளாற் புண்ணியபாவ மிரண்டும் உண்டாதலில்லை. ஆனால் ஆயுள் வீணாகக் கழிகின்றது. இவ்வாறு மேற் கூறிய எல்லா விருத்திகளிலும் நான் என்னும் அபிமான முடைய ஆபாச விசிட்ட அகங்காரம் அவ் வந்தக்கரண முத லிய அனைத்திற்கும் எஜமானனும் (கர்த்தாவாம்). சத்தி முதலிய குணங்களோடு கூடிய கட முதலாகிய பிரபஞ்ச வஸ்துக்கள் பௌதிகம் (பூதங்களின் காரியம்) என்பது பிரசித்தமாம்.

இனி சத்த சத்துக்களின் விவேகத்திற் கேதுவாகிய சாங்தோக்கிய சுருதியின் அருத்தம் கூறப்படுகின்றது.

"தோற்றுகின்ற சகல ஜகத்தும் சிருட்டிக்குமுன்னே ஒரே அத்துவிதீய சத்தரூபப்பிரஹ்மமாயிருந்தது. நாமரூபங்கள் இல்லவே இல்லை" என்று ஆருணி யென்னும் உத்தாலகாது வசனமிருக்கின்றது. அதனாலே சிருட்டிக்கு முன்னே சுவகதாதி பேதமற்ற சத்துவஸ்து மாத்திரம் இருந்ததெனச் சித்திக்கின்றது. அந்தச் சத்து வஸ்துவில் அம்மூன்று பேதமும் இல்லாமையை அறிவித்தற்காகப் பிரபஞ்ச வஸ்துக்களிலுள்ள அம் மூவகைப் பேதங்கள் காட்டப்படுகின்றன. எவ்வாறெனில்,

ஒரு விருக்ஷத்திற்கு அதன் இலை, புஷ்பம், பழம் முதலியவற்றின்கண் சுவகத பேதமும், வேறு விருக்ஷத்தின்கண் சஜாதீய பேதமும், கல் முதலியவற்றின்கண் விஜாதீய பேதமு மிருக்கின்றன. இம் மூவகைப் பேதங்களும் வஸ்துத் தன்மையாகிய ஒப்புமை பற்றிச் சத்துவஸ்துவி னிடத்தும் இருத்தல் கூடுமென்று அதிகாரிகட் குளதாகும் மயக்கத்தைப் போக்குவதற்காகச் சத்து வஸ்துவின் விசேஷணமாகச் சுருதியில் ஒன்று என்னும் எண்ணுப் பெயரின் விகாரமாகிய "ஒரு" எனவும் தேற்றப் பொருளைத் தரும் "ஏ" யெனவும் துவைத மின்மையை யறிவிக்கின்ற "அத்துவைதம்" எனவும் மூன்று பதங்கள் கூறப்பட்டிருக்கின்றன. அவை முறையே சுவகத பேதத்தையும், சஜாதீய பேதத்தையும், விஜாதீய பேதத்தையும் கண்டிக்கின்றன. எவ்வாறெனில், சத்துவஸ்துவினிடத்துச் சுவகத பேதமில்லை. ஏனில்லை? சத்து வஸ்துவின் அங்கங்களாக

நாமரூபங்கள் இருக்கின்றனவே எனின், நாம ரூபங்களி ரண்டும் சிருட்டிக்குமுன் இல்லை. எதனாலில்லை யெனில், நாமரூபங்களி னுற்பத்தியே சிருட்டி வடிவமா யிருத்த லாற் சிருட்டிக்கு முன் அவற்றி னுற்பத்தி இல்லை. அதனா லே சத்து வஸ்துவானது ஆகாயம்போல அமிச மில்லாத தாம் (நிரமிசமாம்). அதனால் சுவகத பேதமில்லாததாம்.

சஜாதிய பேதம் எதனாலில்லை யெனில், சத்திற்குச் சஜாதிய மாகிய வேறு சத்தில்லை. ஆகையால் அதனாலா கின்ற சுஜாதிய பேதமுமில்லை. அப்படியானால் கடம் இருக்கிறது படம் இருக்கிறது என நாநாசத்தை தோன்று கின்றதே யெனில், அந்த நாநாத் தன்மையாகிய சத்தா பேதம் நாமரூபவடிவ உபாதியினாலாகியதாம். உபாதியினா லாகிய பேதத்தைத் தவிரச் சத்துவிற்கு வேறு சத்தில்லை.

சத்தினிடத்து விஜாதியபேதம் எதனாலில்லை யெனில், சத்திற்கு விஜாதியம் அசத்து. அதற்கு அவ் வசத்தாந் தன்மையினாலேயே பிரதியோகியாதல் சம்பவியாது. அது சம்பவியாதாகவே தன்னை நிரூபிக்கும் பிரதியோகியில் லாத அபாவம் சித்தியாது. அவ் வபாவம் சித்தியாதாகவே சத்து வஸ்துவானது அசத்தின் அபாவத்திற்கு அதாவது அசத்தின் பேதத்திற்கு ஆசிரயமாதல் சம்பவியாது. அத னால் சத்து வஸ்துவினிடத்து விஜாதிய பேதமுமில்லை. அஃ தெவ்வாறெனில்; அந்நியோந்நியா பாவத்தைப் பேத மென் பர். அதாவது ஒன்றினுடைமையாயிருந்து அந்நியத்தை நிஷேதிக்கும் அபாவத்தை அந்நியோந்நியா பாவம் என்பர். அஃது கடம் படமல்ல, படம் கடமல்ல எனவரும். இவ் வாறு கடபடங்களுக்கு அந்நியோந்நியா பாவ மிருக்கின்

றது. கடத்திலிருக்கும் மற்றொன்றின் (படத்தின்) அபாவத்திற்கு அக் கடம் அநுயோகியாம். (ஆசிரயமாம்). அக் கடத்திலிருக்கும் அபாவம் எதனுடையதோ அது (படம்) அவ் வபாவத்தின் பிரதியோகி என்றும் நிரூபகம் என்றும் சொல்லப்படுகின்றது. அபாவ ஞானமானது மேற்கூறிய அநுயோகி பிரதியோகிகளின் ஞானத்தா லுண்டாகிறது. அஃதின்றி உண்டாகிறதில்லை. அவ் வநுயோகி பிரதியோகிகளும் சத்து வடிவமாகவே யிருக்க வேண்டும். ஏனெனில், அபாவமானது அவ்விரண்டின் அதீனமாகவே யிருத்தலாலெனவறிக. ஆதலால் மேற்கூறிய விதமாகச் சத்திற்கு விஜாதீயம் அசத்தெனல் பொருந்தாது.

அப்படியானால் மலடிமகன் போன்ற அசத்து சத்திற்கு விஜாதீயம் ஆகவேண்டாம். தோற்றுகின்ற இப் பிரபஞ்சம் விஜாதீயம் ஆகாதோ வெனில், இப் பிரபஞ்சம் சிருட்டிக்கு முன் அதாவது பிரளயத்திலில்லை. எதனாலில்லை யெனின், 'சிருட்டிக்கு முன் ஒரே அத்துவைத சத்தே யிருந்தது. நாம ரூபங்கள் இல்லவே யில்லை' என்று சாந்தோக்கிய உபநிஷத்தில் உத்தாலக முனிவர் கூறியிருத்தலாலென்க. ஆகவே இப் பிரபஞ்சமும் அசத்தா யிருத்தலால் மேற்கூறிய மலடிமகன் போன்ற அசத்தின் கதியே இதற்குமாமென்க.

மேற்கூறிவந்த விதமாக சுவகதாதி பேதமற்ற ஒரே அத்துவிதீய சத்தாகிய பிரஹ்மம் நிச்சயிக்கப்பட்டது. ஆனால் துவைத மில்லாத சத்து மாத்திரம் இருந்தது என்பதில் பிரமாணமுண்டா வெனில், "பிரளய காலத்தில் நிச்சலமும் அதாவது கிரியை யில்லாததும், கெம்பீரமும் அதாவது மனதினால் விஷயஞ் செய்யத் தகாததும், தேயுவல்லாததும்

அதாவது தேயுத்தன்மை ஜாதியின் (சூரியாதிப் பிரகாச வஸ்துக்கள் தேயுத்தன்மை ஜாதியின் அதிகரணமாயிருத்தல் போல)" அதிகரண மாகாததும், இருளாகிய அஞ்ஞானத் திற்கு விலக்ஷண மாகியதும் அதாவது ஆவரண மின்றிய சுபாவ முடையதும், வியாபகமும், வாக்காற் சொல்லக்கூடா ததும், பிரகட மில்லாததும் அதாவது நேத்திர முதலிய இந்திரியங்களுக்கு விஷயமாகாததும், சத்தும் அதாவது சூனியத்தின் விலக்ஷணமும், இதனாலேயே இஃது எனும் தன்மையாற் சொல்லப் படாததுமாகிய வஸ்து எதுவோ அது மிஞ்சி யிருக்கின்ற தென்று ஸ்மிருதி கூறுகின்றது. அப்படியானால் இவ்வாறிருக்கும் வஸ்துவை எவ்வா றறியக் கூடுமெனின், சுகமும் துக்கமுமாகிய இரண்டி னனுபவமு மில்லாத உதாசின காலத்தில் அஃது அநுபவிக்கப் படுகின்ற தென்க. சுகானுபவமும் துக்கானுபவமு மில்லாத உதாசின காலத்தில் சூனியமே யநுபவிக்கப் படுகின்றதெனில், அச் சூனியத்தின் அநுபவம் சாக்ஷியின்றியதா? அல்லது சாக்ஷி யுடையதா? என இரண்டு விகற்பஞ் செய்யின் முதல் விகற் பம் பொருந்தாது. எதனாலெனில், சாக்ஷியின்றிய சூனியத் தின் அநுபவம் அப் பிரசித்த மாதலால் அப்படி யல்ல. இரண்டாவதென்று கூறின், அச் சூனியத்தின் சாக்ஷி எது வோ அதுவே சத்து வஸ்து எனச் சித்தித்தது. இவ்வாறே சிருட்டிக்கு முன்னும் சத்தாகிய பிரஹ்மம் ஞானவடிவமாய் விக்ஷேபம் அதாவது தூல சூக்குமப் பிரபஞ்சமில்லா திருக் கின்றது. இப்படி யிருக்கின்ற சத்து வஸ்துவினிடத்து மித் தையும் காரியத்தாலறியப்படுவது மாகிய ஒரு சத்தி யிருக் கின்றது. அச் சத்தியானது சத்து வஸ்துவு மன்று. அதற்கு மாறானது மன்று. இவ்வாறு கூறியதால் என்ன சித்திக்

கிற தெனில், சத்துவஸ்து வல்லாமையால் சத்தன்று. அதன் மாறல்லாமையால் மலடிமகன் போன்ற அசத்துமன்று. வேறெத் தன்மைய தெனில், சத்தின் வேறும் அசத்தின் வேறுமாகிய அநிர்வசனீயமாம் என்பது சித்திக்கின்றது. இவ்வாறே சுருதியிலும் "பிரளய காலத்தில் அசத்து மிருந்ததில்லை, சத்து மிருந்ததில்லை. மற்றியாதிருந்ததெனில், இருளாகிய அஞ் ஞானமே யிருந்தது" என்று அஞ்ஞான வடிவ மாயைக்கு சத்து வடிவம் அசத்து வடிவம் இரண்டும் நிஷேதிக்கப்பட்டிருத்தலால் அவ் விரண்டிற்கும் வேறாகிய வடிவம் அருத்தா பத்தியாற் கூறப்பட்டிருக்கின்றது. அத் தன்மையாகிய சத்தி சத்துவஸ்து முழுவதிலு மிருக்கிறதா அல்லது ஏகதேசத்தி லிருக்கிறதா வெனில், சத்துவஸ்து முழுவதிலு மில்லை. கடத்தை யுண்டாக்கும் சத்தி பூமி முழுவதிலு மில்லாமற் களிமண் வடிவ ஏகதேசத்தி லிருத்தல் போல ஏகதேசத்தில் இருக்கின்றது. இவ்வாறே சுருதியும் "பரமாத்மாவிற்கு எல்லாப் பூதங்களும் ஒருபாத (பாக)மாம். மற்ற மூன்று பாகம் சொப்பிரகாசமாம்" என்று மாயையினது ஏகதேசத் திருத்தலைக் கூறுகின்றது.

மேற்கூறியவாறு சத்துவஸ்துவின் ஏகதேசத்தில் மாயை யிருக்கின்ற தென்று கூறின், சத்துவஸ்துவின் நிரவயவத் தன்மைக்குக் கேடுண்டாமே யெனின், சுருதியானது கேட்பவனாகிய அதிகாரியின் ஞானமும் மோக்ஷமு மாகிய இதத்தை இச்சிப்பதாய் இருத்தலால் பிரஹ்ம முழுவதிலும் மாயை யிருக்கின்றதா ஏகதேசத்தி லிருக்கின்றதா வென்று கேட்கின்ற அவன் வினாவை யநுசரித்து நிரவயவப் பிரஹ்மத்தில் அவயவத்தைக் கற்பித்து விடைகூறுகின்ற தென்க,

இவ்வாறு சத்துவஸ்துவின்கண் மாயையாகிய சத்தியின் கற்பித இருப்புக் கூறப்பட்டது. இனி சத்தாகிய பிரஹ்மமும் பஞ்ச மகா பூதங்களும் விவேகிக்கப் படுகின்றன. எவ்வாறெனில்,

சத்தாகிய பிரஹ்மத்தை ஆசிரயித்திருக்கின்ற அச் சத்தியானது அச் சத்து வஸ்துவினிடத்து வேறு வேறு விதமாகிய காரியங்களைக் கற்பிக்கின்றது. எதுபோலெனில், சுவரின்கணுள்ள சிவப்பு முதலிய நிறங்கள் அச் சுவரின்கண் பலவித சித்திரங்களைக் கற்பித்தல் போலவென வறிக.

அக் கற்பித காரண சத்தியால் சத்து வஸ்துவினிடத்துக் கற்பிக்கப்பட்ட முதல் விகாரம் (காரியம்) ஆகாயமாம். அந்த ஆகாயம் அவகாச சொரூப முடையதாம். அவ்வாகாயத்தின் இடத்து ஆகாய மிருக்கிறது என்று பிரஹ்மத்தின் சத்துத் தன்மை யநுபூத மாகின்றது. ஆகாயத்தில் சத்தின் அநுபூதத் தன்மையைக் கூறியதனாற் பயன் யாதெனில், அவ் விருவகை வஸ்துக்களின் பேத மறியப் படுகின்றதென்க. எவ்வாறெனில், சத்து வஸ்துவானது ஒரு சுபாவமுடையது. ஆகாயம் இரண்டு சுபாவ முடையது.

இனி அச் சுபாவங்களை விளக்கிக் காட்டப் படுகின்றன. சத்தினிடத்து அவகாச மில்லை. தன்னியல்பாகிய சத்துத் தன்மை யொன்று மாத்திர மிருக்கின்றது. ஆகாயத்தில் சத்தை வடிவ சத்தியல்பும் அவகாச வடிவ தன்னியல்புமாகிய விரண்டியல் பிருக்கின்றன. சத்தி லோரியல்பும் ஆகாயத்தில் இரண்டியல்பும் இருத்தல் வேறு விதமாகவுங் காட்டப்படுகின்றது. எவ்வாறெனில், எதிரொலி வடிவ சத்தம் ஆகாயத்தின் குணமாம். அச் சத்தம் சத்துவஸ்துவிற்

காணப்படுகிறதில்லை. சத்துத் தன்மை யொன்று மாத்திர மிருக்கின்றது. ஆகாயத்தில் சத்துத் தன்மையும் சத்தத் தன்மையு மாகிய விரண்டு தருமங்க ளிருக்கின்றன. இதனு லும் சத்துவஸ்து ஒரு குணமுடையதாம். ஆகாய மிரண்டு குணமுடையதாம். அப்படி யானல் (ஆகாயமானது சத்து வடிவ பிரஹ்மத்தின் காரியமாகு மானல்)

காரணமாகிய பிரஹ்மத்தின் சத்துத் தன்மையானது, காரியமாகிய ஆகாயத்தின் தருமம் போல ஆகாய மிருக்கிற தென்று ஆகாயத்தி னிடத்துத் தோற்றுவானே னெனில், எந்த மாயா சத்தியானது சத்து வஸ்துவினிடத்து ஆகா யத்தைக் கற்பிக்கின்றதோ அந்தச் சத்தி முதலிற் சத்து ஆகாயங்களின் கற்பித தாதான்மிய சம்பந்தமாகிய அபே தத்தைக் கற்பித்துப் பின்பு அவற்றின் தரும தருமித் தன் மைகளை மாறுக அதாவது தருமியைத் தரும வடிவமாகவும் தருமத்தைத் தருமி வடிவ மாகவும் கற்பிக்கின்றது. அத ஞலே ஆகாயத்தினிடத்து சத்தியத் தன்மை யுணர்ச்சி பொருந்துகின்ற தென்க. ஆனல் அந்த மாயை மாறுக எப்படிக் கற்பிக்கின்ற தெனில், சத்து வஸ்துவானது ஆகா யத் தன்மையை யடைந்திருக்கிறதாக இலௌகிகர்கள் நிச்ச யிக்கின்றார்கள். சாஸ்திரிகளாகிய தார்க்கிகர்கள் ஆகாயத் திற்கு சத்தியத்தன்மை யுண்டென நிச்சயிக்கின்றார்கள். இவ்விதமாகிய நிச்சயங்களே அச் சத்தியின் கற்பனை யென் றறிக. ஆனல் இவ்வாறு ஒன்று மற்றொன்றாகத் தோற்று தல் பொருத்தமுடையதல்லவே யெனில், அவ்வாறு மாறு கத் தோற்றுதற்குக் காரணமாதல் மாயைக்கு இயற்கையே யாமென்க. இவ்வித விபரீதத் தோற்றத்திற்கு மாயை

காரணமா மென்பது உலகப் பிரசித்த திருஷ்டாந்தத்தாலும் காட்டப்படுகின்றது. எவ்வா றெனில், இப்பியின் யதார்த்த வடிவம் பிரத்தியக்ஷமாகிய பிரமாணத்தால் அறியப்படுகின்றது. அதன் அயதார்த்த வடிவமாகிய வெள்ளி பிராந்தியினாற் றோற்றுகின்றது. இத் திருஷ்டாந்தம் சகல ஜனங்களிடத்தும் பிரசித்தமாம். இவ்வாறு பிராந்தியினாற் றோற்றுகின்ற விபரீதத் தன்மை காட்டப்பட்டது.

இனி யந்த விபரீதத் தோற்றத்தின் நிவிருத்தி யுபாயம் அதாவது சத்து ஆகாயங்களின் விவேகம் காட்டப்படுகின்றது. எவ்வா றெனில், ஆகாயமும் சத்து வஸ்துவும் வேறு வேறாம். எதனாலெனில், சத்த வேற்றுமையால். அதாவது அவ்விரண்டு சொற்களும் கை யென்னும் ஒரு பொருளை யுணர்த்தும் கரம், பாணி என்னும் பரியாயப் பெயர் போலாகாமல் வேறு வேறு பொருள்களை யுணர்த்தும் வேறு வேறு தன்மையுடையனவா யிருத்தலா லெனவறிக. மேலும் அவ் விரண்டிற்கும் பெயர் வேற்றுமையால் மாத்திரம் பேதமென்றில்லை. அவற்றின் ஞானத்தின் பேதத்தாலும் அவ் விரண்டும் வேறுவேறாம். அஃதெப்படி யெனில், வாயு முதலிய நான்கு பூதங்களிலும் வாயு விருக்கிறது, தேயு விருக்கிறது, அப்பு இருக்கிறது, பிருதிவியிருக்கிறது என்று சத்து வஸ்து அநுசூதமா (உள்ளீடா)ய் விளங்குகின்றது. ஆகாயமவ்வாறு அநுசூதமாய் விளங்குகிறதில்லை. ஆதலால் இத் தன்மைய வாகிய ஞானத்தினாலும் பேதமாதல் கண்டு கொள்க.

இனி அவ் வாகாயச் சத்துக்களில் பிராந்தியினாற் றோற்றுகின்ற தரும தருமித் தன்மைகளை விசாரத்தினாற் போக்கி

அவற்றின் எதார்த்த மாகிய தன்மைகள் திருஷ்டாந்த வாயிலாக விளக்கிக் காட்டப்படுகின்றன. எவ்வாறெனில், அதிக தேச (வியாபகதேச)த்திலிருக்கும் பொருள் ஆசிரயத் தன்மையால் தருமியென்று சொல்லப்படுகின்றது. அற்ப தேசத்திலிருக்கும் பொருள் ஆசிரிதத் தன்மையால் தருமமென்று சொல்லப்படுகின்றது. எப்படியெனில், சத்த முதலிய குணங்கள் தம்முட் பேத முடையனவாய்க் கடம் என்னும் ஒரு திரவியத்தை ஆசிரயித்தலாற் றரும (குண)ங்களாகின்றன. கடமாகிய திரவியமானது மேற்கூறிய சத்தாதி குணங்களில் எல்லா மநுசூதமா யிருத்தலாற் றருமிபா (ஆதாரமா) கின்றது. இத் திருஷ்டாந்தம் போலச் சத்து வஸ்துவானது ஆகாயம், வாயு, தேயு, அப்பு, பிருதிவி என்னுமெல்லாப் பூதங்களிலும் அநுசூதமா யிருத்தலால் அதற்குத் தருமி (ஆதார)த் தன்மை யிருக்கின்றது. ஆகாயமானது சத்த முதலிய குணங்கள் போலத் தம்முட் பேத முடைய வாயு முதலிய பூதங்களுக்கு வேறாய் அச் சத்து வஸ்துவை யாசிரயித்தலா லதற்குத் தரும (ஆதேய)த் தன்மை யிருக்கின்றதென்றறிக.

அப்படியானால், கடமாகிய திரவியத்திற்கு வேறாய் அக் கடத்தை யாசிரயித்திருக்கிற சத்த முதலிய குணங்களுக்கு வாஸ்தவத்தன்மை யிருத்தல்போலச் சத்து வஸ்துவிற்குவேறாய் அச் சத்து வஸ்துவை யாசிரயித்திருக்கிற ஆகாயத்திற்கும் வாஸ்தவத்தன்மை யிருக்கின்றதல்லவாவெனின், அது பொருந்தாது. எதனாலெனில், அவ் வாகாயத்திற்கு வாஸ்தவத்தன்மை வருந்தியு நிரூபிக்கப்படமாட்டாது. அதனை யங்கீகரியாமல் வாஸ்தவத்தன்மை யிருக்கின்றதென்று கூறின் புத்தியினாலே சத்தினின்றும் பிரிக்கப்

பட்ட காலத்துச் சத்தினின்று நீங்கிய அவ் வாகாயமென்ன சொரூப முடையதாம் சொல்லுவாயாக.

அவ் வாகாயத்தின் வாஸ்தவத்தன்மை தேவரீர் கூறிய வாறு தர்க்கத்தினுலும்நிரூபிக்கப்படமாட்டாதெனல் பொருந் தாது. எதனுலெனில், புத்தியினுலே சத்தினின்றும் வேறு பிரிக்கப்பட்ட காலத்தில் அவ்வாகாயமானது அவகாச சொரூபமுடையதாகின்றது என்று கூறின், அப்போது சத் திற்கு வேறுகிய ஆகாயம் அசத்தாம் (இல்லாததாம்). அவ் வாறின்றிச் சத்திற்கு வேறுகிய ஆகாயத்தை அசத்தெனல் பொருந்தாதென்று கூறுவாயாயின், ஆகாயத்தை சத்திற்கு வேறென்றும் ஒப்பி, அதனை அசத்துமன்று என்று கூறு கின்ற உன் வார்த்தைக்கு வியாகாதம் (முன்னுக்குப் பின் விரோதம்) என்னும் தோஷமுண்டாம். தேவரீர் கூறியவாறு ஆகாயம் அசத்தாயிருக்குமானுல் தோற்றமாட்டாது. அதுவோ தோற்றுகின்றது. தோற்றுகின்ற ஆகாயத்தை அசத்தென்று கூறுதல் பொருந்துமாவெனின், தோற்றுக. அவ்வாறு தோற்றுதல் மாயாகாரியத்திற்கு அலங்காரமாம். அன்றியும், தோற்றுதல் மாத்திரத்தால் எந்த வஸ்துவும் வாஸ்தவமாகாது. எந்த வஸ்துவானது சொரூபமாக இல் லாததாய்த் தோற்றிக்கொண்டிருக்கிறதோ அந்த வஸ்து சொப்பனவஸ்தையில் சொரூபமாக இல்லாததாய்த் தோற் றிக்கொண்டிருக்கின்ற யானை முதலியவற்றைப்போல மித் தையே யாமென்றறிக.

அப்படியானுல் அதாவது கூடவே தோற்றுகின்ற சத்து ஆகாயங்களுக்குப் பேதம் இருக்குமானுல் நியமமாகக் கூடவே தோற்றுகின்ற விரண்டு வஸ்துக்களுக்குப் பேதங்

கண்டதில்லையே (பேதம் இருக்காதே) எனின், ஜாதிக்கும் வியத்திக்கும், தேகிக்கும் தேகத்திற்கும், குணத்திற்கும் திரவியத்திற்கும் பேதம் இருத்தல்போல ஆகாயத்திற்கும் சத்திற்கும் பேதம் இருக்குக. இதிலென்ன ஆச்சரியம்? ஆச்சரிய மொன்றுமில்லை. ஆனுல் ஆகாயசத்துக்களின் பேத மானது மேற்கூறிய விதத்தால் அறியப்பட்டதா யிருந்தா லும் அது என்னுடைய சித்தத்தில் உறுதியடைய வில்லையே யெனில், உனக்கு இச்சத்தாகாயங்களின் பேதத்தினிச்சயம் சித்த ஏகாக்கிர மின்மையா லுண்டாகவில்லையா? அல்லது சமுசயத்தா லுண்டாகவில்லையா? அவற்றுள் முதற்பக்ஷ மாகிய சித்த ஏகாக்கிர மில்லாமையாலெனில், நீ சகுண வஸ்துவையாயினும், நிர்க்குண வஸ்துவையாயினும் தியா னித்து அந்தத் தியானுப்பியாச பரிபாகத்தால் சித்த ஏகாக் கிர முடையவனுவாய். சித்த ஏகாக்கிரமின்மையினுலல்ல. சமுசயத்தாலெனில், பிரமாணத்தினுலும் யுத்தியினுலும் விவேகத்தைச் செய்வாயாக. ஆனுல் மேற்கூறிய அவ் விரு வகை அப்பியாசத்தால் யாதுபயனென்று கேட்கின், அவ் விருவகைச் சாதனங்களாலும் சத்து ஆகாயங்களின் பேதம் அத்தியந்தம் நிச்சயிக்கப்பட்டதாகின்றது. அந்த ஆகாய சத்துக்களின் பேதத்தை நிச்சயித்தலாலும் என்னபயனுண் டாகின்றதெனில், முற்கூறிய தியானத்தினுலும், ஆகாயம் சத்து என்னும் இரண்டும் பின்னமாம். சத்த பேதத்தாலும் ஞான பேதத்தாலுமென்னும் அநுமானப் பிரமாணத்தினு லேனும் அல்லது சுருதிப் பிரமாணத்தினுலேனும் சத்துவஸ் துவானது வாயு முதலியவற்றின் அதிக தேசத்திருப்பதா யிருத்தலாற் றருமியாமென்பது முதலிய யுக்தியினுலும் ஆகாய சத்துக்களின் பேதம் சித்தத்திற் செவ்வையாய்ப்

பதியுங்காலத்து ஆகாயமானது ஒருகாலும் சத்தியமாகாது. ஆனல் எப்போதும் மித்தையாகவே விளங்குகின்றது. சத்து வஸ்துவும் அவகாச முடையதாகா தென்றறிக.

ஆனல் ஆகாயத்தையும் சத்து வஸ்துவையும் மேற் கூறியவிதமாக விசாரித்தலால் யாதுபயன் எனின், ஞானிக்கு ஆகாய மெப்போதும் மித்தியாத்துவ ஞான பூர்வகமாக விளங்குகின்றது. சத்து வஸ்துவாகிய பிரஹ்மம் அவகாச மில்லாமையோடு விளங்குகின்றது. இதுவே அவ் விசாரத் தின் பயனென்றறிக. இவ்வாறு ஆகாயத்தின் மித்தியாத் துவத்தையும் சத்தின் வஸ்துத்தன்மையையும் எப்போதும் சிந்திக்கும் புருஷனுக்கு என்ன உண்டாகின்றதெனில், ஆகா யத்தின் அசத்துத்தன்மையையும், சத்தின் சத்தியத் தன் மையையும் அடிக்கடி அநுபவித்தலாகிய அவ் வாசனைகள் விருத்தியடையுங்காலத்து அந்த வாசனையோடுகூடிய ஞானி யானவன் ஆகாயத்தைச் சத்தியமாகச் சொல்லுவோர்களும் சத்து வஸ்துவின் ஞான மில்லாதவர்களுமாகிய அஞ் ஞானி களைப் பார்த்து ஆச்சரியமடைகின்றான்.

இதுவரையும் ஆகாயத்தினின்று சத்துவஸ்து வேறு பிரித்துக் காட்டப்பட்டது. இனி அவ் வாகாயத்தினின்று விவேகித்த முறையாகவே மற்றைய பூதங்களினின்றும் சத்துவஸ்து விவேகிக்கப்படுகின்றது. எவ்வாறெனில்,

ஆகாயத்தின் மித்தியாத் தன்மையும் சத்தின் சத்தியத் தன்மையும் புத்தியில் வாசனையேறிய பின் இதே மாதிரியாக மற்றையவாகிய வாயு முதலிய நான்கு பூதங்களினின்றும் சத்துவஸ்து விவேகித்தறியத் தக்கதாம். அவ்வாறு விவே கிக்க வாரம்பிக்குங்கால் வாயுவானது ஆகாயத்தின் காரியமா

வதேயன்றி சத்தின்காரியமாகாது. அதனாலே சத்து வஸ்துவானது வாயுவின் காரணமாகாது. காரணமாகாமையால் அகாரண வடிவ சத்துவஸ்துவோடு வாயுவிற்குத் தாதான்மியமாகிய அபேதத்தோற்றம் பொருந்தாது. ஆகையால் வாயுவினின்றும் சத்து வஸ்துவைப் பிரித்தறிதல் பிரயோஜனமற்றதாமென ஆசங்கையுண்டாகின்றது. ஆனால் வாயுவிற்குச் சத்து வஸ்துவோடு நேரே சம்பந்தமில்லாவிடினும் பரம்பரையாகச் சம்பந்தமிருத்தலா லவற்றை விவேகித்தல் பிரயோஜன மற்றதன்று. பிரயோஜன முடையதேயாம். அப்படியானால் அந்த விவேகம் எவ்வாறு செய்யப்படுகின்றதெனில், சத்து வஸ்துவின் ஏகதேசத்திலுள்ளது மாயை. அந்த மாயையின் ஏகதேசத்திலுள்ளது ஆகாயம். அவ்வாகாயத்தின் ஏகதேசத்திலுள்ள வாயு * கற்பிதமாம். இவ்வாறு சத்துமுதல் வாயுவரையாகச் சொல்லப்பட்ட வஸ்துக்களுக்குத் தம்முட் சம்பந்தமிருக்கின்றது. இங்கு அவ்வாயுவிற் காணப்படுகின்ற உலர்த்துதல், பரிசம், வேகம், போகுதலென்னும் இந்நான்கும் வாயுவின் சொந்தத் தருமங்களாம். இவையன்றி அவ் வாயுவிற்குக் காரணங்களாயுள்ள சத்து, மாயை, ஆகாயம் என்பவற்றின் தருமங்களாகிய இருக்கை, மித்தியாத்துவம், சத்தம் என்று சொல்லப்படுகின்ற விசேட தருமங்களும் அவ் வாயுவிலிருப்பனவாகக்

---

* ஆகாயமானது மாயா உபகித சேதனத்திற் கற்பிதமாயிருத்தலா லந்தக் கற்பிதவாகாயம் வேறுகற்பிதத்திற்கு அதிஷ்டானமாதல் பொருந்தாது. ஆகையா லிங்கு ஆகாயமென்னுஞ் சொல்லிற்கு ஆகாய உபகித சேதனம் என்பது கருத்தாகக் கொள்க. இவ்வாறே மற்றெல்லா விடங்களிலு மறிந்துகொள்க.

காணப்படுகின்றன. அவை எவ்வாறு காணப்படுகின்றன வெனில், வாயு விருக்கிறது என்று வியவகரித்தற்கேது வாய வாயுவிற்காணப்படும் சத்துத்தன்மை நித்திய வஸ்து வின் தருமமாம். சத்தினின்று முன் ஆகாயத்தைப் புத்தி யினாற் பிரித்தாற்போல வாயுவை வேறு பிரிக்குங்கால் அத னிடத்துக் காணப்படும் மித்தியாத்துவம் மாயையின் தரும மாம். வீ சீ யென்று வாயுவிற்காணப்படும் சத்தம் ஆகா யத்தின் தருமமாமென்றறிக.

இவ்வாறு கூறின் அதாவது வாயுவில் ஆகாயத்தின் தருமமாகிய சத்த மிருக்கிறதென்று கூறின், இவ் வார்த்தை வியாகாதத்தையடையும். எவ்வாறெனில், முன் ஆகாயத் தின் விவேசனப் பிரசங்கத்தில் வாயு முதலிய பூதங்களிற் சத்து வஸ்து அநுரூதமாகின்றது. அவ்வாறு ஆகாயம் அநுரூதமன்று என்று வாயு முதலியவற்றில் ஆகாயத்தின் அநுரூதத்தன்மை விலக்கப்பட்டிருக்கின்றது. இங்கு ஆகா யத்தின் தருமமாகிய சத்தம் வாயுவிற் காணப்படுகின்ற தென்று அவ்வாகாயத்திற்கு அநுரூதத்தன்மை தேவரீரால் விதிக்கப்படுகின்றது. ஆகவே ஒரு வஸ்துவிற்கு ஒருகாலத்து அநுரூதத்தன்மை யில்லையென்றும் மற்றொருகாலத்து அவ் வநுரூதத்தன்மை யுண்டென்றும் கூறுதலாமெனவறிக.

இங்கேகூறிய அநுரூதந்தன்மையானது எவ்விதத்தா லும் வியாகாதத்தை யடையாது. ஆதலால் இச் சங்கை பொருத்த முடையதல்ல. எப்படியெனில், முன் ஆகாய விவேசனப் பிரசங்கத்தில் விலக்கப்பட்ட வநுரூதத்தன்மை யானது ஆகாயத்தின் சொரூபமாகிய அவகாசத்தினது. இங்கே விதிக்கப்பட்ட அநுரூதத் தன்மையானது, அவ்

வாகாயத்தின் தருமமாகிய சத்தத்தினது. ஆகவே அவகாச மும் சத்தமும் ஒரு பொருளன்று. ஒரு பொருளல்லாமை யால் முன் சொல்லியதற்குப் பின் சொல்லியது விரோதமா காமையறிக.

அது வியாகாத மில்லையானுலாகுக. மேற்கூறியவாறு சத்துவடிவ பிரஹ்மத்திற்கு வேறாய் இருத்தலால் வாயுவிற்கு மித்தியாத் தன்மை யுண்டாகுமானுல் அவ் வியக்தவடிவ மாயையினும் வேறு (வியக்த வடிவமா) யிருத்தலால் மித்தி யாவடிவத் தன்மை யின்மையும் உண்டாகும் எனின், இங் குச் சத்திற்கு வேறாக சொரூப மில்லாமையே மித்தியாத் தன்மைக்குக் காரணமாவதன்றி அவ் வியக்தத் தன்மை காரண மன்று. அந்தத் தத்துவ சொரூபமில்லாமை வியக் தா வியக்தங்க ளிரண்டிலும் சமமாம். அதாவது அவ் வியக் தமாகிய மாயை யெப்படி மித்தையோ அப்படி வியக்த மாகிய வாயுவும் மித்தையாம் என்பதாம்.

அப்படியானுல் அதாவது மாயாசத்தியும் அதன் காரி யமாகிய வாயு முதலியனவுமாகிய அவ் விருவகை வஸ்துக் களுக்கும் தத்துவ சொரூப மின்மை சமான மாகுமாயின் வியக்தா வியக்தத் தன்மையாகிய பேதம் என் உண்டா யிருக்கின்றது? பயனின்றிய அப் பேத முண்டாகவேண் டிய தில்லையே? யெனில், இவ் விடத்தில் எடுத்துக்கொண்ட பிரசங்கத்தில் உபயோக மில்லாமை பற்றி அந்த அசத்தாகிய வியக்தா வியக்தங்களுக்குப் பேத முண்டாகாமற் போக வேண்டாம். அந்தப் பேதத்தின் விசாரம் இவ் விடத்திற் கவசிய மில்லை யாதலால், அஃதிருக்குக. இங்கு எடுத்துக்

கொண்ட பிரசங்கம் சத்த சத்துத் தன்மைகளின் விவேகமா யிருத்தலா லந்தச் சத்த சத்துத் தன்மைகளின் விவேகமே சிந்திக்க வேண்டியதாம். அஃதெவ்வா றெனில், வாயுவி லுள்ள இருக்கிறது என்னும் சத்தமிசம் பிரஹ்மத்தின் வடிவமாம். மிஞ்சிய அமிசங்களாகிய தத்துவ மின்மை (மித்தியாத் துவம்), சத்த முடைமை, பரிச முடைமைகள் வாயுவின் சொரூபமாம். ஆகவே அதிஷ்டானப் பிரஹ்மத்திற்கு வேறாகிய சத்தையின்றித் தோற்றுகின்ற அந்த வாயு ஆகாயத்தைப்போல மித்தையாம். ஆதலால் வாயுவினது இம் மித்தியாத் துவத்தை முமுக்ஷு வானவன் நெடுங்காலம் (அதாவது புத்தியில் நிலைபெறு மளவும்) நிச்சயித்து வாயு சத்தியமென்று முன் வைத்திருந்த புத்தியை விடக் கடவன்.

இனி இவ்வாறு வாயுவிற் செய்யப்பட்ட விசாரம் தேயுவிலும் பொருத்திக் காட்டப்படுகின்றது. அஃது வருமாறு. மேற் கூறிய வாயுவினும் அக்கினி பத்துமடங்கு குறைவானதும் வாயு உபகித சேதனத்திற் கற்பிதமுமாம். இப் பஞ்ச பூதங்களுக்குத் தம்முள் ஏற்றத் தாழ்வு கூறுதல் தேவரீர் கற்பிதமா? பிரமாணத்தாலா? வெனின், பஞ்ச பூதங்களுக்குத் தம்முட் பத்து மடங்கு ஏற்றத் தாழ்வுடைமை கற்பிதமன்று. புராணங்களிற் கூறப்பட்டிருக்கின்றது. இனி அவ் வக்கினி உஷ்ணமும் பிரகாச சொரூபமுமாம். அவ் வக்கினியிலும் வாயுவிற் போல காரணமாகிய சத்து, மாயை, ஆகாயம், வாயு என்பவற்றின் தருமங்களினது அநுகூதத் தன்மை காணப்படுகின்றது. எவ்வாறெனில், அவ் வக்கினியானது இருக்கிறது என்பதாகவும், மித்தியா வடிவினது என்பதாகவும், புகுபுகு வென்னும் சத்தம் உடையது என்ப

தாகவும், உஷ்ணமாகிய பரிச முடையது என்பதாகவும் சொல்லப் படுதலா லென்க. இந் நான்கு தருமங்களும் முறையே சத்துவஸ்து, மாயை, ஆகாயம், வாயுவென்னுங் காரணங்களி னின்றும் வந்தடைந்தனவாம். இந்த இருப்பு, மித்தியாத்துவம், சத்தம், பரிச மென்னுந் தருமங்களோடு கூடிய அக்கினிக்குத் தன் குணம் உருவமாம். இத் தருமங்களுள் இருப்புவடிவ சத்து வஸ்துவினின்றும் அக்கினியையும் அதனிடத்துள்ள மற்றைய தருமங்களையும் புத்தியினாற் பிரித்தறிய வேண்டும். பிரிந்த காலத்தில் சத்திற்கு வேறாகிய அக்கினி அசத்தாதலால் அதன் றருமங்கள் அனைத்தும் அசத்தா மென்க. ஆகையினாலே முமுக்ஷுக்கள் அவ் வக்கினியி னிடத்துள்ள சத்துத் தன்மையை மாத்திரம் புத்தியினாற் கிரகித்து அந்நிய மனைத்தையும் சமுத்திரத்திற் றோன்றுகின்ற அலை திவலை முதலியன போல நிச்சயித்துக் கிரகியாது விடல்வேண்டும். இவ்வாறே மற்றவற்றினுமாம்.

இனிச் சத்துவஸ்துவினின்று ஜலம் பிரிக்கப்படுகின்றது. எப்படியெனில், சத்தினின்று அக்கினி வேறு பிரித்தறியப்பட்டு அதன் மித்தியாத் தன்மை உறுதியாக நிச்சயிக்கப்பட்ட காலத்து அவ் வக்கினியினும் பத்துமடங்கு குறைவாகிய ஜலம் அக்கினி உபகித சேதனத்திற் கற்பிதமென்று விசாரஞ் செய்யவேண்டும். அந்த ஜலத்தி னிடத்துக் காரண வஸ்துக்களின் தருமங்களின் சம்பந்தத்தால் ஜலம் இருக்கிறது, மித்தியா சொரூப முடையது, சத்தமும் பரிசமும் உருவமும் உடையதெனக் காரணங்களின் தருமங்கள் காணப்படுகின்றன. தனது குணம் இரசமாம்.

சத்தினின்று ஜலம் வேறுபிரிக்கப்பட்டு அதனது மித்தியாத் தன்மையும் மேற்கூறியவாறு நிச்சயிக்கப்பட்ட காலத்து ஜலத்திற் பத்துமடங்கு குறைவாகிய பூமியானது ஜல உபகித சேதனத்திற் கற்பிதமா மென்று விசாரஞ் செய்யவேண்டும். அவ் விடத்து அப் பிருதிவியின் மித்தியாத் தன்மையை விசாரித்தற் பொருட்டு அப் பிருதிவியின் தருமங்கள் பிரித்துக் காட்டப்படுகின்றன. எவ்வாறெனில், இப் பிருதிவியில் பிருதிவி யிருக்கிற தென்பதாகச் சத்துத் தன்மையும், மித்தையாக விருக்கிற தென்பதாக மித்தியாத் தன்மையும் கடகட வென்னுஞ் சத்தமும், கடின பரிசமும், கருமை முதலிய உருவமும், மதுர முதலிய இரசமும் என்னுமிக் குணங்கள் அந்நியமாகிய சத்துவஸ்து, மாயை, ஆகாயம், வாயு, தேயு, ஜலமென்னுங் காரணங்களினின்றும் வந்து காணப்படுகின்றன. அப்பிருதிவியின் சுயகுணம் கந்தமாம். இவ்வெல்லாத் தருமங்களினின்றும் சத்தை மாத்திரம் விவேகிக்கவேண்டும். அவ்வாறு சத்துவஸ்துவின் தருமமாகிய இருப்புத் தன்மையை வேறு பிரிக்குமிடத்து பிருதிவியில்லையென்பதோடு கடகடவென்னும் சத்தமும், கடினபரிசமும், கருமை முதலிய உருவமும், மதுரமுதலிய இரசமும், கந்தமுமாகிய தருமங்களும் இல்லையென்னும் நிச்சயமுண்டாகின்றது. பின்பு அப்பூமிமித்தையாகக் காணப்படுகின்றது.

இனிப் பூதங்களின் காரியமாகிய பிரஹ்மாண்டம் முதலியவற்றினின்றும் சத்தை விவேகித்தற் பொருட்டு அப் பிரஹ்மாண்ட முதலியவற்றினில்லைமை காட்டப்படுகின்றது. பூமியினின்று பத்துமடங்கு குறைவாகிய பதினான்கு உலகமாகிய பிரஹ்மாண்டம் பூமியின் மத்தியிலிருக்கின்றது. அர்

தப் பிரஹ்மாண்டத்தின் மத்தியில் அதலம், விதலம், சுதலம், தலாதலம், இரசாதலம், மகாதலம், பாதாளமென்னு மேழும் பூலோகம், புவர்லோகம், சுவர்லோகம், மகாலோகம், ஜன லோகம், தபோலோகம், சத்திய (பிரஹ்ம)லோக மென்னும் ஏழும் ஆகிய பதினுன்கு உலகங்களும் அப்பிரஹ்மாண்டத் தினுள் மேலுங்கீழுமாயிருக்கின்றன. அந்தந்த உலகங்களில் அததற்குரிய பிராணிகளின் சரீரங்களிருக்கின்றன. இவ் வாறு பிரஹ்மாண்டத்தின் நிலை கூறப்பட்டது.

இந்தப் பிரஹ்மாண்டத்திலும், பதினுன்கு உலகங்களி லும், பிராணிகளின் தேகங்களிலும் நின்று சத்துவஸ்து வேறு பிரிக்கப்பட்ட காலத்துச் சத்திற்கு வேருகிய பிரஹ் மாண்ட முதலியன (பிரஹ்மாண்டம் மித்தை அதாவது அசத்து, பதினுன்கு உலகங்கள் மித்தை, பிராணிகளின் தேகங்கள் மித்தையென) மித்தியா வடிவமாகவே விளங்கு கின்றன. இவ்வாறு அப்பிரஹ்மாண்டாதிகள் மித்தையாகத் தோன்றிக்கொண்டிருத்தலினுலே (இம்மித்தியாத்துவ நிச் சயமுடைய ஞானிக்கு) அத்துவைத வஸ்துவினிடத்து ஏதா வது பிரதிபந்தமுண்டாகின்றதோ? ஒரு பிரதிபந்தமுமுண்டா கிறதில்லை. ஆனுல் மேற்கூறிய பூதாதி வஸ்துக்களில் தற் காலமுண்டாகிய மித்தியாத்துவமானது மாறுபடுவதில்லை யோவெனில், ஆகாய முதலிய பூதங்கள் பிரஹ்மாண்ட முத லிய பௌதிகங்கள் ஆகிய இவற்றிற்குக் காரணமாகிய மாயாசத்தியானது உலகத்திற் காணப்படுகின்ற இந்திரஜால வித்தை முதலியவைகளைச்செய்யும் சத்தியுடையவர்களுக்கு வேருக அவ்வச்சத்திகள் இல்லாமைபோலச் சத்திமானுகிய சத்துவஸ்துவிற்கு வேருக இல்லாமையால் அதன் (அம்மா

யாசத்தியின்)காரியமாகிய பூதபௌதிகங்களும் சத்துவஸ்துவிற்கு வேருக இல்லாமையினுலும் உஷ்ண பூமியிலுள்ள கானலினிடத்து ஜலப்பிராந்தி யடைந்தவனுக்கு அப்பிராந்தி நீங்கிய காலத்து ஜலந்தோற்றினும் அதன் உள்ளும் வெளியும் பூரணமாயுள்ள கானலின் ஞானம் அபரோக்ஷமாக (வாஸ்தவத்தன்மையாய்) விளங்கும்போது அதனிடத்து இல்லாமல் விளங்குகின்ற ஜலத்தினிடத்துண்டாகிய மித்தியாத்துவம் மாறுபடாததுபோல பஞ்சபூதாதிகளனைத்தினுள்ளும் புறமும் பூரணமாய் வியாபித்துள்ள சத்துவஸ்துவானது அத்துவைதவடிவாய் விளங்கிக்கொண்டிருக்கும்போது அதனிடத்துப் பரமார்த்தமாகவில்லாமல் பிராந்தி ஞானத்தின் சாதனங்களாகிய இந்திரியாதிகளுக்குத் தோற்றுதலால் அவற்றினிடத்துண்டாகிய மித்தியாத்துவ நிச்சயம் மாறுபடுகிறதில்லை. இவ்வாறு மித்தியாத் தன்மையானது விவேகத்தினுலேனும் தியானத்தினுலேனும் சித்தத்திற்றிடமாக நிச்சயிக்கப்படின் சத்துவஸ்துவினது அத்துவைதத் தன்மையின் ஞானம் ஒருநாளும் மாறுபடுகிறதில்லை.

இனி ஞானியின் வியவகார முதலியவை சங்கை சமாதான பூர்வமாக நிரூபிக்கப்படுகின்றன. எப்படியெனில், பூமி முதலியன அசத்தாகுமானுல் ஞானியினிடத்து வியவகாரம் உண்டாகலாகாது. அநுபவத்தில் அப்படியில்லை. ஞானியினிடத்து வியவகாரமோ காணப்படுகின்றதே. அதுவிரோதமல்லவாவெனில், பூதமுதலியனவாகிய துவைதஜகத்து சத்துவடிவ அத்துவைதத்தினின்றும் வேறுபிரிக்கப்படினும் வேறுபிரிக்கப்படுதலால் மித்தையாயினும் அப்பூத முதலியவற்றில் அதனதன் பிரயோஜனத்தின் பொருட்டுள்ள கிரியை

யாகிய பிரவிருத்தி கேடடைகிறதில்லை. முன் அஞ்ஞான காலத்தநுபவம்போலவே நடைபெறுகின்றது. எதனாலெனில், பிரவிருத்தியும் பிரபஞ்ச விஷயங்களும் வியவகாரிகசத்தை யுடையனவாதலாலென்க. அவ்வாறு சத்துவஸ்து அத்துவைத சொரூபமாயிருக்குமானால் அதற்குமாறாகச் சாங்கியர் முதலிய பேதவாதிகளாற் சொல்லப்பட்ட பேதத்தைக் கண்டிக்கவேண்டாமோவெனில், சாங்கியன் முதலிய வாதிகளாற் பலவித யுத்திகளைக்கொண்டு எங்கெந்தவிதமாக ஜகத்தின் பேதமானது கற்பனைசெய்யப்படுகின்றதோ அந்தந்த விதமாக இந்த ஜகத்தின் பேதமிருக்குக. எதனாலெனில், மித்தையாகிய வியாவகாரிகபேதம் அத்துவைத வாதத்தில் அங்கீகரிக்கப்பட்டிருத்தலால் அந்த வியாவகாரிக பேதம் நிராகரிக்கப்படவில்லையென்க. அப்படியானால் பிரத்தியக்ஷ முதலிய பிரமாணங்களாற் சித்தித்துள்ள வாஸ்தவபேதத்தை முன் ஆகாய முதலியவற்றின் விவேகப் பிரசங்கத்தில் மித்தியாத்துவ புத்தி மாத்திரத்தினால் திரஸ்கரித்தது (அநாதரம் செய்தது) அயுக்தமன்றோவெனின், அன்னியவாதிகளாகிய சாங்கியர் முதலியோர்கள் சுருதிமுதலிய பிரபலப்பிரமாணங்களாற் சித்தித்த அத்துவைதத்தையும் அநாதரஞ்செய்கின்றனர். "பொய்யை மெய்யென்ற மூடர் புண்ணியரென்று புராணங் கூப்பிடுமானால், மெய்யை மெய்யென்ற ஞானிக்குக் குற்றங்கள்விதித்த சாஸ்திரமுண்டோ" என்றபடி அப்பேதவாதிகட்கே கெடுதியில்லாதபோது சுருதியுக்தி அநுபவங்களின் வலியால் அத்தத்துவைதவாதிகளா லொப்பப்பட்டிருக்கின்ற துவைதத்தை யநாதரஞ்செய்யு மத்துவைதிகளுக்கு என்னகெடுதியுண்டாகும்? யாதொரு கெடுதியுமுண்டாகாதென்க. அப்படியானாலும் அதாவது கெடுதியில்லை

யானுலும் அந்தத்துவைதத்தின் அநாதரத்தால் பிரயோஜன மில்லேயே. யாதொரு பிரயோஜனமுமில்லாமல் துவைதமாகிய நாம ரூபங்களே அநாதரஞ்செய்தல் அயுக்தமல்லவோ வெனில், துவைதத்தின் அநாதரம் பிரயோஜனமில்லாததன்று. அவ்வநாதரம் செவ்வையாகப் புத்தியில் நிலேபெறுமாயின் அத்துவைதத்தில் புத்தி நிலேயுடையதாகின்றது. அதனுல் அப்புருஷன் ஜீவன்முக்தனெனப்படுகின்றுனென ஜீவன்முக்திப்பயனும் இப்பிரஹ்ம நிட்டையில் அந்தியகாலத்திலும் நிலேத்துவிதேக முத்தியையடைகின்றுனென விதேக முக்திப்பயனும் முன் உபோற்காதப்பிரகரணத்திற் கூறப்பட்டிருக்கின்றன. ஆகையினுலேயந்தத்துவைதத்தினநாதரம் ஜீவன்முக்தி விதேகமுக்தியாகிய இருவகைப்பிரயோஜனமுடையதாமென்க. அதனேடு அங்குக்கூறிய கிருஷ்ணபகவானது வாக்கியமாகிய அந்தியகாலமென்னுஞ் சொல்லிற்கு இருவகையருத்த மெழுதப்பட்டிருக்கின்றன. எவ்வாறெனின், சத்தாகிய அத்துவைதத்திலும் மித்தையாகிய நாம ரூபங்களிலும் உள்ள அந்நியோந்நிய வைக்கியத்தின் ஞானமாகிய பிராந்தியின் அந்தியகாலமென்றது மேற்கூறிய துவைதாத்துவைதங்களின் பேதஞான முதிக்குங்காலமேயாம். வேறன்று. அல்லது உலகப்பிரசித்தமாகிய வர்த்தமானதேகம்விழுதல் அதாவது தேகத்தினின்றும் பிராணப்பிரதானமாகிய இலிங்கசரீரம் பிரிவதே அந்தியகாலமாயிருக்குக என்பனவாம். எந்தவிதத்தாலும் துவைதாத்துவைதங் (சத்தசத்துக்)களின் விவேகஞானத்தால் நாசமாகியபிராந்தி திரும்ப உண்டாகிறதில்லே. அந்த விவேகஞான முதித்தல் வர்த்தமான தேகம் விழுங்காலத்திலாகுக. அல்லது தேக வீழ்வுக்கு முந்தியகாலங்களிலாகுகவென்பது தாற்பரியம்.

நாசமாகிய பிராந்தி மறுபடியுண்டாகாதென்னும் அவ்வருத்தமே விளக்கிக்காட்டப்படுகின்றது. எவ்வாறெனில்,

இந்தச் சத்தசத்துக்களின் விவேகமுடைய ஞானியானவன் வியாதியில்லாதவனுயாவது அல்லது சித்தாதி ஆசனங்களால் உட்கார்ந்துள்ளவனுயாவது அல்லது பிரஹ்மத்திலிருப்பவனுயாவது அல்லது வியாதியுடைமையாற் பூமியிற் புரளுகின்றவனுயாவது அல்லது மிகுந்த துக்கத்தால் மூர்ச்சித்தவனுயாவது பிராணனை விடுக. எவ்விதத்தாலும் அவனுக்குப் பிராந்தியுண்டாகிறதில்லை யென்க.

அப்படியல்ல. பிராணன் நீங்குங்காலத்தில் மூர்ச்சை முதலியவற்றுற் பிரஹ்மாகார விருத்திவடிவ ஞானம் நசிக்கும். அது நசிக்கவே அந்த ஞானிக்குப் பிராந்தியுண்டாகவே செய்யுமெனின், அப்படியல்ல. ஒருவன் நாள்தோறும் அத்தியயனஞ் செய்யப்பட்ட வேதமானது சொப்பனஞ் சுழுத்தி முதலிய அவஸ்தைகளில் மறக்கப்படினும் மறுநாள் அவன் வேதாத்தியயனஞ் செய்யாதவனுகான். செய்தவனே யாகின்றான். அதுபோல மாணகாலத்தில் தத்துவ அநுசந்தான வடிவ பிரஹ்மாத்தும ஐக்கிய ஸ்மரணமில்லாவிடினும் அவன் ஞானியேயன்றி அஞ்ஞானியாகான். அஞ்ஞானியாகாமையால் அவனிடத்துண்டாகிய ஞானத்திற்கு நாசமில்லை. ஞானத்திற்கு நாசமில்லாமையால் அந்த ஞானத்தால் நாசமாகிய பிராந்தி மறுபடியும் உண்டாகிறதில்லை யென ஆசிரியர்கூறினர்.

இனி ஆசிரியர் உபதேசத்தால் மாணுக்கனுக் குண்டாகிய ஞானத்தின்கிரமம் கூறப்படுகின்றது. மேற்கூறியவாறு ஞானுசிரியர் பூதமாகியவாகாயமுதற் பெளதிகமாகிய தேகம்

வரையுள்ள பிரபஞ்சப் பொருள்களை பிரஹ்ம சேதனத்தி னின்று விவேகி(வேறுபிரி)த்துக் காட்டவே உத்தம சமஸ் காரமுடைய அம்மாணுக்கனுக்கு ஒவ்வொரு வஸ்துக்களையும் விவேகித்துக் காட்டுந்தோறும் அவ்வவ் வஸ்துக்களிடத்தி மித்தியாத்துவ நிச்சயமானது தனது சரீரத்தில் துவம் பதார்த்த விவேகத்தாலுண்டாகிய பிரத்தியக்கு சேதனத் தின் அபரோக்ஷ பலத்தால் நாவிபுலாக நியாயத்தா லுண் டாயிற்று.

பின்னர் பஞ்சபூதாதிகளனைத்தின் உள்ளும் புறமும் பரிபூரணமாய் வியாபித்துள்ள சத்து வஸ்துவானது அத்து வைத வடிவமாய் விளங்கிக்கொண்டிருக்கும்போது அதனி டத்துப் பாமார்த்தமாகவில்லாமற் பிராந்தி ஞானத்தின் சாதனங்களாகிய இந்திரியாதிகளுக்கு மாத்திரம் தோற்றுத லால் அவற்றினிடத்துண்டாகிய மித்தியாத்துவ நிச்சயம் மாறுபடுகிறதில்லையென்று கூறிய இவ் வாக்கியங்களைக் கேட்டவளவே அவனது அந்தக்கரண விருத்தியானது அப் பூதபௌதிகப் பிரபஞ்சப்பொருள்களைக் கிரகியாமல் அந்தக் கரண உபகித சாக்ஷி சேதனமாகிய நான் இப் பிரபஞ்ச உபகித சேதனமாகிய பிரஹ்மம் என்னும் நிச்சயத்தோடு வியாபகத்தையடைந்து அடையவே யந்த வியாபகமாகிய பிரஹ்மாகார விருத்தியாற் பிரஹ்ம சைதன்னியத்தை மறைத்திருந்த ஆவரணம் நாசமாயிற்று. ஆவரணம் நாச மாகவே அந்தப் பிரஹ்மாகார விருத்தியிலுள்ள ஆபாசவடிவ ஜீவனுக்குப் பிரஹ்ம சைதன்னியத்தோடு ஐக்கியமுண்டா யிற்று. * பாதசாமானுதிகரணிய வடிவ அவ் வைக்கியாறு

---

* பாதசாமானுதி கரணியத்தினலாகிய ஐக்கியம் ஆபாசனுக்குத் தனது சொரூபத்தைப் பாதித்தலால் உளதாயதாயும், கூடஸ்த

பவத்தால் நான் பிரஹ்மமென்னும் அபரோக்ஷ ஞானமும் அதனாலே ஜகத்தில் அபரோக்ஷ மித்தியாத்துவ புத்தியும் அதனாலே அந்தக்கரண உபகிதமாகிய கூடஸ்த சேதனத்தின் வேறாகாத பிரஹ்ம சேதனத்தின் அகண்டாநுபவமுமுண்டாயின. இவ்வாறு சீடனுக்கு பிரஹ்மான்ம வைக்கியாநுபூதி யுண்டாகவே இந்த ஞானத்தாற்கிடைத்த தனது சச்சிதானந்த அத்துவைத பரிபூரண சொரூபத்திற்கு அந்நியமாக யாதொருபொருளுங் காணப்படாமையாலும், பரமானந்தமே தனது சொரூபமாக விளங்குதலாலும் அவ்விசார சீலனாகிய மாணாக்கன் நிரங்குசதிருத்தியுடையவனாய் எழுந்து ஞானாசாரியரைப் பலமுறை வலமாக வந்து பணிந்தெழுந்து இரண்டுகைகளையுஞ் சிரமேற் குவித்துநின்று பல வகையாகப் புகழ்ந்து துதித்துக் கூறுகின்றான்.

இவ்வளவு காலமும் அந்நியமாகிய தேகேந்திரியாதிகளை யானென்று மெனதென்றும் நிச்சயித்திருந்தேன். அத்தன்மையாகிய விபரீதநிச்சயமும் அந்த நிச்சயத்தாலுண்டாகிய ஜனனமரணாதி துக்கங்களும் ஆகிய அநர்த்த பரம்பரைகளும் அவற்றிற்குக்காரணமாய் வியாபித்திருந்த அஞ்ஞான

---

பிரஹ்மங்களின் ஞானத்திற்குக் காரணமாயும், அதனால் விஷயி வடிவமாயும் இருக்கின்றது. ஆதலால் அவ் வைக்கியம் துவம்பதார்த்த தற்பதார்த்த விவேகப் பிரகாரணங்களாகிய இவற்றிற் கூறப்பட்டது. பிரஹ்மத்தோடு கூடஸ்தனுக்குள்ள ஐக்கியமானது விஷய வடிவமாகவும் நித்தியமாகவுமிருத்தலால் அவ்விருவகைச் சேதனங்களுக்குமுள்ள முக்கிய சாமானாதி கரணியத்தன்மையால் ஆனந்தவிலக்கணப் பிரகாரணத்தில் ஆனந்தசொரூபத்தின் நித்தியப்பிராப்தங் கூறிய விடத்துக் கூறப்பட்டிருக்கின்றது.

இருட்கூட்டமும் ஆகிய வெல்லாம் இன்று தேவரீருபதே சித்த விவேகமாகிய ஞானசூரியனுல் நாசமாயின. அதனுல் நான் நானேயாயினேன். அதனுற் செய்யவேண்டியவை யெல்லாஞ்செய்து அடையவேண்டியவையெல்லா மடைந் தவனுயினேன் என்று தனக்குண்டாகிய கிருதகிருத்தியத் தன்மையைக் குறிப்பித்தான்.

அதைக்கேட்டு ஆசிரியரானவர் தன்னுற்செய்யப்பட்ட உபதேசம் பயனடைந்ததறிந்து சந்தோஷ சித்தராய் மாணுக்கனுக்குப் பற்பல ஆசிமொழிகள்கூறி "மைந்தா! உனக்குண்டாகிய இந்த ஞானம் மஹாவாக்கிய விசாரத்தா லுண்டாகியதாயிருத்தலால் வேறு எவ்விதத்தாலும் நாச மடையாது. ஆனுலும் சென்ற பல ஜன்மப்பழக்க வாசனை யாற் சந்தேகவிபரீதங்கள் வரக்கூடும். அவற்றைச் சிரவ ணுதி சாதனங்களாற்போக்கித் திடஞானியாய் ஜீவன்முக் தனுய் உன்னிஷ்டப்படி வசிக்கக்கடவாய். அல்லது சஞ்சரிப் பாயாக". வென்றுஞ்ஞாபித்து விடைகொடுத்தனுப்பினுர். உடனே விசாரசீலனெழுந்து ஆசிரியரைவணங்கி விடை பெற்றுக்கொண்டு சென்று பல விடங்களில் ஜீவன் முத்தத் தன்மையோடு சஞ்சரித்துச் சிலகாலஞ்சென்றபின்பு விதேக முத்தியை யடைந்தான்.

இப்பொழுது இந்நூலிலுள்ள பத்துப் பிரகரணங்களா லும்விரித்துப் பலவிதமாக முடிக்கப்பட்டிருக்கின்ற விஷயங் களெல்லாம் முடிந்தது முடித்தலென்னும் உத்தியால்திரட்டி முடித்துக் காட்டப்படுகின்றன. எவ்வாறெனில்,

முதலாவதாகிய உபோற்காதப் பிரகரணத்தில் சீடனை நோக்கி நீ மோக்ஷ சொரூபியாகவே யிருக்கிறுயென்று

ஆசிரியரால் உபதேசிக்கப்பட்டது. அந்த மோக்ஷமானது சர்வ துக்கங்களின் நித்திய நிவிர்த்தி வடிவமும் பரமாநந்த சொரூபப் பிரஹ்மத்தின் நித்தியப்பிராப்தி வடிவமுமாயிருத்தலால் அந்த நித்திய நிவிர்த்தியையுடைய சர்வ துக்கங்களின் நித்திய நிவிர்த்தத்தன்மை துக்ககாரணமாகிய பிரபஞ்சம் அசத்தும் ஜடமும் துக்கமுமாம்என்பது நிரூபிக்கும் வாயிலாக இரண்டாவது முதல் நான்காவதீறுயுள்ள மூன்று பிரகாணங்களாலும் அந்த நித்தியப் பிராப்தியையுடைய பரமானந்தவடிவப் பிரஹ்மத்தின் நித்தியப்பிராப்தத்தன்மை சத்துசித்து ஆநந்தங்களின் இலக்கணங் கூறும் வாயிலாக ஐந்தாவது முதல் ஏழாவ தீறுயுள்ள மூன்று பிரகாணங்களாலும் நிரூபிக்கப்பட்டன. அவ்வாறு துக்கம் நித்திய நிவிர்த்த ரூபமாகவும் பரமானந்த வடிவப் பிரஹ்மம் நித்தியப் பிராப்த ரூபமாகவுமுள்ள (மோக்ஷ சொரூபியா யிருக்கின்ற) மாணுக்கனுக்கு அஞ்ஞான மயக்கத்தாலுண்டாகிய துக்க முடைமையும் பரமானந்தத்தின் விடுபாடும் ஆகிய கற்பித பந்தத்தின் நிவிருத்தி முன்னமே சித்தித்துள்ள நித்திய நிவிர்த்தத்தின் நிவிர்த்தி வடிவமும் முன்னமே சித்தித்துள்ள நித்தியப் பிராப்தத்தின் பிராப்தி வடிவமுமாமென்னும் ஞான வடிவாயிருத்தலால் அந்த அபரோக்ஷ விவேக வடிவ ஞானமும் அந்த ஞானத்தால் மோக்ஷமு முளவாதல் ஒன்பதாவது பத்தாவது பிரகாணங்களாலும் நிரூபிக்கப்பட்டன.

இவ்வாறு எல்லாச் சீவர்களும் மோக்ஷசொரூபிகளாகவே யிருக்கின்றனர். அவ்வாறு மோக்ஷ சொரூபிகளாக விருக்கின்ற ஜீவருக்கு அஞ்ஞான சம்பந்தத்தாற் கற்பிதமாகிய பந்த முண்டாயிருக்கின்றது. அந்த மித்தியாபந்தத்

தைச் சித்தசுத்தியுடைய அதிகாரிகள் இந்நூலிற் கூறிய விதமாகப் பிரஹ்ம நிஷ்ட குருமுகமாக நித்தியா நித்திய வஸ்துக்களை விவேகித்து அந்த அபரோக்ஷ விவேகமாகிய ஞானவாயிலாக மோக்ஷமடையுமாறு சிதம்பர நாமத்தாற் சத்து ரூபமாகவும், சிவப்பிரகாச நாமத்தாற் சித்துரூபமாக வும், முத்தாநந்த நாமத்தால் முன்னும் பின்னும் துக்கசம் பந்தமுடைய விஷயாநந்தம் போலாது சர்வதுக்கங்களினின் றும் நீங்கிய பரமானந்த ரூபமாகவும் எப்பொழுதும் தரிச னம் கொடுத்துக் கொண்டிருக்கின்ற ஞானசாரியர் திரு வருள் புரிக.

## நித்தியா நித்திய வஸ்து விவேகம் சம்பூரணம்.



# பிழை திருத்தம்.

## பாயிரம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 9 | 12 | அவ்விருப்பு | அதனிருப்பு |
| 12 | 5 | மாத்வா | மாத்துமா |
| 13 | 9 | சந்தி | சக்தி |
| 15 | 20 | ளௌனவே | னெனவே |

## நூல்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 6 | 16 | பொருளுற்ற | பொருளற்ற |
| 8 | 12 | மூகஇய | மூக்கிய |
| 13 | 5 | அநர்த்தங்ளு | அநர்த்தங்களு |
| 14 | 11 | உறுயாக்க | உறுதியாக்க |
| 33 | 23 | அசத்தும | அசத்தும் |
| 36 | 19 | இச்யைசாற் | இச்சையாற் |
| 38 | 11 | கததி | கதி |
| 50 | 8 | கின்றன | கின்றது |
| 53 | 16 | களில் | களின் |
| 55 | 16 | மரகச் | மாகப் |
| 57 | 6 | புத்தி(யானது | புத்தியானது |
| ,, | 7 | பிரகாசப்பிர | பிரகாசாப்பிர |
| ,, | 8 | அதன்)விருத்தி | அதன்விருத்தி |
| ,, | 15 | போது(புத் | போதுபுத் |
| ,, | 17 | மாகிய) | மாகிய |
| 58 | 13 | வேரூதலாற் | வேரூதலால் |
| 61 | 7 | இஃதிருந்த | அஃதிருந்த |
| 62 | 11 | விடத்து | விடத்தும் |
| 63 | 25 | ஆசிரிய | ஆசிரய |
| 64 | 16 | காக்ஷி | சாக்ஷி |
| 75 | 9 | வஸ்துவா | வஸ்து |
| 78 | 8 | வாலெனில் | வாறெனில் |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 81 | 26 | யாயும் | யாவும் |
| 82 | 25 | மித்தியாம் | மித்தியா |
| 84 | 17 | உலோகந்தர | உலோகாந்தர |
| 85 | 27 | ஞதாலும் | ஞதலாலும் |
| 86 | 24 | வர்ததகம் | வர்த்தகம் |
| " | 26 | கத்தை | காயத்தை |
| 87 | 2 | வரிக்கும் | வகரிக்கும் |
| " | 9 | செய்தா | செய்த |
| 88 | 6 | பின்றி | யின்றி |
| " | 23 | பொருடை | பொருளுடை |
| 96 | 24 | மிருக | மிருக் |
| 102 | 17 | கற்பிக்கக்க | கற்பிக்க |
| 108 | 16 | கது | தது |
| 109 | 14 | ஞானமும் | ஞானம் |
| 116 | 13 | தைஜஸ | றைஜஸ |
| 117 | 10 | பூசிக்க | புசிக்க |
| 121 | 8 | புறமும | புறமும் |
| 134 | 17 | அதாவது | ஆதலால் |
| 138 | 10 | அதிர்வ்ஷ் | அதிஷ் |
| 141 | 21 | சமங்க | சமயங்க |
| 157 | 4 | வாய | வாய் |
| 159 | 7 | மித்தியாத்துவம்) | மித்தியாத்துவம்) மாயையின் சுபாவம் |
| " | " | சத்தமுடைமை | சத்தமுடைமை ஆகாயத்தின் றருமம் |
| " | " | பரிசமுடைமைகள் | பரிசமுடைமைவாயு |
| 165 | 25 | நாசமாதிய | நாசமாகிய |
| 168 | 25 | தன்மையால் | தன்மையானது |

# அறிவிப்பு.

இப்புத்தகம் வேண்டுவோர்கள் திருநெல்வேலி ஜில்லா கோவிற்பட்டி ஸ்ரீ முத்தானந்தசுவாமி மடத்தில் நேரிலாவது, வி. பி. மூலமாயாவது கிரயத்திற்குப் பெற்றுக் கொள்ளலாம்.